# உங்கள் முதலீட்டைப் பாதுகாத்து அதன் வளர்ச்சியை உறுதிப்படுத்த — எம்சிஐ



சேமிப்பின் சிறப்பு, அனைவரும் அறிந்த ஒன்றுதான். ஆனால் அதை உங்கள் வசதிக்கேற்பச் செய்வதற்கு வகை வகையாய்த் திட்டங்களை அளிக்கிறது — எம்சிஐ. உங்களுக்கு ஏற்றதைத் தேர்ந்தெடுத்துச் சிறந்த முறையில் சேமித்து வளமான வருங்காலத்திற்கு வழி காணுங்கள்.

எம்சிஐ — உங்கள் தொழில் முன்னேற்றத்திற்கும் உதவுகிறது. ஹயர் பர்ச்சேஸ், லீசிங் திட்டங்களையும் இந் நிறுவனம் அளிக்கிறது. உங்கள் தொழில் வளரப் பெரிதும் துணையாய் நிற்கும் இந்தத் திட்டங்கள்.

- வைப்புநிதித் திட்டம் • மாத வருமானத் திட்டம் • மாதாமாதம் வட்டிக்கு வட்டி சேர்த்து வளர்ந்திடும் திட்டம் • குறைந்த தொகை டெபாசிட் செய்து கூடுதல் தொகை தரும் திட்டம்.
- லீசிங் • ஹயர் பர்ச்சேஸ் • டெபாசிட் திட்டங்கள்.

## எம்சிஐ

மதராஸ் கிரெடிட் அண்ட் இன்வெஸ்ட்மெண்ட் லிமிடெட்

பதிவுத்தலைமை அலுவலகம்: 65, கிரீம்ஸ் சாலை, சென்னை - 600 006.
போன்: 8252311, 8278925

கிளைகள்: சென்னை: அண்ணா நகர்: W-110- அண்ணாநகர் மேற்கு, சென்னை – 600040 அடையார்: 80/5 எல்.பி.ரோடு, சென்னை 600 020. காரைக்குடி: 24, மகர நோன்பு அக்ரஹாரம், காரைக்குடி 623 001. போன்: 2545. மதுரை: 183/A-1, வடக்கு வெளி வீதி, மதுரை 625 001. போன்: 38177. கொச்சி: வல்ல நாட் சென்டர், கொச்சி 682 018. போன்: 365880

**சேமிப்பு பாதுகாப்பாக வளரவும் தொழில் வளர்ந்து பெருகவும் — எம்சிஐ**

ACC.NO.10590.


| நவம்பர் 93 | அமுதசுரபி | மலர் : 46 |
|---|---|---|
| ஸ்ரீமுக-கார்த்திகை | எங்கள் தமிழ்மொழி எங்கள் தமிழ்மொழி என்றென்றும் வாழியவே - பாரதியார் | இதழ் : 7 |





● விலை ரூ.5/- ● ஆண்டுச் சந்தா ரூ.60/- ● பதிப்பாளர் : ஏ.வி.எஸ்.ராஜா ● கௌரவ இலக்கிய ஆலோசகர் : என்.வி. சுப்பிரமணியன் ஐ.ஆர்.டி.எஸ்.
● இதழ் ஆப்செட் அமைப்பு : சிவகுமார் ● ஆசிரியர் : கலைமாமணி விக்கிரமன்


## அட்டையில் :

## அமுதசுரபி தீபாவளி மலரைப் படிப்பவர் : கீர்த்தனா

1992 ஆம் வருடத் தீபாவளி மலரை கீர்த்தனா படித்துக் கொண்டிருந்தார். 'சென்ற வருட மலரை இன்னமும் படித்துக் கொண்டிருக்கிறீர்களே?' என்று கேட்டதற்கு 'அமுதசுரபி' தீபாவளி மலரைப் பகுதி பகுதியாகப் படித்து இப்போதுதான் என்னால் முடிக்க முடிந்தது என்று கீர்த்தனா கூறியதோடு, 'இந்த வருட 'அமுதசுரபி' தீபாவளி மலர் எப்போது கிடைக்கும். அதில் என்னென்ன சிறப்பு அம்சங்களைச் சேர்த்திருக்கிறீர்கள்?' என்று நம்மை நோக்கிக் கேட்டார். இது குறித்து ஆசிரியர் விக்கிரமன் அவர்களைக் கேட்டதற்குக் கீழ்கண்ட சிறப்பு அம்சங்களை மலரில் சேர்த்திருப்பதாக அவர் கூறினார்.

★ கோபுலுவின் பல வண்ண அழகிய அட்டைப் படம்.
★ 50 ஆண்டுகளுக்கு முன் அமரர் சில்பி வரைந்த கோயில் சித்திரங்கள் -குறிப்பாக வெள்ளிக் கவசம் அணிவிக்கப்பட்ட பிள்ளையார் பட்டி கற்பக விநாயகர் முகப்பு. சோளிங்கர் நரசிம்மர்; ஆஞ்சநேயர் வண்ண ஓவியங்கள் பூஜை அறையில் பாதுகாக்கப்பட வேண்டிய சித்திரம்.
★ மூன்று தலைமுறை எழுத்தாளர்களின் முத்திரைக் கதைகள்.
★ பேரறிஞர்கள், கல்வியாளர்கள், இலக்கியவாணர்களின். கருத்தோவியங்கள்.
★ தீபாவளி மலர் என்றாலே கவிதைப் பூங்காவின் மணம்
★ தமிழக ஓவியர்களின் கை வண்ணம். ஒவ்வொன்றும் பாதுகாக்கப்பட வேண்டிய பொக்கிஷம். விருந்தின் சிறப்புகளை வர்ணித்துக் கொண்டே போகலாம்.

"இவ்வளவுக்கும் விலை ரூ.35/- தானா?"

"80 ரூபாய்க்கு மேல் விலை வைக்க வேண்டியது. வாசகர்களுக்குச் சுமை கூட்டாமல், சென்ற ஆண்டின் விலையான ரூ.35/-ஐ இந்த மலருக்கும் வைத்துள்ளோம்.

உங்களுக்குத் தேவையான பிரதிகளுக்கு உடனே அருகாமையில் உள்ள 'அமுதசுரபி' ஏஜெண்டிடம் முன்பதிவு செய்து கொள்ளுங்கள்.

அட்டை வண்ணப்படம் மற்றும் தகவல் : யோகா

# இனிமை

'கர்மயோகி'

நாக்கு அறிவது சுவை. ஜீவன் அறியும் சுவைக்கு இனிமை எனப்பெயர். பிறர் தன் திறமையால் பெற்றதைக் கண்டு மனம் பதறுவது பொறாமை. பிறர் தன் திறமையால் பெற முடியாததை அவருக்கு அளிக்க முயல்வது தாராள குணம், பெருந்தன்மை, உதார குணம் எனப்படும். அப்படி அளிப்பதை மற்றவர் பெற்றுப் பலனடைவதைக் கண்டு மகிழ்ந்து ஜீவன் மலர்வதை இனிமை என் கிறோம். உதார குணம் செயல்படுவதால் ஜீவனை இனிக்கச் செய்வது தெய்வம், இறைவன்.

ஒரு தரிசனத்தின்போது அனந்தத்திலிருந்து ஒரு ஜீவன் வெளிவந்து அன்னையை உற்று நோக்கியது என்கிறார். அந்த ஜீவனின் தனிமையை உதார குணம், இனிமை கலந்தது என விவரிக்கின்றார் அன்னை.

இன்பம், துன்பம் என்பதை நாம் அன்றாடம் அறிவோம். சுதந்தரத்தை இழந்த நிலையில் உணர்வு பெறுவது துன்பம் எனவும், சுதந்தரம் பெற்ற நிலையில் உணர்வடைவது இன்பம் எனவும் அன்னை கூறுகிறார்.

தாராள குணம் மலர்ச்சியால் ஏற்படுகிறது. நம் அனுபவத்தின் சாரத்தைக் கிரகித்து தன்னகத்தே பெற்றிருப்பது சைத்திய புருஷன். அனுபவம் மலர்ச்சியளிக்கிறது. அனுபவத்தின் சாரம் இனிமையை அளிக்கிறது. சாரம் சுருக்கத்தால் ஏற்படுகிறது. மலர்ச்சி விரிவான செயல். இறைவன் என நாம் அறிவது மலர்ச்சியும், சுருக்கமும் சேர்ந்ததாகும். இவை எதிரான தன்மைகள். எதிரான தன்மைகள் எப்படி ஒரே இடத்தில் சேர்ந்திருக்கும்?

பிறந்தவன் இறப்பான் என்பது மனித சட்டம். இறப்பில்லாதவன் இறைவன். மனிதன் கண்டமானவன். இறைவன் அகண்டம். எடுத் தால் குறைவது இயல்பு. எடுக்க எடுக்க, குறையாதது அக்ஷ்ய பாத்திரம், இறைவன் அளிப்பது. எதிரெதிரான குணங்கள் சேர்ந் துள்ளதே இறைவன் இயல்பு. எனவே



உதார குணமும். இனிமையும் அவனில் சேர்ந்து உறைகின்றன.

இனிமை தெய்விகமானது. மனிதர்களில் பலரை நாம் அதுபோல் காண்கிறோம். கல்லூரி மாணவன் ஒருவன். சகமாணவர்கள் அவனுடன் பழக, பேச, இருக்க விரும்பு வார்கள். அதற்காக எதையும் விட்டுக் கொடுப் பார்கள். கல்லூரி முடிந்தபின் அவனுடன் நடந்துபோக மாணவர்கள் அவன் வண்டியை சுற்றிக் கொண்டு இருப்பார்கள். சில சமயம் அவன் பஸ் ஏறி அவர்களை அறியாமல் வீட்டிற்குப்போய் வருவான். மாணவர்கள் மணிக் கணக்காக அவனுக்காக காத்திருப்பார்கள். ஏதோ காரணத்திற்காக அவன் நண்பர்களுடன் பேசுவதை நிறுத்திவிட்டால், அவர்கள் மற்ற வர்கள் மூலமும், அவன் பெற்றோர் மூலமும் சிபாரிசு செய்து அவனைப்பேசச் சொல்லிக் கேட்பார்கள். கோயிலுக்குப் போய் அவன்

தன்னிடம் பேசவேண்டுமென பிரார்த்தனை செய்வார்கள்.

ஆபீஸில் வேலை செய்யும் பெண்மணிக்கு இக்குணம் உண்டு. போகுமிடத்தில் யார் குழந்தையையாவது வாங்கி இடுப்பில் ஐந்து நிமிஷம் வைத்துக் கொண்டால், மீண்டும் குழந்தை தாயாரிடம் போக மறுக்கும். ஆபீஸில் இவரை பத்து பேர் சூழ்ந்து கொள்வார்கள். ஒரிரு நாள் பழகியவர்களும் நெடுநாளைய நண்பர் போலவும், உறவினர் போலும் பழகுவார்கள். கொஞ்ச நாள் பழகியவர் வீட்டிலும் சொந்தமாக போய் சமையல் அறையில் உட்கார்ந்து, சாப்பிட வேண்டும் என்று வற்புறுத்துவார்கள். வயதான பெண்கள் சமவயதினர் போல் பழகுவார்கள். வயதில் குறைந்த பெண்கள் கெட்டியாகப் பிடித்துக் கொள்வார்கள். பஸ்ஸில் சில நிமிஷம் பழகினாலும் மற்ற பெண்கள் ஆர்வமாக பேசுவார்கள்.

இனிமையுடையவர்களுடைய குணம் இது. முகத்தில் தெரியும் இனிமையை களை என்றும், செயலில் வெளிப்படும் இனிமையை இராசி எனவும், ஜீவனின் இனிமையை அம்சம் எனவும் வழக்கில் சொல்கிறோம். இனிமை தெய்விக குணம் என்றாலும், அது ஒரு குணம். பொதுவாக உயர்ந்தவற்றைத் தவறான காரியத்திற்குப் பயன்படுத்துவது கடினம். இருந்தாலும் இது ஒரு குணம் என்ற அளவில் ஒரு கருவியாகும். எப்படிப் பயன்படுத்துகிறோம் என்பது மனிதனைப் பொறுத்தது. கடத்தலில் உள்ளவர்கள் அதுபோன்ற தவறான காரியங்களில் ஈடுபட்டவர்களுள் சிலருக்கும் இனிமை இருப்பதுண்டு. அலிப்பூர் ஜெயிலில் ஸ்ரீ அரவிந்தர் கொலையாளிகள் மனதில் கருணையைக் கண்டேன் என்றார்.

இனிமை உயர்ந்தவர்களிடம்தான் காணப்படும் என்பது பொது. யாரிடமும் காணப்படும் என்பது விதிவிலக்கு. பிறப்பு, வளர்ப்பால் தாழ்ந்த குணம் உடையவனிடம் இனிமை இருந்தால், அவன் இனிமை அவனது தாழ்ந்த செயல்களைச் சாதிக்கப் பயன்படும். இது அபூர்வம், என்றாலும் இதுவும் உண்டு.

அழகு, அறிவு, செல்வம், பதவி பொதுவாக உயர்ந்தவர்களிடமும், விலக்காகத் தாழ்ந்தவர்களிடமும் காணப்படும். யாரிடம் காணப்படுகிறதோ, அவர்களுடைய குறிக்கோளே பலிக்கும். இனிமையின் உயர்வு, அவர்களுடைய குணாதிசயங்களை மீறித் தன்னை வலியுறுத்தாது. பிரம்மம் ஜடத்தில் வெளிப்பட்டால், அது பிரம்மத்தின் உயர்வைக் காட்டாது. ஜடத்தின் தன்மையையேமுக்கியமாகக்காட்டும். அதனால் அதற்கு ஜடப்பிரம்மம் என்று பெயர்.

அன்னையை வழிபட ஆரம்பித்ததிலிருந்து நம் வாழ்வில் இனிமை அதிகப்படுவதைக் காணலாம். ஜுரம் வந்தால், போன பிறகு வாய் கசக்கும். வாய்க்கசப்பு நோயைக் குறிக்கிறது. ஆழ்ந்த தியானம் பலித்தபின், சமாதிதரிசனம் செய்தபின், அமைதியை மேற்கொண்ட பின், அன்னை நினைவு தன்னை மீறி எழும்பொழுது, வாயும், வாயில் உள்ள எச்சிலும் சுவையாக இருப்பதைக் காணலாம். இது சைத்திய புருஷன் ஆழத்திலிருந்து வெளிவர முயல்வதைக் காட்டும். இது அன்னையின் இனிமை. இது போன்ற சமயத்தில் யார் மீதாவது நம் கைபட்டால், தொட்ட இடம் இனிப்பதாக அவர்கள் கூறுவார்கள். இனிமை மேலிட்டபின் அவர் பேச்சு கேட்பவருக்கு இனிக்கும்.

அன்னையின் அறையைத் தரிசனம் செய்ய உள்ளே நுழைந்தால் உடலெல்லாம் இனிப்பதை உணரலாம். அன்னையின் சூட்சும உடல் அறை முழுவதும் இருப்பதால் அதன் ஸ்பர்சம் நம் உடலை இனிக்கச் செய்கிறது.

சோகமானவர்கள் அன்னையிடம் தங்கள் சோகத்தைப் பற்றிப் பேசினால், யோகத்தை மேற்கொண்டவர்களுக்குச் சோகத்தைவிட சந்தோஷம் உதவும் என்று அன்னை பதில் சொல்வது வழக்கம்.

ஒரு காரியம் தவறினால், அல்லது பிரச்னை உருவானால் நாம் மனம் உடைந்து கசங்கி விடுகிறோம். காரியத்தை நினைத்தால் மனம் பயத்தால் நிரம்பி, சோகம் வருகிறது. காரியத்தை நினைப்பதற்குப்பதிலாக அன்னையை நினைத்தால் பயம் குறையும். காரியத்தை ஒதுக்கி, அன்னையை மட்டும் நினைத்தால் பயம் திடீரென மறைந்து போகும். இனிமை உற்பத்தியாகும். புன்னகை மலரும். அத்துடன் கெட்டுப் போன காரியம் எளிதில் கூடிவரும். இடுக்கண் வருங்கால் நகுக என்பதன் பொருள் இதுவே. அன்னையின் இனிமையை உணர்வது அன்னை ஞானம்.

நல்ல விசேஷங்களில் நாம் இனிப்பு வழங்குகிறோம். குழந்தைகளைப் பார்க்கப் போனாலும், மகான்களைப் பார்க்கப் போனாலும் இனிப்பு எடுத்துப் போகிறோம். ஆன்மாவின் இனிமையை நாம் இனிப்புப்பண்டங்கள் மூலம் வெளிப்படுத்துகிறோம். மாம்பழத்திற்குப் பழங்களில் சிறந்தது (King of Fruits) எனப் பெயர். இனிமை நிறைந்த பழம் அது. மாம் பழத்திற்கு அன்னையிட்ட பெயர் (Divine wisdom) தெய்விக ஞானமாகும். இனிமை தெய்வம். இனிமையைத் தாங்கி வருதல் தெய்விக ஞானம்.

ஃ

# பூகம்பம் ஏற்படுவது எப்படி?

புஷ்பா தங்கதுரை

சேதங்கள்

*பூகம்பம் எப்படி ஏற்படுகிறது?*

பூமி ஒரு பூரணமான லட்சிய சிருஷ்டி அல்ல! நிறைய குறை பாடுகள் உண்டு! பூமிக்குள் இருக்கும் குறைபாடே பூகம்ப மாக வருகிறது!

*அது என்ன குறைபாடு?*

மண்ணுக்கு அடியில் தோண்டிக் கொண்டே போனால் பாறை வந்து விடு கிறது. இந்தப் பாறை உலகம் முழுதும், மண் விளிம்புக்கு கீழே வியாபித்து உள்ளது! இதைப் பொறுக்குப் பாறை என்று பெயர் வைப்போம்! இந்தப் பொறுக்குப் பாறையில் ஏற்படும் இயக்கங்களே பூகம் பங்கள்!

*இந்தப் பாறை நிலையாக நிற்ப தற்கு அதற்கே வலு கிடையாதா?*

இந்தப் பொறுக்குப் பாறை யின் திண்மை கிட்டத்தட்ட 25 மைல்! இது நமக்கு பெரிய திண்மைதான்! ஆனால் பூமியின் அடர்த்திக்கு இது வெறும் பாறைத் தகடுதான்! இந்தத் தகடு ஒருங்கிணைக்கப் பட்ட தாக பூமி முழுதும் இல்லை. பெரிய பெரிய அளவு பாளங் களாகப் பிரிந்திருக் கின்றன. இந்தப் பிரியும் பகுதி யில் உள்ள இரு பாறைகள் ஒன்றுக்கொன்று உரசும் போதோ, இடம் பெயரும் போதோ பாளங்கள் துடிக் கின்றன. மேலும் கீழுமாக




MANTLE - கடின பாறை - 2900 கி.மீ. திண்மை

CRUST - பொறுக்கு முனை - 59 கி.மீ. திண்மை

CORE - உள்கரு - 3370 கி.மீ. திண்மை



சைஸ்மோ கிராப் கருவி




அது பூகம்பத்தை வரைந்த படம்



பூகம்பம் ஏற்படும் பிரதேசங்கள் வெள்ளையாகக் காண்பிக்கப்படுகிறது.

அசைகின்றன. இந்த இயக்கங்கள்தான் பூகம்பமாகப் பரிணமிக்கிறது.

இந்தப் பாளங்கள் எவ்வளவு பெரியவை?

பாளங்கள் பயங்கரமான விஸ்தீரணம் உள்ளவை! ஒரு பாளம் ஒரு கண்டம் முழுதும் கூட வியாபித்திருக்கும். இவை ஒன்றோடு ஒன்று சேரும் பகுதி தான் ரொம்ப பலவீனமானது. இங்குதான் அடிக்கடி கோளாறு! அதனால் பூகம்பம்!



பூகம்பத்தில் நிலம் பிளக்கிறது.

அப்போது இந்தப் பாளங்களின் பிரிவுகளைக் கண்டுபிடித்து விட்டால் பூகம்பம் ஏற்படும் இடங்களைக் கண்டுபிடித்து விடலாம் என்று சொல்லுங்கள்!

உண்மைதான்! விஞ்ஞானிகள் அதைக் கண்டுபிடித்து வைத்திருக்கிறார்கள்!

எப்படிக் கண்டு பிடித்தார்கள்?

இந்தப் பாளப் பிளவு உள்ள இடங்களில்தான் எரிமலைகள் உள்ளன என்று அறிந்தார்கள்! எனவே எரிமலைகளை வைத்து பாளப் பிளவை ஒரளவு வரைந்து விட்டார்கள்.

பூமியின் எல்லா தேசங்களிலும் இந்தப் பிளவு ஓடுகிறதா?

இந்தப் பிளவு மூன்று கிளைகளாகப் பிரிந்து ஓடுகிறது! இந்த மூன்று கிளைகளில் அகப்பட்ட தேசங்களில் எல்லாம் பூகம்பம் வரும்.

சைல் நாட்டின் நுனி, தென் அமெரிக்க பசிபிக் கடலோரம், மெக்ஸிகோவில் இருந்து கலிபோர்னியா, அதிலிருந்து அலாஸ்கா, ஜப்பான், பிலிப்பைன்ஸ், இந்தோனேஷியா, சீனா, இந்தியா,

## மணமகன் தேவை

Christian Plus two 29/160/3000/ISRO பெண்ணிற்கு Govt/Bankல் பணி புரியும் வரன் தேவை. (1931) ஸ்வயம் வராலயா, 18, ஸ்டேஷன் ரோடு, சென்னை - 33.

வன்னிய குல க்ஷத்ரியர் உத்திரம் M.Sc., M.Phil P.hd. 30/165/பெண் ணிற்கு Engr/Doctor/Professional வரன் தேவை. (1932) ஸ்வயம் வராலயா, 18, ஸ்டேஷன் ரோடு, சென்னை - 33.

வன்னிய குல க்ஷத்ரியர் திரு வோணம் 8th Std 23/155/ பெண் ணிற்கு well employed வரன் தேவை. (1942) ஸ்வயம்வராலயா, 18, ஸ்டேஷன் ரோடு, சென்னை - 33.

காஜூலபலிஜா நாயுடு உத்திரம் MS Bio Engineering of Texas AMM University 25/155 பெண்ணிற்கு வெளிநாட்டில் உள்ள வரன் தேவை. (1945) ஸ்வயம் வராலயா, 7A சாந்தி விஹார் காம்ப்ளக்ஸ், சென்னை - 4.

கம்மா நாயுடு ஸ்வாதி B.Sc., DMLT 26/ 165/2000/ பெண்ணிற்கு Engr. BE/well employed வரன் தேவை. (1946) ஸ்வயம்வராலயா, 18, ஸ்டேஷன் ரோடு, சென்னை - 33.

தெலுங்கு நியோகி காஸ்யப அஸ்வதி M.Sc., B.Ed. 26/155/ பெண் ணிற்கு well employed PG/Professional வரன் தேவை. (1929) ஸ்வயம்வ ராலயா, 18, ஸ்டேஷன் ரோடு, மேற்கு மாம்பலம், சென்னை - 33.

தெலுங்கான்யம் ஸ்ரீவத்ஸ கேட்டை, B.Com., 29/160/1300/ பெண்ணிற்கு பட்டதாரி / Bankல் பணிபுரியும் வரன் தேவை. (1947) ஸ்வயம் வராலயா, 18, ஸ்டேஷன் ரோடு, மேற்கு மாம்பலம், சென்னை- 33.

வடமாள் பராசர கிருத்திகை B.Sc., P.G. DCS 28/160/2300/ AG's Office பெண்ணிற்கு பட்டதாரி C.Govt/ Bankல் பணிபுரியும் வரன் தேவை. (1930) ஸ்வயம்வராலயா, 18, ஸ்டே ஷன் ரோடு, மேற்கு மாம்பலம், சென்னை - 33.

வடமாள் ஸ்ரீவத்ஸ மூலம் B.Com., Doing CA 22/165/ பெண்ணிற்கு P.G. well employed வரன் தேவை. (1936) ஸ்வயம்வராலயா, 18, ஸ்டேஷன் ரோடு, மேற்கு மாம்பலம், சென்னை - 33.

கன்னட ஸ்மார்த்தாவிஸ்வாமித்ர கேட்டை BE 30/155/6000/BEL பெண் ணிற்கு equally qualified well employed வரன் தேவை.(1939) ஸ்வயம் வராலயா, 18, ஸ்டேஷன் ரோடு, மேற்கு மாம்பலம், சென்னை - 33.



## மணமகள் தேவை

வடமாள் கௌதம சித்திரை M.Com., PG DMM 31/176/6000/Ltd Co வரனுக்கு Govt. employed/Bankல் பணிபுரியும் பெண் தேவை. (1950) ஸ்வயம் வராலயா, 18, ஸ்டேஷன் ரோடு, மேற்கு மாம்பலம், சென்னை - 33.

தென்கலை கௌண்டின்ய திரு வோணம் B.Sc., 30/165/MP.St.Govt/ வரனுக்கு Employed Transferable girl தேவை. (1928) ஸ்வயம்வராலயா, 18, ஸ்டேஷன் ரோடு, மேற்கு மாம் பலம், சென்னை - 33.

பிருகசரணம் ஸ்ரீவத்ஸ ஸ்வாதி M.Com., CAIIB PGDCA 31/165/5000 Bank வரனுக்கு well employed பெண் தேவை. (1943) ஸ்வயம்வராலயா, 18, ஸ்டேஷன் ரோடு, மேற்கு மாம் பலம் , சென்னை - 33.

பிருகு சரணம் KASI Gothram பரணி DME DRTM 27/160/5000/C.Rly வர னுக்கு பட்டதாரி C.Rly employed / வேலைக்கு செல்லாத பெண் தேவை. (1941) ஸ்வயம்வராலயா, 18, ஸ்டேஷன் ரோடு, மேற்கு மாம் பலம், சென்னை - 33.

## மணமகன் தேவை

தென்கலை ஸ்ரீவத்ஸ மகம் B.ComICWA final 24/160/2200/Postal Dept. பெண்ணிற்கு CA/PG/BE/well employed வரன் தேவை. (1369) ஸ்வயம்வராலயா, 7A சாந்தி விஹார் காம்ப்ளக்ஸ், லஸ், சென்னை - 4.

தென்கலை கர்க்க திருவாதிரை B.Sc., MBBS 27/160/ பெண்ணிற்கு Professional/BE/MD/CA/ வரன் தேவை. (1371) ஸ்வயம்வராலயா, 7A சாந்தி விஹார் காம்ப்ளக்ஸ், லஸ், சென்னை - 4.

ஆற்காடு முதலியார் பூசம் B.Sc., 33/ 158/ பெண்ணிற்கு நிரந்தர வரு மானம் வரும் வரன் தேவை. (1432) ஸ்வயம்வராலயா, 18, ஸ்டேஷன் ரோடு, மேற்கு மாம்பலம், சென்னை - 33.

பிள்ளை/மேனான் உத்திரட்டாதி B.Sc., B.Ed. M.A., M.Phil 27/158/2000 பெண்ணிற்கு well settled, professional வரன் தேவை. (114) சங்கராலயா, பத்மநாபன் தெரு, வில்லி வாக்கம், சென்னை - 49.

## மணமகள் தேவை

பிள்ளை BE/47/173/5700 C.Govt. (1st Marriage) வரனுக்கு வேலைக்கு செல்லாத பெண் தேவை. (1885) ஸ்வயம்வராலயா, Flat-14, 2nd Floor, Sri Apartments 1-1-780/12. Gandhi Nagar, Hyderabad - 500 380.

Reddiar பூரட்டாதி plus two 30/178/2000/ வரனுக்கு ஏற்ற மணமகள் தேவை. (1927) ஸ்வயம்வராலயா, 18, ஸ்டே ஷன் ரோடு, சென்னை - 33.

சோழிய வெள்ளாளர் SSLC 42/155/ Own Business வரனுக்கு ஏற்ற மண மகள் தேவை. (1937) ஸ்வயம் வராலயா, 18, ஸ்டேஷன் ரோடு, சென்னை - 33.

Jain D.Com 27/158/15,000 Own Business வரனுக்கு Hindi தெரிந்த சைவ பெண் தேவை. Inter Cast also acceptable, (1938) ஸ்வயம் வராலயா, 18, ஸ்டேஷன் ரோடு, சென்னை - 33.

கவராநாயுடு உத்திரட்டாதி AMIE/30/168/5000/self employed வர னுக்கு பட்டதாரி பெண் தேவை. (1940) ஸ்வயம்வராலயா, 18, ஸ்டேஷன் ரோடு, சென்னை - 33.

வடகலை நைத்ருபகாஸ்யப கிருத்திகை B.Tech PGD BA 29/168/ 7000 வரனுக்கு Professional பெண் தேவை. (1370) ஸ்வயம்வராலயா, 7A சாந்தி விஹார் காம்ப்ளக்ஸ், சென்னை - 4.

வடகலை கௌண்டின்ய பரணி B.Com., (M.Com ICWA) 29/180/5000 வரனுக்கு வேலைக்கு செல்லும்/ செல்லாத பட்டதாரி. பெண் தேவை. (1590) ஸ்வயம்வராலயா 7A சாந்தி விஹார் காம்ப்ளக்ஸ், சென்னை - 4.

வடகலை கௌசிக பூரம் B.Com., BL 35/173/Private Practice வரனுக்கு பட்டதாரி வேலைக்கு செல்லும்/ செல்லாத பெண் தேவை. (1626) ஸ்வயம்வராலயா 7A சாந்தி விஹார் காம்ப்ளக்ஸ், சென்னை - 4.

வடமாள் சாண்டில்ய கிருத்திகை B.E. 41/160/5000/ வரனுக்கு பட்டதாரி வேலைக்குச் செல்லும் பெண் தேவை. (1566) ஸ்வயம்வராலயா 7A சாந்தி விஹார் காம்ப்ளக்ஸ், சென்னை - 4.

வடமாள் வாதூல கேட்டை B.A., 3[illegible] 160/1800/ வரனுக்கு சென்னையில் பணிபுரியும் பெண் தேவை. (156[illegible]) ஸ்வயம்வராலயா 7A சாந்தி விஹார் காம்ப்ளக்ஸ், சென்னை - 4.

# மனம் விட்டுப் பேசுவோம்

மலர் அழகா? பேபி ஷாம்லியின் மலர்ந்த முகம் அழகா? என்று சென்ற இதழின் அட்டைப்படம் மயங்கவைத்து விட்டதாம் வாசகர் அன்பின் சபாவுக்கு.

கடையல் வாசகர் செபாஸ்டினுக்கு, கர்ம யோகியின் 'ஏரிக்கரை', படிக்கப் படிக்க அன்னையிடம் பயபக்தியும், ஞான சிரத்தையும் ஊற்றெடுக்கிறதாம்.

'மூன்று முத்தான சிறுகதைகள் (அடிக் கரும்பு கசக்கும், ப்ரியா காவேரியாகி விடக்கூடாது, தலைமறைவு) முக்கனிகளின் சுவையாக இனிக்கிறது' என்று திருமதி சுகந்தி - மதுரை, தமீம் நவாஷ் - கம்பம் போன்ற நிறைய வாசகர்கள் பாராட்டியுள்ளனர்.

'வீட்டு நூலகம்' ஒரு பயனுள்ள பகுதி என்று ஸ்ரீரங்கம் - ரா. ராகவன், கருங்காலி - பி. கார்த்திகேயன் வாழ்த்தி உள்ளனர்.

ரான், துருக்கி, கிரீஸ் ஆகிய தசங்கள் வழியே அந்த ளவுப் பாதை போவதைப் டத்தில் பாருங்கள்!

**தென் இந்தியாவுக்கு பூகம்பம் ராதா!**

தென் இந்தியா பொதுவாக கம்ப வழியில் இல்லை! விந் ய மலைக்கு வடக்கேதான் கம்ப வழி செல்கிறது. னினும் சில காரணங்களால் தற்கேயும் பூகம்பம் சமயங் ளில் வரக்கூடும் என்று விஞ் ானிகள் சொல்கிறார்கள்.

**என்ன காரணங்கள்?**

முதலில் ஒன்றை நினை ல் வைத்துக் கொள்ளுங்கள். லகம் முழுதும் தினமும் ன்று நான்கு இடங்களிலாவது திர்வுகள் ஏற்படுகின்றன. மிக்கு அடியில் ஏதாவது கழ்ந்து கொண்டே இருக் றது. தென் இந்தியா ஒரு ன்மையான பாறைப் பகுதி ல் இருந்தாலும் இந்தப் பகுதி டக்கு நோக்கிப் போய்க் காண்டிருக்கிறது.

**அப்படியா? கண்ணுக்குத் தெரிய ல்லையே.**

இதெல்லாம் ஓராண்டில் நிக ம் நிகழ்ச்சி அல்ல! ஆயிரக் ணக்கான, லட்சம் ஆண்டுக ாக நடப்பதாகும்! இதை விஞ் ானிகள்தான் கண்டு கொள் ார்கள். தென் இந்தியா ல் இருக்கும்பாறைப் பாளம் டக்கே இமயமலையையும் பத்தையும் போய் மோது து.

**ஓ! இமயமலைகள் இந்த மோதலினால் ஏற்பட்டதா?**

ஆமாம்! லட்சக்கணக்கான ஆண்டுகளுக்கு முன் இந்தப் பாளத்தின் மோதல் நிகழ, அங்குள்ள பூமி நெருக்கடி தாங்காமல் விரிவரியாக மேலே எழுந்து விட்டது. அந்த வரிகள் தான் இமயமலைத் தொடர்.

**சரி! இந்தப் பாளம் தெற்கே எப்படி பூகம்பத்தை உண்டாக்கு கிறது! தற்சமயம் மராட்டா மாநிலத்தில் நிகழ்ந்துள்ளதே!**

அதைத்தான் சொல்ல வரு கிறேன். இது வடக்கே போய் மோதுகிறபோது, இந்தப் பாளத்தின் முதுகு லேசாக வில் வளைவு போல் மேலே எழும்புகிறது. இதனால் ஏற் படும் இடமாற்ற அதிர்ச்சி தான் தென்னிந்தியாவில் ஏற் பட்டது. அதுவே மராட்டிய பூகம்பம் என்று அறிஞர்கள் கூறுகிறார்கள்.

**பூமியின் அதிர்ச்சியைக் கண்டு பிடிக்க கருவி இருக்கிறதா?**

இருக்கிறது! ஸைஸ்மோ கிராப் என்பார்கள் இதை!

**என்ன தத்துவத்தில் வேலை செய்கிறது?**

நிலத்தில் நடுக்கம் ஏற்பட் டால் அதிலிருந்து கிளம்பும் அதிர்ச்சி அலைகள் வெவ் வேறு வேகங்களில் வெவ் வேறு திசைகளில் பாய்கின் றன. சில அலைகள் பூமியின் பரப்போடு ஓடுகின்றன. சில சில நீளமாகச் சென்று பூமி யின் உள்வழியே மறுபக்கம் போகின்றன. சில குறுக்கு வழியே ஓடுகின்றன. இவற்றை இந்தக் கருவி கணக்கிட்டு விடுகிறது.

**எப்படி?**

ஒரு சின்ன போஸ்ட்! இதைப் பூமியில் சிக்கெனப் பிடித்திருக்கும். பூகம்பம் நடக்கும் போது இது ஆடும்.

இந்தப் போஸ்டின் ஒரு புறத்தில் ஒரு கனமான எடை கட்டப்பட்டு தொங்கிக் கொண் டிருக்கும்.

போஸ்டின் நடுக்கத்தால் இது பாதிக்கப்படாது, இந்த எடைக்குக் கீழே ஒரு சார்ட் வைத்திருப்பார்கள். போஸ்டில் இந்த சார்ட் இணைக்கப்பட் டிருக்கும்! இது நகர்ந்து கொண்டே இருக்கும் வசதி உள்ளது. பூமியின் நடுக்கத் தின்போது போஸ்ட்டுடன் சேர்ந்து இந்தச் சார்ட்டும் நடுங்குவதால், எடையோடு இணைந்திருக்கும் பேனா இந்தச் சார்ட்டில் கோடுகள் வரையும். (படத்தைப் பார்க்க)



உலகத்தின் வெவ்வேறு பகுதிகளில் வைக்கப்பட்டிருக் கும் இந்த கருவிகள் மூலம் செய்திகளைத் திரட்டி பூகம்பம் நிகழ்ந்ததைக் கண்டு பிடித்து விடுகிறார்கள். எங்கே, எப்போது, எந்த அளவுக்கு அது நடந்தது என்று கூறிவிடுகிறார்கள்.

# கங்காபுரிக் காவலன்

## 5. ஓலையில் வந்த செய்தி

விக்கிரமன்

சோழ வீரர்கள் அணிவகுத்து வடக்குத் திசை நோக்கிப் புறப்பட்டனர். இதுவரையில் அவர்களிடம் இருந்துவந்த குறிக்கோளற்ற போக்கு மாறி, வேற்று நாட்டின்மீது படையெடுத்துச் செல்லும் போது இருக்கும் வேகம், துள்ளல், கம்பீரம், முழக்கம் யாவும் இப்போது நிறைந்திருந்தன.

போருக்குப் போகவில்லை; கங்கை நதிக்கரையில் நீராடிப் பொழுதை நல்ல முறையில் கழிப்பதற்காகச் செல்கிறோம் என்ற உணர்வு மங்கி விட்டது.

கட்டுப்பாட்டிற்கும், கடமை உணர்விற்கும் பெயர் பெற்ற சோழர்ப் படைகளிலும் ஒரிரு ஒற்றர்கள் இல்லாமலில்லை. பாண்டிய நாட்டின்மீது அன்பு கொண்டவர்கள் ஒரிருவர் இல்லாமலில்லை.

நான்கு ஐந்து வீரர்களாகக் கூடிப் பேசும்போது அவர்கள், வேடிக்கைப் பேச்சின் மூலம் சோழ நாட்டைக் குறைகூறத் தவறுவதில்லை. சிரிக்கச் சிரிக்கப் பேசுவதால் அவர்களுடைய சோழ நாட்டின் மீதுள்ள விரோத மனப்பான்மையை எவரும் சந்தேகிப்பதில்லை. அதற்கு மாறாக சங்கன் ரங்கன், என்ற அந்த இரு இளைஞர்களும் தங்கள் சாதுர்யப் பேச்சால், வேடிக்கைப் பேச்சால் இருபொருள் படும்படியான காமரசப் பேச்சால் சக தோழர்களின் கவனத்தைக் கவர்ந்திருந்தனர்.

"நம் அரசர், பழையாறையிலிருந்து செய்தி வருகிறதா என்று ஆவலுடன் எதிர்பார்க்கிறார். அதனால் அவருக்கு ஏக்கமும் அதிகம். அதுபோல் நம் அரையர் இராசராசனும் எதிர்பார்க்கிறார்'' என்று கண்சிமிட்டியபடியே கூறுவான் சங்கன்.

"அரசர் நாள்தோறும் முக்கிய செய்திகளை எதிர்பார்க்கிறார். நம் அரையருக்கு அப்படி என்ன செய்தி? பட்டீச்சரத்தில் ஒரு பாட்டி இருக்கிறாள். அவள்தான் ஏதாவது செய்தி அனுப்ப வேண்டும்''என்பான் ரங்கன்.

"அடடே, பட்டீச்சரம் பாட்டியா? எனக்குத் தெரியாமல் போய்விட்டதே? திருவாரூர் தேன்மொழியைத்தான் எனக்குத் தெரியும். தேன்மொழியைக் கல்யாணம் செய்து கொள்ள வேண்டும் என்று பல வருடங்களாகத் தவம் செய்தார்" – சங்கன்.

"ஏதேது, இப்பொழுதுதான் படைத் தலைவர் ஆகியிருக்கிறார். அதற்குள் இரண்டு மூன்று காதலா?" என்று கூறி கண்சிமிட்டுவான் ரங்கன்.

உணவு சமைக்க மூட்டப்பட்டிருக்கும் அடுப்பைச் சுற்றி வீரர்கள் அமர்ந்திருப்பர். அங்கு பாட்டும் கூத்துமாக இருக்கும். வீரர்கள் குழுவில் இதுவரை சரியாகக் கலந்து கொள்ளாமலிருந்தவர்கள் சங்கன் பேசுவதைக் கேட்க ஆவலுடன் அவன் பக்கம் திரும்புவார்கள்.

"முக்கியமானவர்களின் அந்தரங்கச் செய்திகளை எப்படி சங்கா நீ தெரிந்து கொள்கிறாய்?" என்று அவனை உசுப்பி விடுவான் ஒரு வீரன் செய்தியை முழுமையாகக் கேட்டறிய.

"அதுவா? நானாக அலைவதில்லை. அதற்காக, என்னைத் தேடி வருவதைத் தள்ளிவிட முடியுமா? உன்னைப்பற்றிக்கூட ஒரு செய்தி எனக்குத் தெரியும்'' எனக்கூறி கேள்வி கேட்டவனையே திடுக்கிட வைப்பதுடன், 'என்னைப் பற்றி என்ன செய்தி என்ன செய்தி' என்று பரபரப்புடன் கேட்குமாறு செய்வான்.

→

"நம் தலைவரைப் பற்றிச் சொல்லப்பா. மற்ற கதையெல்லாம் எதற்கு? ஏதோ உத்தமர்போல அவர் நடித்து நம் அரசரின் அபிமானத்தைப் பெற்றுவிட்டார். பட்டீச் சரம் பாட்டியைப் பற்றிச் சொல்லு" என்று மற்றொருவன் தூண்டுவான்.

சக்கரவர்த்தியிடம் அபிமானம் பெறுவதில் அரையன் இராசராசனுக்கும் முன்னாள் படைத்தலைவர் கிருஷ்ணன் ராமன் புதல்வன் அருண்மொழிக்கும்தான் கடுமையான போட்டி. இருவரும் தம் திறமையைப் புலப்படுத்திப் போட்டி யிடுவதால் சோழ நாட்டிற்கு நன்மை தானே என்று அரசரும் அவர்கள் நட வடிக்கையைக் கண்டும் காணாததுமாக இருந்து விடுவார்.

இளம் வயதிலேயே திறமை மிகுந்த இரு வீரர்களும் தங்கள் ஆற்றலை வெளிப் படுத்தி முன்னேறி வந்தனர். அவர்கள் இருவரையும் பாராட்டுவதற்கும் - புகழ் வதற்கும் என்று சிலர் சூழ்ந்திருப்பர். அவர்களுள் அருண்மொழியை ஆதரிக்கும் வீரன் ஒருவன் ரங்கனைப் பேசத் தூண்டி னான்.

ரங்கன் கண் சிமிட்டியபடி, "நமக்கு எதற்கப்பா வம்பு. அரையர் காதில் இந்தச் செய்தி விழுந்தால் என்னை இங் கேயே வெட்டி மணலில் புதைத்து விடுவார்" என்றான் மேலும் ஆவலைத் தூண்ட.

"பட்டீச்சரம் பாட்டியைப் பற்றி நீ சொல்லாவிட்டாலும்கூட ஒருநாள் இல்லா விட்டால் வேறு ஒருநாள் உன்னை அரையர் கண்ட துண்டமாக வெட்டிப் போடத்தான் போகிறார்."

"அந்த இரகசியச் செய்தியைச் சொல்லி விட்டுத்தான் செத்துப் போயேன். பாவம், தன் அபிமானத் தலைவர் அருண்மொழி யிடம் இந்தக் கதையை உடனே போய்ச் சொல்லத் துடிக்கும் அவன் ஆசையை ஏன் தடுக்கிறாய்?" என்று கேள்வி கேட்டவனைப் பார்த்து அங்கிருப்போர் எல்லோரும் சிரிக்குமாறு செய்து விட்டான் சங்கன்.

"எனக்கு ஒரே தலைவர். நமது பேரரசர் தான். உம் சொல்லப்பா ஆவலைத் தூண்டி விட்டு திசைத் திருப்பப் பார்க்கிறாயே. அன்று அப்படித்தான், நமது பேரரசர் குடும்பத்தைப் பற்றிக் கதை கதையாகச் சொல்லிக் கடைசியில் வீரமாதேவியைப் பற்றி ஏதோ பெரிய இரகசியம் சொல்லப் போவதாகக் கூறி ஆவலைத் தூண்டி விட்டு சொல்லாமல் போய்விட்டாய். இரவெல் லாம் எனக்குத் தூக்கம் வரவில்லை" என்று குறைப்பட்டுக் கொண்டான். "வீரமா தேவியைப் பற்றி அறிய உனக்கு அவ்வளவு ஆவல் ஏன்?" என்று கேட்டான் மற்றொரு வீரன்.

"அதுவா, ஒரு பெரிய கதை" என்றான் மற்றொருவன்.

"கிணறு வெட்ட பூதம் கிளம்புவதுபோல் சுவையான கதை இன்று கிடைக்கும் போலி ருக்கிறதே. இன்று சிவராத்திரிதான்" என்றான் மற்றொருவான்.

"மற்ற கதையெல்லாம் இருக்கட்டும்; வீரமாதேவியை உனக்கு முன்பே தெரியுமா? வீரமாதேவியின் கடைக்கண் பட்டுவிட்டால் அரசாங்கத்தில் பெரிய பெரிய காரியத் தைச் சாதித்துக் கொள்ளலாம் என்று சொல்கிறார்கள்" என்று தூபம் போட்டான் மற்றொருவன்.

"வீரமாதேவி வீரம்மாளாகக் கிராமத்தில் வசித்தபோதே அவனுக்குத் தெரியும். அவளுக்குப் பரிசம்போட அவன் வீட்டார் முடிவு செய்து விட்டார்கள். அவன் துர திர்ஷ்டம் காரியம் கைகூடவில்லை" என்றான் மற்றொருவன்.

"துரதிர்ஷ்டமா? அதிர்ஷ்டம் என்று சொல்லு. அந்த வீரம்மாள் வீரமாதேவி யாகி நம் சக்கரவர்த்திகளைப் படுத்தும் பாடு கொஞ்சமா? அவளை இவன் மணந் திருந்தால் இவன் கதி என்ன ஆகியிருக் கும்?"

"ஒன்றும் ஆகியிருக்காது. அவள் அங் கேயே இருப்பாள். இவன் மட்டுமே பரிதாபத்துடன் பிரிந்து போர்க்களம் செல்ல வேண்டியிருக்கும்."

"ஆமாம். எனக்கும் அதுதான் சந்தேகம். நம் அரசர் எங்குச் சென்றாலும் வீரமா தேவியை உடன் அழைத்துச் செல்வதை வழக்கமாகக் கொண்டிருந்தார். தஞ்சை யில் தங்காமல், பழையாறையில் தங்காமல், காட்டுப்பகுதியில் தங்கியிருக்கிறார். அவர் கட்டும் கோயில் குடமுழுக்குக்குக் கங்கை நீரைக் கொண்டு வரவும், கங்கையில்

புனித நீராடவும் இளவரசியை ஏன் அழைத்து வரவில்லை?"

"அரசர் அழைத்து வரவில்லையா? அவள் வரச் சம்மதிக்கவில்லை. அதற்குச் சில காரணங்கள் உண்டு" சங்கன் கூறினான்.

"ஒரு கதை சொல்லப் போக நூறு கிளைக் கதைகள் கிளர்ந்தெழுகின்றன. இவற்றையெல்லாம் கேட்பதற்கு நமக்கு வயது இருக்குமா என்று தெரியவில்லை" என்று ஒரு வீரன் அங்கலாய்த்தான். இளைஞர்களே நிறைந்திருந்த அந்தக் கூட்டத்தில் அவன் ஒருவனே சற்று வயதானவன். கல்யாணமாகி மனைவியை இழந்தவன். காதல் கதைகள், குடும்ப நிகழ்ச்சிகள், கணவன் - மனைவி பிணக்கு, ஊடல் இவை போன்ற செய்திகளைக் கேட்பதில் அவனுக்கு ஆவல் அதிகம். சுவையான பாடல்களைத்தானே புனைந்து பாடுவான். இளைஞர்களிடையே இருந்து அவர்கள் பேசுவதைக் கேட்பதில்தான் அவனுக்கு மனநிறைவு. அதனால் வீரமாதேவியைப் பற்றி அறிவதில் அவன்ஆவல் கொண்டான்.

எவ்வளவு காத தொலைவு பயணம் செய்தாலும் களைப்படையாத இராசேந்திர சோழ தேவர் இரண்டு பகல் பயணம் செய்தவுடனே சற்று இளைப்பாற விரும்பினார். மலையடிவாரத்திலுள்ள சிற்றூரில் தங்கினார்.

படைகளின் ஒரு பகுதித் தலைவர் அருண்மொழி, அரசரைப் பார்க்க விரைந்து வந்தான். அவனிடமிருந்த பரபரப்பை அரசர் நொடியில் அறிந்தார். அவன் கரத்தில் பட்டுத் துணியால் சுற்றப்பட்ட ஓலைகள் இருந்தன. அதை அரசரிடம் நீட்டிய அருண்மொழி, "இவை நம் படை வீரனொருவனிடமிருந்தன" என்றான்.

பழையாறையிலிருந்து பட்டோலைப் பெருமான் அனுப்பிய செய்திகள் நிறைந்த ஓலை அவை. அவர் முன்பே திட்டமிட்டிருந்தபடி வாரம் ஒற்றன் ஒருவன் செய்தியை எடுத்துக் கொண்டு, அரசர் இருக்குமிடம் வரவேண்டும். பல வாரங்கள் கடந்தும் தஞ்சையினின்றோ, பழையாறையினின்றோ எந்தவிதத் தகவலும் வந்து சேரவில்லை என்பதை அறிந்து அரசர் பெரிதும் கவலை கொண்டிருந்தார். இரண்டு நாள்களுக்கு முன்பு, வீரமாதேவியே நேரில் வந்து உரையாடியது போன்ற உணர்வினால் பெரிதும் மனம் பாதிக்கப்பட்டிருந்த இராசேந்திரன் பத்துக்கும் மேற்பட்ட ஓலைகளைக் கண்டவுடன் ஒரு கணம் சீற்றமடைந்தார். பிறகு தன்னை அமைதிப்படுத்திக் கொண்டு அருண்மொழியை நோக்கிப் பார்வையாலேயே வினவினார்.

"நம் படைவீரர்களுள் ரங்கன், சங்கன் என்று இருவர். நல்லவர்கள்போல நடிப்பார்கள்".

"சிரிக்கச் சிரிக்கப் பேசுவார்களே அவர்களா?" என்று அரசர் கேட்டவுடன், நுணுக்கமான சிறு செய்திகளைக்கூட அரசர் அறிந்து வைத்திருக்கிறாரே என்று வியப்புடன் அருண்மொழி அரசரைப் பார்த்தான்.

உள்ளே கோபம் பொங்கிக் கொண்டிருந்தாலும் உதட்டில் புன்னகையுடன், "நம் வீரர்களின் ஒவ்வொரு நடவடிக்கையும் நான் அறிவேன். உம்; மேலே செய்திகளைச் சொல்லு. இவ்வளவு வாரங்கள் இந்த ஓலைகள் எங்கே இருந்தன. அவற்றைக் கொண்டு வந்த ஒற்றர்கள் எங்கே?"

அருண்மொழி திகைத்தான். சங்கனிடமிருந்து ஓலைகளைப் பறித்து வந்தானே தவிர, அதைக் கொண்டு வந்தவர்கள் என்ன ஆனார்கள் என்பதை விசாரிக்க மறந்தான். அல்லது அப்போது தோன்றவில்லை.

"இந்த ஓலைகளைப் படித்து முடிப்பதற்குள், செய்தி கொண்டு வந்தவர்களைப் பற்றித் தெரிந்து வா. படைத்தலைவன் ஆற்றல் மிக்கவராயிருக்க வேண்டும். ஆற்றல் வீரத்தில் மட்டுமன்று; அறிவிலும்" என்று அரசர் சொன்னவுடன் நொடியில் கூனிக் குறுகிவிட்டான் அருண்மொழி.

இராசேந்திரன் ஒவ்வோர் ஓலை மடலாகக் கவனத்துடன் படித்தார். இடையே ஓர் ஓலை, வீரமாதேவியிடமிருந்து வந்திருந்தது. ஓலை நறுக்கில் எழுத்தாணியால் அவள் முத்து முத்தாக எழுதியிருந்தாள். சில வரிகள் மட்டுமே. ஆனால் அவை ஆயிரம் செய்திகளைத் தெரிவித்தன. வீரமாதேவியிடமிருந்து வந்த ஓலையைத் தவிர மற்ற ஓலைகளைப் படிக்கலானார்.

மதுரையில், சோழநாட்டின் சார்பில் அரசப் பிரதிநிதியாக இருந்த சுந்தரனைப் பற்றிய செய்தியை ஒரு மடல் விவரித்தது. வடக்கே சோழர்ப் படைகள் சென்றிருப்ப தால், தெற்கே மதுரையில் கிளர்ச்சி செய்யலாம் என்று எண்ணிய பாண்டிய நாட்டுப் புரட்சிக்காரர்கள் கலகம் செய்ய முற்பட்டதை ஒரு மடல் விவரித்தது.

தந்தையுடன் கங்கை நதிப்பயணத்தில் சேர்ந்து வராமல் தஞ்சையில், உடல்நலக் குறைவால் தங்கிவிட்ட இராசராசனின் மூத்த இளவரசன் இராசாதிராசன் மது ரைக்கு விரைந்ததை மடல் விவரித்தது.

பழையாறையில், அரசி பஞ்சவன் மாதேவிக்கும் மற்றோர் இளவரசன் ஆதித் தனுக்கும் கருத்து வேற்றுமை ஏற்பட்டு, இருவரும் நேர்விரோதமாக உத்தரவுகளை வெளியிட்டு வருவதாக ஒரு செய்தி.

ஏரி வெட்டுதல், காட்டை அழிக்கும் பணி மிக விரைவாக நடைபெறுகின்றன.

ஈழத்துப் போரிலும் மற்றப் போர்களிலும் சிறை பிடிக்கப்பட்டவர்களைக் கொண்டு அந்த வேலைகள் நடைபெறுகின்றன. மதுரையில் இருந்து சிற்பிகளை அழைத்து வர அனுப்பப்பட்ட செய்தி அங்கு சென்றடைய வில்லை என்று ஒரு செய்தி.

கோயில் திருப்பணிக்கு வேண்டிய பாறைகள், பாண்டிய நாட்டினின்றும், தொண்டை மண்டலத்தினின்றும் கொண்டு வர இளவரசர் ஆதித்தன் இட்ட உத்தரவை அரசியார் தடுத்து விட்டார் என்ற செய்தி.

சிற்பி மாணிக்க சேகரன் உடல் நலம் குன்றியதால் பழையாறைக்கு அழைத்து வரப்பட்டதாகவும், அவனை மிக நேசிக்கும் அவன் காதலியை அவன் அருகே இருக்க வைக்க முயற்சி செய்யப்படுவதாகவும் ஒரு தகவல்.

மற்றுமோர் ஓலை - கல்விக் கூடங்கள், பண்டிதர்களுக்கு உதவி: வருவாய்க் கணக்கை தெரிவித்திருந்தது.

வீரமாதேவியிடமிருந்து வந்திருந்த ஓலை யைக் கடைசியாகப் படிக்க எண்ணிய இராசேந்திரன் சிறிது நேரம் மௌனமாக இருந்தார்.

'சோழ நாட்டுப் பேரரசியாக விளங்கி னாள் உலகமாதேவி. அவள் மறைவிற்குப் பிறகு பஞ்சவன் மாதேவி அந்த இடத்தை ஏற்றாள். அவள் அதிர்ஷ்டக்காரி. அரியணை யில் என்னிடம் சரிசமமாக அமரும் வாய்ப்பு பஞ்சவன் மாதேவிக்கே கிடைத்தது. பழு வேட்டரையர் குலத்திற்கு இதைவிடப் பெரிய பரிசு வேறெதுவும் கிடைக்க வாய்ப்பில்லை. ஆனால், அழகிலும் குணத்திலும் சிறந்து இருந்த பஞ்சவன் மாதேவியின் போக்கில் ஓர் மாறுதல் ஏற்பட்டது. வயது முதிர்ந்த நிலையில் வயதுக்கேற்ற அனுபவம், அவளுள் எழுந்த பொறாமையை ஏன் தடுக்கவில்லை? வீரமாதேவி இளவரசியை வந்து சேர்ந்தவுடனேயே பஞ்சவன்மாதேவி யிடம் பெரும் மாறுதல். அவளுள்ளத்தே ஏற்பட்ட பொறாமைத் தீ நல்ல காரியங் களுக்குத் தடையாக இருக்கிறது. பெரிய கோயில் கட்டுவது என்ற இலட்சியத்திற்கு வடிவமைத்துக் கொடுக்கும் ஆற்றல்மிக்க வீரமாதேவியின் பணிகளுக்குப் பஞ்சவன் மாதேவி இடையூறாக விளங்குகிறாள் என் பதை அறியும்போது இராசேந்திரனுக்குக் கவலை இதயத்தைக் கனக்கச் செய்தது.

கோயிலின் குடமுழுக்குக்குக் கங்கை நீரைக் கொண்டுவரவே இந்தக் கங்கை யாத்திரை. கோயில் பணி நடைபெறாவிடில் எதற்காக இந்தப் பயணம்? உடனே, தலை நகரத்திற்குத் திரும்பி விடுவோம் என்று எண்ணினார் இராசேந்திரன்.

இதுவரை எடுத்த காரியம் யாவிலும் வெற்றி கண்டு வந்த தனக்கு இப்படி ஓர் ஏமாற்றமா?

இதுவரை கவலை என்பதே அறியாத இராசேந்திரன் மனத்தில் பலவித எண்ணங் கள் கூத்தாடின. நெற்றிப் பொட்டைப் பிடித்துக் கொண்டார். பழையாறையில் குழப்பம் இருக்கும்போது நாம் இங்கே ஏனிருக்க வேண்டும் என்று கவலை கொண்ட அவர் எதிரே வீரமாதேவி எழுதிய மடல் இருந்தது. அந்த ஓலையை எடுத்துப் படிக்கலானார்.

ஓலையைப் படிக்கும்போது தன் முகத்தில் ஏற்படும் மாறுதலை, வியப்பை, கவலையை படைத்தலைவன் கவனிக்கி றானா என்று ஒருமுறை அவனை நோக்கி னார். அவன் வேறு எங்கோ பார்த் திருந்தான்.

ஓலையைப் படித்து முடித்தவுடன் அவர் ஒரு முடிவுக்கு வந்துவிட்டார்.

(தொடரும்)

# "சிகாகோவில் ஒரு தீப்பிழம்பு"

"நாளை நமதே" என்று உலகுக்குச் சிம்மக் குரலில் முதன் முதலில் சொன்ன மகான் நம் விவேகாநந்த அடிகள்தான். சண்டை சச்சரவு இன்றி யாவரும் ஒரு குடும்பமாக வாழ்ந்தால், "நாளை நமதே" என்றார் அடிகள்.

இன்றைக்கு நூறு ஆண்டுகளுக்கு முன்பு 1893 ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் 11 ஆம் நாள் அமெரிக்க சிகாகோ பெருநகரில் கூடிய சர்வ மதப் பாராளுமன்றத்தில் இந்தியாவின் சார்பில் கலந்துகொண்டு, சீமான்களே சீமாட்டிகளே என்று பேசியவர்கள் மத்தியில் "சகோதரிகளே, சகோதரர்களே' என்று விளித்துத் தொல்லுலக மக்களெல்லாம் ஒன்றே என்ற தாயுள்ளத்தைக் காட்டியவர் சுவாமிகள். இவரை "ஒரு தீப்பிழம்பு" (A Ball of Fire) என்று அமெரிக்கப் பத்திரிகைகள் பாராட்டின அன்று.

சுமார் 4000 பேர் அமர்ந்திருக்கக்கூடிய கொலம்பஸ் மன்றத்தில் இச்சர்வமத மாநாடு 17 நாள்கள் நடந்தது. பேரவையின் கூட்டத்திலே மாபெரும் இந்து மதத்தின் சார்பில் கலந்து கொண்ட ஒப்பற்ற விவேகாநந்த சுவாமிகள் 31 ஆவது நபராக அழைக்கப்பட்டார். சில முறை "பிறகு பேசுகிறேன்" என்று தயங்கிய, மாமுனி கடைசியாகச் சபையின் முன் நின்றார். இந்தியாவிலிருந்து வந்திருந்த பேராசிரியர் மஜூம்தார், சக்ரவர்த்தி போன்றவர்கள், பக்கம் பக்கமாகத் தங்கள் சொற்பொழிவைத் தயாரித்துக் கொண்டு வந்திருந்தனர்.

ஆனால், நம் சுவாமிகளோ ஒரு சிறு குறிப்பைக்கூடக் கையில் வைத்திருக்கவில்லை, "ஒரு தீப்பிழம்பு மனித உருக்கொண்டு நின்றது போலிருந்தது" அவர் தோற்றம். "வசுதேவ குடும்பகம்" (உலகமே ஒரு குடும்பம்) என்ற வழியில் வந்த தவத்திரு இராமகிருஷ்ண பரமஹம்சரின் தலைமைச் சீடன், இந்தியப் பாரம்பரியம் என்னும் குன்றின் மீதேறி நின்றான் அன்று. 'சகோதர சகோதரிகளே' என்று கூறி நேசக்கரத்தை நரேந்திரன் நீட்டிய உடன் அங்கு கூடியிருந்தோர் தம்மையே மறந்தனர். "தோள் கண்டார் தோளே கண்டார்" என்றபடி கண்டோரைக் கவரும் சுவாமிகளை மட்டுமே அவர்கள் கண்டார்கள். தங்களது வெவ்வேறு மதங்களை, நாடுகளை, இனங்களை, நிறங்களை மறந்து நாம் "ஓர் உலகத்தின் குடிகள், ஒரே தாயின் புதல்வர்கள்" என்ற களிப்பில் நீந்தினர்.

அவர்கள் கை தட்டினார்கள், கை தட்டினார்கள், கைதட்டிக்கொண்டே இருந்தார்கள். பல நிமிடங்கள் மெய்மறந்து சுவாமிகளின் அந்த முதல் முழக்கமே உலகை ஒன்றுபடுத்தியது. பல ஆண்டுகட்குப் பின்னர் வெண்டல் வில்கி "உலகக் குடிமகன்" (Citizen of the World) என்ற கொள்கையைக் கூறவிருக்கிறார்.



ஆனால் 100 ஆண்டுகட்கு முன்னரே நம் அடிகள் "ஓர் உலகத்துக்கான" விதையை சிகாகோவில் ஊன்றினார். அவர்தம் அருள் வாக்கு, அங்குள்ளோரை மட்டுமல்லாமல் உலக மக்களையெல்லாம் வசீகரப்படுத்தும் தாரக மந்திரமாக அமைந்தது.

அவர் முதன் முதல் சிகாகோ சொற்பொழிவில் கூறியது : பாரதத்தின் தொன்மைமிகு வரலாறு பற்றி . "பிற சமயக் கொள்கைகளை வெறுக்காது மதித்தல், அவற்றை எல்லோரும் ஏற்றுக் கொள்ளுதல் ஆகிய இரு பண்புகளை உலகத்துக்குப் புகட்டிய (இந்து) சமயத்துக் குரியவன் என்பது குறித்து நான் பெருமை அடைகிறேன். எதையும் வெறுக்காது மதிக்க வேண்டும் என்கிற கொள்கையை நாங்கள் நம்புவதோடு எல்லாச் சமயங்களும் உண்மை யானவையே என்றும் ஒப்புக் கொள்கிறோம்" என்று கர்ஜித்தார் அடிகள். அங்கே வரலாறு படைத்த அடிகள் திமிர் பிடித்த ஆதிக்க வெறியர்கள் பற்றி எள்ளி நகையாடுகிறார். கேளுங்கள். "உலகிலுள்ள அனைத்து நாடுகளாலும், அனைத்துச் சமயங்களாலும் கொடுமைப்படுத்தப்பட்டவர்களுக்குப் புகலிடம் அளித்த இந்திய நாட்டைச் சேர்ந்தவன் என்பதில் பெருமை கொள்கிறேன்" என்றார்.

இதைப் படிக்கும்போது நமக்குப் புல்லரிப்பு ஏற்படுகிறது. உலக நாடுகளின் சபையில், ஆங்கில அமெரிக்க நாட்டுப் பேரறிஞர்கள் முன்பு அவர்களே வெட்கித் தலைகுனியும் வகையில் நம் விவேகானந்தர் கேட்டார். "பிணிக்கும் தகயவாய், கேளாரும் வேட்ப" ஆங்கிலத்தில், மிகச் செறிவு கொண்ட ஆங்கிலத்தில் ("Mellifluous English") சொற் பெருக்காற்றினார்.

மேலும் பல வரலாற்று உண்மைகளை சுவாமிகள் மேல் நாட்டார் முன்பு சிறிதும் அச்சமின்றி எடுத்து வைக்கிறார். ஏன்? இன்னும் மேல் நாட்டோர் பலர் நம் பாரம் பரியத்தை உணராமல் "இந்தியர்கள் காட்டு மிராண்டிகள்" எனத் திண்ணமாக நம்பியதே காரணம். அவர்களது ஞானசூனியத்தைப் பார்த்துப் பரிதாபப்பட்ட சுவாமிகள் மேலும் பேசுகிறார்.

"உரோமானியரின் கொடுமையால், தங்கள் புனிதத்திருக்கோயில் சிதைந்து சீரழிந்த அந்த ஆண்டே அவர்கள் எங்கள் தென்னிந்தியாவுக்கு வந்து சரணடைந்தனர். அப்படி வந்த கலப்பற்ற இஸ்ரேலியர்களை இதயமாரத் தழுவிக் கொண்டவர்கள் நாங்கள் என்பதில் பெருமை கொள்கிறேன். சொராஸ்திரிய மதத் தினர் (Zorastrians) பலரும் வந்தபோதும் அவர்களை ஆரத்தழுவிப் பேணிக் காத்தவரும் நாங்கள் என்பதில் பெருமைப்படுகிறேன்" என்றார்.

இந்த உண்மை நம்முள் பலருக்கே இதுவரை தெரியாது.

நமது பகவத் கீதையின் வாக்குகளை அந்த மேல் நாட்டார் முன்பு வெள்ளி விளக்காக நிறுத்துகிறார் அடிகளார்.

"எங்கள் நாட்டில் காலம் தொட்டு ஓதப்பட்டுவரும் ஒரு கீதத்தை உங்கள் முன் வைக்கிறேன்.

"எங்கெங்கோ தோன்றுகின்ற ஓடையெல்லாம்,
இறுதியிலே கடலில் சென்று
சங்கமமாகும் பான்மையினைப் போன்றுலகோர்
பின்பற்றும் தன்மையிலே
துங்குமிகு நெறி பலவாய், நேராயும்
வளைவாயும் தோன்றினாலும்
அங்கு அவைதான் எம்பெரும் ஈற்றில் உனை
அடைகின்ற ஆறேயன்றோ"

எங்கள் கீதை கூறியது, "யார் யார் எவ் வழியைப் பின்பற்றி என்னை அடைய முயன் றாலும் நான் அவர்களை அடைவேன். பலரும் பல வழிகளில் முயல்கிறார்கள்.. ஆனால் எல்லா வழிகளும் இறுதியில் என்னையே அடை கின்றன" என்று அடிகள் எழுப்பிய கனல்குரல் கேட்டு அங்கிருந்தோர் ஆடிப்போயினர். அன்றைய அமெரிக்கப்பத்திரிகை கூறுவதைக் கேளுங்கள். "இதைக் கேட்ட அந்த மாபெரும் சமயப் பாராளுமன்றத்தில் வந்திருந்த அனைவரும் வாயடைத்துச் செயலற்றுத் தம்பித்து நின்றனர். ஏனெனில் இந்தியாவின் இளைய சன்யாசி அவர்களது உள்ளத்தையெல்லாம் கொள்ளை கொண்டுவிட்டான்".

இவரது பேச்சைக் கேட்டவர்பால் ஏற்பட்ட மனவெழுச்சி பற்றி அன்னி பெசன்ட் (Annie Besant) அம்மையார் பின்னர் எழுதுகிறார். "விவேகாநந்தரின் நாடு அறிவுக் களஞ்சியம் என்பதை அறிந்துகொண்ட மேல்நாட்டோர், இம் மகானின் நாட்டில் மதப்பிரசாரம் செய்ய நாம் நமது ஆட்களை அனுப்புவது எவ்வளவு தவறு? அவர் நாட்டிலிருந்தன்றோ ஆன்மிகப் பெரியார். இங்கு வந்து நமக்கு அறவழி காட்டவேண்டும்" என்று அந்தச்சமய மாநாட்டில் பலர் உணர்ந்தார்கள் என்று.

செப்டம்பர் 27 ஆம் தேதி இம்மாபெரும் அவையின் கடைசி நாள் அன்று அடிகளார் கூறினார் :

"என் மதம்தான் நிரந்தரம். அதுதான் நீடிக்கும். மற்றைய மதங்கள் அழிந்துவிடும்

என்று நினைப்பவரைப் பார்த்து நான் பரி தாபப்படுகிறேன். ஏனென்றால் இனி எல்லா மதங்களும் ஒன்றுக்கொன்று உதவிக்கரம் நீட்டி உலகுய்யும் வழியைக் காணும்" என்று அருளினார் அடிகள்.

இதுபற்றி அன்றே "இந்தியன் மிர்ரர்" என்ற பத்திரிகை "விவேகாநந்த சுவாமிகள் நம் மதத்தின் மறுமலர்ச்சியின் முன்னோடி" என்று கூறியது.

The Swamiji was the "Morning Star" of Hindu renaissance (Indian Mirror 1893)

யாரும் அறியாத, எதுவும் தெரியாத துறவி யாக அமெரிக்காவில் நுழைந்த விவேகா நந்தர், தம்முடைய சொல்வன்மையால், வாதத் திறமையால், அச்சமற்ற அறிவொளியால் உலகப் புகழ் பெற்று விட்டார். சிகாகோ மாநகரில் நம் மாமுனியின் ஆளுயரச் சுவரொட்டிகள் அன்று காணப்பட்டன.

தேவனின் தூதர், மார்க்கதரிசி என ஆங்கிலப் பத்திரிகைகள் இவரை வர்ணித்தன. அமெரிக்கக் கோடீசுவரர்கள் அடிகளுக்கு எல்லாவற்றையும் அள்ளி அளிக்கத் துள்ளி வந்தனர். ஆனால் செல்வச் சிறப்புகள் என் றுமே சுவாமிகளைக் கவர்ந்ததில்லை.

பாரதத்தின் ஏழை மக்களை உயர்த்துவது எங்ஙனம் என்பது பற்றியே எல்லா நேரமும் அடிகள் சிந்தித்தார்.

எங்கும் மதத் துவேஷங்கள் தலைதூக்கி வரும் இன்று, விவேகாநந்தரின் சிகாகோ சொற்பொழிவு ஒரு மாமருந்து. மதத்தின் பெய ரால் பல்லாயிரவர் உலகெங்கும் கொன்று குவிக்கப்படும் இவ்வேளை அடிகளாரின் மாபெரும் அறவுரையை உலகெங்கும் மறுபடி யும் பரப்புவது நம் கடமை.

எம்மதமும் சம்மதம் என்று கூறிய சமரச சன்மார்க்கத்தைக் கண்ட நாடு நம் நாடு. எனவே "இந்தியா உலகுக்கு வழிகாட்டும்" என் றார் அடிகள் ஒரு நூற்றாண்டுக்கு முன்னர்.

உலக மதங்கள் ஒன்றுக்கொன்று சண்டை யிடுவது பற்றி சுவாமிகள் அமெரிக்காவில் ஒரு குட்டிக் கதை சொன்னார். சிறிய கதையாக இருந்தாலும் பொருள் பொதிந்த கதை. நூறாண்டுகள் கழிந்தும் நமக்கும் இன்றும் பொருந்தும் கதை. என்ன கதை அது? சுவாமிகள் 1893 இல் அமெரிக்காவில் சொன் னார்: "நான் ஒரு சிறு கதை சொல்லப் போகிறேன். நாம் ஒருவரையொருவர் வசை பாடுவதை நிறுத்த வேண்டும் என்று இப் பொழுது பேசி முடித்த நாவன்மை படைத்த பேச்சாளர் கூறியதைக் கேட்டீர்கள். நமக்குள்




## மாமனும் மயிலும்

அவன் : தேனாத்தங் கரை ரெண்டும்
தேக்கு மரச்சாலை
மானாட்டம் மயிலாட்டம்
மங்கைவரு வாளோ?

அவள் : மானாட்டம் மயிலாட்டம்
மங்கை வரும்போது
மாமன்வந்து பார்க்காவிட்டா
மவுசு கிடையாது!

அவன் : அழகான மணலிருக்கு
அதுமேல நிழலிருக்கு
பழகிடும் பெண் எனக்குப்
பக்கமிருந்தும் பயனில்லே!

அவள் : நீயுண்டு நானுண்டு
நெருங்கிட வகையுண்டு
நேரம் காலம் வேண்டாமா
நீ பொறு என் மாமா!

அவன் : தண்ணியிலே மீனோட்டம்
கன்னியே உன் கண்ணோட்டம்
என்னருகே தேரோட்டம்
எண்ணமெல்லாம் போராட்டம்

அவள் : போராட்ட மனசினிலே
பொய்யாட்டம் ஏன் மாமா
பொய்யாட்டம் இல்லேன்னா
பூமாலை தாமாமா!

அவன் : வயலெல்லாம் கதிராட்டம்
வாழ்வு தரும் சதிராட்டம்
தை பொறந்த பின்னாலே
தாலி ஏறும் தன்னாலே!

அவள் : மாமா நீ தாலி கொடு
மணமேடை மாலையிடு!
அந்நாளே ஒட்டிக்கொள்ளு
அதுவரைக்கும் எட்டிநில்லு!

–கவிஞர் அமுதநிலவன்.

இவ்வளவு மாறுபாடு இருப்பதைப் பற்றி அவர் வருத்தப்பட்டார். இந்த மாறுபாடுகளுக்குக் காரணம் என்ன என்பதை விளக்க, ஒரு கதை சொல்ல வேண்டுமென்று நினைக்கிறேன்.

தவளை ஒன்று. ஒரு கிணற்றில், பல நாள்களாக வசித்து வந்தது. அந்தக் கிணற்றிலேயே பிறந்து, அங்கேயே வளர்ந்தது அந்தச் சின்னஞ் சிறிய தவளை. அந்தத் தவளை கண்களை இழந்துவிட்டதா, இல்லையா என்று சொல்வதற்கு, நல்ல வேளையாக அங்கே பரிணாமவாதிகள் யாரும் இல்லை. ஆனால், நம் கதையைப் பொறுத்தவரையில், அதற்குக் கண்கள் இருந்தன என்றே வைத்துக் கொள்வோம். அந்தத் தவளை நாள்தோறும் நீரிலிருந்து புழு பூச்சிகளையும் கிருமிகளையும் வெகு சுறுசுறுப்பாக அகற்றிச் சுத்தப்படுத்தியது. அந்தச் சுறுசுறுப்பு, நம் தற்காலக் கிருமி ஆராய்ச்சியாளர்களுக்கு இருந்தால் அது அவர்களுக்குப் பெருமை தரும் விஷயமாகும். அவ்வாறே வாழ்ந்ததால் அத்தவளை சிறிது பருத்தும் விட்டது.

ஒருநாள் கடலில் வாழ்ந்து வந்த தவளையொன்று அங்கு வந்து, அந்தக் கிணற்றில் விழுந்துவிட்டது.

"நீ எங்கிருந்து வருகிறாய்?" என்றது கிணற்றுத் தவளை.

"கடலிலிருந்து" என்றது விருந்தாளித் தவளை.

"கடலா? அது எவ்வளவு பெரியது?" எனது கிணற்றளவு பெரிதாயிருக்குமா?" என்று கூறி, ஒரு பக்கத்திலிருந்து எதிர்ப்பக்கத்திற்குத் தாவிக் குதித்தது கிணற்றுத் தவளை.

"நண்பா! இந்தச் சின்னக் கிணற்றோடு எப்படிக் கடலை ஒப்பிட முடியும்?" என்று கேட்டது கடல் தவளை.

கிணற்றுத் தவளை மறுபடியும் ஒரு தாண்டு தாண்டி, "நீ சொல்லும் கடல் இவ்வளவு பெரிதாயிருக்குமா?" என்று கேட்டது.

"சேச்சே! என்ன முட்டாள்தனம்! கடலை உன் கிணற்றோடு ஒப்பிடுவதா?" என்றது கடல் தவளை.

"சரி, சரி. என் கிணற்றைவிட எதுவும் பெரிதாக இருக்க முடியாது. கண்டிப்பாக, இதைவிடப் பெரிதாக இருக்கவே முடியாது. இவன் சொல்வது அப்பட்டமான பொய்; இவனை வெளியே விரட்டு!" என்று கூறிவிட்டது அந்தக் கிணற்றுத் தவளை. இதுதான் அன்றையக் கோளாறு.

இத்தனை காலமாக இருந்துள்ள கஷ்டம் இதுதான்.

நான் ஓர் இந்து. நான் என் சிறிய கிணற்றுக்குள் இருந்து கொண்டு, உலகம் முழுவதும் என் சிறு கிணறுதான் என்று நினைக்கிறேன். கிறிஸ்துவர் தம் சமயமாகிய சிறு கிணற்றுக்குள் உட்கார்ந்து கொண்டு, உலகம் முழுவதும் தம் கிணறுதான் என்று நினைக்கின்றார். அவ்வாறே முகமதியரும் தம் சமயமாகிய சிறு கிணற்றில் உட்கார்ந்து கொண்டு, அதுதான் முழு உலகம் என்று நினைக்கின்றார். நம்முடைய இச்சிறிய உலகின் வேலிகளைத் தகர்த்தெறிய, அமெரிக்கர்களாகிய நீங்கள், எடுத்துக் கொண்டிருக்கும் பெரிய முயற்சிக்காக நான் உங்களுக்கு நன்றி செலுத்த வேண்டும். வருங்காலத்தில், உங்கள் விருப்பம் நிறைவேற இறைவன் அருள்புரிவான் என்று நம்புகிறேன்".

அடிகளார் இக் குட்டிக்கதையைத் தொடர்ந்து உலகுக்குக் கூறிய மாபெரும் அறிவுரை உலக மகாசமயங்களின் பெருமாநாட்டில் நிகழ்த்திய நிறைவுரைதான்.

"உலக சமயப் பெருமன்றம் நடந்து முடிந்த ஒன்றாகிவிட்டது. இதை உருவாக்க முயற்சி செய்தவர்களுக்கு இறைவன் துணை நின்று, அவர்களுடைய தன்னலமற்ற உழைப்புக்கு வெற்றிவாகை சூட்டியுள்ளார்.

"இந்த அற்புதமான கனவை, முதலில் கண்டு, பிறகு அதை நனவாக்கிய அந்தப் பரந்த இதயமும், உண்மையில் பற்றும் கொண்ட அந்த உத்தமர்களுக்கு என் நன்றி, இந்த மேடையில் கரைகடந்து வழிந்தோடிய உணர்ச்சிப் பொழிவுக்கு என் நன்றி. இங்கு வந்திருந்த அறிவு கூர்ந்த பெருமக்கள் என்மீது ஒருமித்த அன்பு காட்டியதற்காகவும், சமய சமரசத்தின் ஒவ்வொரு கருத்தையும் அவர்கள் பாராட்டியதற்காகவும் அவர்களுக்கு என் நன்றி. இந்த இன்னிசையில் அவ்வப்போது சில அபசுரங்கள் கேட்டன. அவர்களுக்கு என் சிறப்பு நன்றி. ஏனெனில் அவர்கள் தங்கள் மாறுபட்ட ஒலியால், பொது இன்னிசையை மேலும் இனிமையாக்கினார்கள்.

"சமய ஒருமைப்பாட்டுக்குரிய பொதுநிலைக் களம் பற்றி அதிகம் பேசப்பட்டது. என் சொந்தக் கோட்பாட்டை இப்பொழுது கூற நான் துணியப்போவதில்லை. ஏதாவது ஒரு சமயத்தின் வெற்றியாலும், மற்ற சமயங்களின் அழிவாலும் இந்த ஒருமைப்பாடு கிட்டும் என்று இங்குள்ள யாரேனும் நம்பினால், அவரைப் பார்த்து நான், "சகோதரரே! உம்முடைய நம்பிக்கை வீண்" என்று சொல்லுவேன். கிறிஸ்துவர் இந்துவாகிவிட வேண்டுமா? கடவுள் தடுப்பாராக! இந்துவோ, பௌத்தரோ

## செல்வி கிருத்திகா அரங்கேற்றம்

★ திருமதி ரமா குமார சுவாமி, திரு குமாரசுவாமி (மேனேஜர், கனரா வங்கி, கோபாலபுரம் கிளை) தம்பதியினரின் செல்வ மகளும், புஷ்பாஞ்சலி நாட்டியப் பள்ளி மாணவியுமான செல்வி கிருத்திகாவின் பரத நாட்டிய அரங்கேற்றம் அண்மையில் மயிலை பாரதீய வித்யா பவன் கலை அரங்கில் விமரிசையாக இடம்பெற்றது.

பத்தே வயது நிறைந்த கிருத்திகா ஹரிகேச நல்லூர் முத்தையா பாகவதரின் கமாஸ் ராக திருவர்ணத்தை மிக அழகாக, அரைமண்டியுடனும், அடவுகளுடனும், தீர்மானங்களுடனும் ஆடி அவையோரின் பாராட்டுதல்களைப் பெற்றது குறிப்பிடத் தக்கது.

திரு நீலகண்ட சிவனின் ஆரபி ராக பதமான "ஓராறு முகனே" சிறப்பு நிகழ்ச்சியாக விளங்கியது.

அழகிய முகமும், நீண்ட பெரிய விழிகளும் பாவங்களை எளிதில் கொண்டு வரும் பாங்கும், லய ஞானமும் கொண்ட கிருத்திகாவிற்கு வளமான எதிர்காலம் உண்டு. குரு ராதாவின் தரமான நட்டுவாங்கம் நிகழ்ச்சி வெற்றி பெற உதவியது.

செட்டிநாடு வித்யாஸ்ரமம் பள்ளியில் 6ஆம் வகுப்பு படிக்கும் கிருத்திகா, படிப்பில் மட்டுமின்றி ஓவியம் வரைதல், வண்ணந் தீட்டுதல், நீச்சல் ஆகிய துறைகளிலும் முதலிடத்தையே பெற்று வருகிறாள்.

தங்கம்

---

கிறிஸ்தவராக வேண்டுமா? கடவுள் தடுப்பாராக!

"விதை தரையில் ஊன்றப்பட்டு, மண்ணும், காற்றும், நீரும், அதனைச் சூழ அமைக்கப் படுகின்றன. விதை மண்ணாகவோ, காற்றாகவோ, நீராகவோ ஆகிவிடுகிறதா? இல்லை. அது செடியாகிறது. தனக்குரிய வளர்ச்சி விதிக்கு ஏற்ப விருத்தியடைகிறது. காற்றையும், மண்ணையும், நீரையும் தனதாக்கிக் கொண்டு, தனக்கு வேண்டிய சத்துப் பொருளாக மாற்றி, ஒரு செடியாக வளர்கிறது.

"சமயத்தின் நிலையும் இதுவே. கிறிஸ்துவர், இந்துவாகவோ பௌத்தராகவோ மாற வேண்டியதில்லை. அல்லது இந்து, பௌத்தராகவோ கிறிஸ்துவராகவோ மாற வேண்டியதில்லை. ஆனால் ஒவ்வொருவரும் மற்ற சமயங்களின் நல்ல அம்சங்களைத் தமதாக்கிக் கொண்டு தம் தனித்தன்மையைப் பாதுகாத்துக் கொண்டு, தம் வளர்ச்சி விதியின்படி வளரவேண்டும்.

"இந்த அனைத்துச் சமயங்களின் பெருமன்றம் உலகத்துக்கு எதையாவது எடுத்துக் காட்டியுள்ளது என்றால் அது இதுதான். பரிசுத்தம், தூய்மை, கருணை இவை உலகின் எந்த ஒரு கோயிலின் தனிப்பட்ட சொத்து அல்ல என்றும், ஒவ்வொரு சமய முறையும் மிகச் சிறந்த பண்புள்ள ஆண்களையும், பெண்களையும் தோற்றுவித்திருக்கிறது என்றும் நிரூபித்துள்ளது என்பதுதான். இந்த சாட்சியங்களுக்கு முன்பு, தம் சமயம் மட்டும்தான் தனித்து வாழும். மற்ற சமயங்கள் அழிந்து விடும் என்று யாராவது கனவு காண்பார்களானால் அவரைக் குறித்து நான் என் இதய ஆழத்திலிருந்து பச்சாதாபப்படுவதோடு, இனி ஒவ்வொரு சமயத்தின் கொடியிலும் "உதவி செய்; சண்டை போடாதே, ஒன்றுபடுத்து, அழிக்காதே, சமரசமும் சாந்தமும் வேண்டும்: வேறுபாடு வேண்டாம்" என்று எழுதப்பட்டிருப்பதையும் அவருக்குச் சுட்டிக்காட்ட விரும்புகிறேன்".

இதுதான் நம் பாரதத்தாயின் தவப் புதல்வன், உலகம் ஏற்றிப் போற்றிய மாமுனி விவேகாநந்த சுவாமிகள், அழியும் மனித இனத்துக்குக் கூறிய அழியாத உரை. இந்த சிகாகோ சொற்பொழிவின் நூற்றாண்டு விழா வன்று நாம் இதை நினைவு கூர்வோமாக!

# ஞானம் பிறந்தபோது



சுபப்ரியா

"ஐயோ, என்னம்மா இது? குழம்பு ஒரே உப்பு? ஏய், ஸோனா" சாப்பாட்டு மேஜையில் முகேஷ் கத்தினான். தங்கையை அழைத்தான். அவன் தாயும் தங்கையும் ஒருவரை ஒருவர் விஷமமாகப் பார்த்துக் கொண்டனர்.

"இன்னிக்கு சமையல் பூமா மன்னிதான், அண்ணா" ரொம்பக் குழைவுடன் சொன்னாள் ஸோனா.

பூமா திடுக்கிட்டு நின்றாள். பெருமாளுக்கு நிவேதனம் செய்ததும் அவள் அந்த டி.வி. விளம்பரத்தில் காட்டுவதுபோல ஒரு சொட்டுக் குழம்பை எடுத்து இடது உள்ளங்கையில் ஊற்றி ருசித்துப் பார்த்தாளே. ஜோராகத்தானே இருந்தது? பின் எப்படி உப்பு அதிகமாயிற்று?

"ம்... பெண்ணுக்கு உப்புப் போட்டுச் சமைக்கக்கூடக் கத்துத் தராமல் வளர்த்திருக்கிறார்கள். படிச்சால் ஆச்சா? தேவடியாள் மாதிரி மினுக்கத் தெரிகிறது..."

இந்த அபஸ்ருதிச் சொல்லைக் கேட்டு பூமா அதிர்ந்து போனாள். அதைவிட அதிர்ந்தாள், தன் மனைவியை ஒருத்தி – அது தாயாகவே இருந்தாலும் – அப்படி ஒரு பேச்சுச் சொல்வதைக் கேட்கும் ஒரு கணவன் சுரணையற்று வாயை மூடிக்கொண்டு இருப்பதைப் பார்த்து! அவளுக்கு நினைவு வந்தது. சமையலை முடித்துவிட்டு பூமா கை, கால், முகம் கழுவி வரச் சென்று திரும்பும்போது ஸோனா சமையல் அறையிலிருந்து அவசர அவசரமாக வெளியில் ஓடி வந்தாளே... ஏன்? அப்படியும் செய்திருப்பாளோ?

தன்னையுமறியாது ஸோனாவைப் பார்த்தாள் பூமா.

"என்ன மன்னி, முறைக்கிறே? நான் என்ன உன் சமையலில் உப்பை அள்ளிப் போட்டேனான்னு பார்க்கிறீயா? ஹூம்".

காலை நேரத்தில் தலையை இழைய வாரி, பூச்சூட்டி, முகத்தில் 'மேக்அப், லிப்ஸ்டிக்குடன்' இஸ்திரி போட்ட புடவை கட்டி நிற்கும் பெண் தேவடியாள் மாதிரி மினுக்கவில்லையா?

ஓ! அவள் இந்த வீட்டுப் பெண்! தான் மருமகளாயிற்றே! ம்... முகேஷ் தங்கைக்கு இடம் கொடுக்கட்டும்; ஆனால் தனக்கும் ஆதரவு காட்டக் கூடாதா? ஹூம்... எப்படிச் செய்வான்? வீட்டுக்கு வந்த புது மருமகளிடம் ஒரு மாமியார், "உனக்கு பவுடர், ஃபேர் அண்டு லவ்லி, ஹேர் ஆயில் வாங்கிக் கொடுக்க என் மகனுக்குக் கட்டுப்படி ஆகாதம்மா! அதிலும் உனக்கோ, அடியம்மா, 'கூந்தல் குடியைக் கெடுக்கும்' என்பார்களே அதுபோல முழங்கால் வரை நீண்ட முடி. அப்பப்பா, அதற்கு எண்ணெய் தேய்க்க உன் அப்பன்தான் எண்ணெய், ஷாம்பூ வாங்கப் பணம் அனுப்ப வேண்டும்" என்று கூறியபோது வாயை மூடிக் கொண்டிருந்தவன் தானே அவன். தன் மானத்தைக் காப்பாற்றிக் கொள்ளவாவது 'அம்மா, இனி அதெல்லாம் ஓம் பொறுப்பில்லையா?' என்று சொன்னான் இல்லையே! இத்தனைக்கும் அவன் சம்பாதிக்காத 'கபோதி' இல்லை! சயின்டிஸ்ட். ஏழாயிரம் சம்பாதிப்பவன். இதைப் பார்த்துத்தான் வேறு பூர்விகச் சொத்து என்று பிரமாதமாக இல்லாவிட்டால்கூட (கிராமத்தில் ஒரு ஒட்டு வீடு தவிர) பையன் புத்திசாலி பிழைத்து முன்னேறுவான் என்றுதான் தன் ஒரே மகளை சக்திக்கு மீறி ஐம்பது பவுன் நகை போட்டு ஏகப்பட்ட சீர்வரிசைகள் (கோதையம்மாள் கொடுத்த 'லிஸ்ட்' படி) செய்து முகேஷுக்குத் தாரை வார்த்தார் ராமாச்சாரி. அவர்கள் ஆதி நாளில் கஷ்டப்பட்டிருக்கலாம்; பணத்தின் அருமை தெரிந்தவர்களாய் இருக்கலாம். அதற்காக மருமகள் என்று வந்த பின், இன்னும் அல்ப விஷயங்களுக்குக்கூட அவள் அப்பன்தான் செய்ய வேண்டும் என்பது எத்தனை ஈன புத்தி! என்னதான் தங்கையிடம், தாயிடம் அன்பு இருந்தாலும் முகேஷிற்கு ஒரு 'லிமிட்' தெரியாதா? பூமா உள்ளுக்குள் புகைந்தாள். அதுமட்டும் தானா, பூமாவும்தானே இரண்டாயிரம் சம்பாதிக்கிறாள். ஆனால் அதை அப்படியே மாமியாரிடம் கொடுத்து விடவேண்டும் என்பது கல்யாணத்திற்கு முன்பே பேசி முடிவாகிவிட்ட பேரம்; எழுதாத சட்டம்!

"அவர்களெல்லாம் இத்தனை உப்புப் போட்டு சோறு தின்பவர்கள் மாதிரி இல்லையே... ரோஷம் கெட்ட ஜன்மங்களாகத்தானே இருக்கிறார்கள்" கோதை நொடித்தாள்.

"அம்மா, ஒண்ணு பண்ணலாம். நாளையிலேயிருந்து நம்ப மூணு பேருக்கும் நீ சமையல் பண்ணிடு. உப்போ காரமோ, மன்னி அவளுக்குத் தனியே தானே சமைச்சுப்பாள். தினம் ஓர் ஆழாக்கு அரிசி வேணா கொடுத்துடலாம்..." ஸோனா ரொம்ப தாராளமாகப் படி அளந்து பேசினாள்.

பூமாவிற்குத் தூக்கிவாரிப் போட்டது. இதென்ன கூத்து? கணவன் முகத்தை நோக்கினாள். அது கல்லாக இருந்தது. அல்லது தங்கையின் அறிவைப் பாராட்டியதோ?

"ஒரு கண்டிஷன். நாமெல்லாம் குளித்துச் சமைத்து அடுப்பை ஒதுக்கிய பின்தான் அவள் பாத்ரூமுக்கோ, சமையலறைக்கோ வரலாம். அதற்குள் வீடு பெருக்கித் துடைத்து, பத்துப் பாத்திரம் தேய்த்து, நம் துணிமணிகளைத் தோய்த்து முடிக்கட்டும் அவள்..."

"என்ன, ஸோனா, நான் ஆபீஸ் போகவேண்டாமா, அப்புறம்? பழைய ஆபீஸானாலும் புதிய 'பிராஞ்ச்' இல்லையா இங்கே. ஆமாம்... வேலைக்காரி 'உம்மி' என்னானாள்?" பூமா சிரித்துக் கொண்டே நிலைமையைச் சமாளிக்க முயன்றாள்.

"உம்மியா? அவளை நிறுத்தியாச்சே. மூணு பொம்மனாட்டிகள் இருக்கும்போது அவள் எதுக்கு?" மாமியார் சட்டம் பேசினாள்.

"ஆனால் நான் வீட்டிலிருப்பவள் இல்லையே! வேலைக்குப் போகிறேனே!" பூமா சாதாரணமாகத்தான் கேட்டாள்.

"என்ன என் தங்கை வீட்டிலிருக்காளேன்னு சொல்லிக் காட்டறியா? அவள் இந்த வீட்டுச் செல்லப் பெண்ணாக்கும்" முகேஷ் இப்போது கல்லாக இல்லை!

'ஆனால் நான் மருமகளாக்கும்' உள்ளுக்குள் முணுமுணுத்த பூமாவிற்கு அலுத்து வந்தது. இவர்களிடம் பேசிப் பயனில்லை!

மறுநாள் சொன்னபடியே பூமாவிற்குத் தனிச் சமையல் ஒதுக்கப்பட்டது. வேலைக்குப் போக ஏற்படும் காலதாமதம் அவளை உறுத்தியதைவிடத் தன்னை எல்லோரும் ஒதுக்குவதுதான் அவளுக்குப் பொறுக்க முடியாததாக இருந்தது. ஆனால் வயிறு இருக்கிறதே. ரோஷப்பட்டால் எப்படி முடியும்?

கையில் பிற்பகலுக்காக அவள் நாலு துண்டு ரொட்டியைக் கட்டிக் கொண்டபோது 'கல[illegible]வென்று சிரிப்பொலி கேட்டது. "ஏண்டி, இப்போ சாப்பிட்டியோனோ? அப்புறம் கைக்கு என்ன இன்னும்? எத்தனை தடவை சாப்பாடு? நீ என்ன மனுஷியா, பேயா?" மகா வியப்போடு விசாரித்தாள் கோதை. "அப்புறம் மிச்சம் இருக்கிற சாதத்தை ராத்திரி மோர் ஊத்திச் சாப்பிடு... அப்புறம் சமையல் உள்ளைச் சுத்தமாக அலம்பி விட்டுடு. இன்னையில் இருந்து அரை லிட்டர் பால் உனக்குத் தனியாகச் சொல்லியிருக்கேன். கணக்கு வச்சுக்கோ. உன் சாப்பாடு காய்கறிச் செலவு சிக்கனமாகவே இருக்கட்டும். மிச்சப்பணம் அப்படியே என்கிட்டே வரணும். 'தாம் தூம்' பண்ணலாம்னு நெனைக்காதே..."

அன்று எப்படியாவது வாய் விட்டுக் கணவனிடமே கேட்டு விடத் தீர்மானித்தாள் பூமா.

"ஏன்னா, இதெல்லாம் ஏன் இப்படி? என்னை ஏன் ஒதுக்குகிறீர்கள்? நான் நீங்கள் தாலி கட்டியவள் இல்லையா?"

"தாலி கட்டினதற்காகத்தான் இந்த அறைக்குள்ளாவது இடம் உனக்கு." முகேஷ் பெரியதாகச் சிரித்தான்.

"ஹூம்... அறைக்குள் இடம் தாலி கட்டிய மனைவி என்பதற்கா... பூமா என்ற அழகிய தாசிக்கா". பூமா உள்ளூறக் குமுறினாள். 'சேச்சே'. வாய் தவறிவிட்டது குரல்!

"என்ன... 'சேச்சே'யா? கழுத்தைப் பிடித்து வெளியே தள்ளுவேன்... வாயிலேயே போடுவேன். ஏமாத்துக்காரன் பொண்ணுக்குப் பேச்சு என்னடி..." முகேஷ் சீறினான்.

"யார் யாரை ஏமாத்தினார்கள்? ஏன் எத்தனை சொன்னாலும் நம்பிக்கை இல்லாமல் இப்படிப் பேசுகிறீர்கள்?" பூமாவிற்குத் தொண்டையை அடைத்தது.

"உனக்கே தெரியும். எனக்கு மூணு பவுனில் மைனர் செயினும், வைர மோதிரமும் போட ஆரம்பத்திலேயிருந்தே உன் அப்பன் பேரம் பண்ணிக் கொண்டிருந்தான். கடைசியில் என்னடான்னா அது இரண்டும் வைத்திருந்த 'டப்பா' மட்டும் காணாமல் போயிடுத்துன்னு கல்யாண மண்டபத்திற்கு வந்து நாடகம் போட்டீர்கள்! நம்பச் சொல்லறியா?"

"கடவுளே" - பெருமூச்சு விட்டாள் பூமா. சிலரைத் திருத்தவே முடியாது. பத்தாயிரம் வரதட்சணையும் வாங்கிக் கொண்டு யாரோ மூன்றாம் தலைமுறை உறவுப் பாட்டிக்குப் பயணம் செய்ய முடியாது என்று கல்யாணத்தையும் சென்னையில் அவர்கள் வீட்டு வாசலில் வைத்துக் கொள்ளச் சொன்னார்கள். ஊர்விட்டு ஊர் பழகாத இடத்தில் வந்து. கல்யாணம் பண்ணுவது உடல், பொருள் எல்லாவற்றிலும் எத்தனை சிரமம் என்று பிள்ளையைப் பெற்ற புண்ணியவதி எண்ணிப் பார்க்கவில்லை. கல்யாணத்திற்குப் பத்து நாள் இருக்கும்போது கடைசி 'இன்டன்ட்டாக' வந்தது மைனர் செயினும் வைர மோதிரமும்! பூமாவின் அப்பா தலை தீபாவளி வரையில் காலவரை கேட்டார். மறுக்கப்பட்டது. கடைசி நிமிஷத்தில் கல்



யாணத்தை நிறுத்தமாட்டார் என்ற திமிர்! அதுகூட எல்லா பேரமும் 'ஃபோன்' மூலம்தான். எழுத்தில் எதையும் 'கமிட்' பண்ணிக் கொள்ள வில்லை! தட்டான் கடைசி நிமிஷத்தில் தான் அவைகளைக் கொடுத்தான். அதை அவசரமாக ஏதோ ஒரு சூட்கேஸில் வைத்தார்கள். ஆனால் போதாத காலம், ஊர் விட்டு ஊர் வந்து, கொண்டு வந்த முப்பத்து மூன்று சாமான்களில் அந்த ஒரு பெட்டி மட்டும் எங்கேயோ தவறி விட்டது. அதில் இன்னும் சில துணி மணிகள்கூடப் புதிது. உறவினர் களுக்குப் பரிசளிக்க வாங்கியது இருந்தது என்றால் யார் கவலைப் படுகிறார்கள்! கடைசியில் என்னா யிற்று... நொடிப்பும் நிஷ்டூரமுமாக அந்த இரவு கழிந்தது. தாலி கட்டித் தனி அறைக்குள் இடம் கொடுத்த தற்குக் கண்ட பலன் அதுதான். ஆனால் அதற்கும் மறுநாளே ஒரு முடிவு வந்தது.

மறுநாள் காலை பூமா எழுந் திருக்கும்போதே ஸோனா ஒரே அழுகையும் ஆகாத்தியமுமாக இருப் பதைக் கண்டு நடுங்கினாள்.

"நேத்து இரவு எனக்குத் தூக்கம் பிடிக்காமல் அண்ணாவை ஒரு 'ரவுண்டு' சீட்டாடக் கூப்பிட்டேன். 'டயர்டாக' இருக்குன்னு சொல்லிப் படுக்கை அறைக்குப் போனவன் அப் புறம் எத்தனை நேரம் விளக்கைப் போட்டுண்டு பெண்டாட்டியோடு கொஞ்சிக் கொண்டிருந்தான் தெரி யுமா, அம்மா. அவள் சரியான மயக்குக்காரிதான். என்னை வேண் டாதவளாக்கிட்டாளே!" என்று பல சுருதிகளில் அவள் புலம்பினாள். என்ன அசிங்கம்?"

வீட்டில் வயது வந்த பெண்ணிருக் கும்போது பிள்ளைக்குக் கல்யாணம் பண்ணக்கூடாது என்ற தத்துவம் பூமாவிற்குப் புரிந்தது. ஆனால் அவர்கள் திட்டமே பூமாவைப் பண்ணிக் கொண்டு அந்த நகை, பாத்திரம் பண்டங்களை அப்படியே ஸோனாவிற்கு 'லபக்' செய்து விடவேண்டும் என்பதுதானே! அதை வாய்விட்டு வெளிப்படையாகக் கூறவும் அவர்கள் வெட்கப்பட வில்லை! ஆனால் வேறு விதமாகச் செயல் பட்டார்கள். 'உன் அப்பன் என் பிள்ளைக்குக் கேட்ட நகைகளைப் போடும் வரை நீயும் எதையும் போட்டுக் கொள்ளக்கூடாது' என்று தாலிச்சரடு, தங்கத்தோடு மூக்குத்தி தவிர எல்லா நகைகளையும் பூமா விடமிருந்து பிடுங்கி லாக்கரில் வைத்து விட்டார்கள். அதுதான் அவள் தன் நகைகளைக் கடைசியாகப் பார்த்தது! ஆக அன்று முதல் முகேஷ் தங்கை, தாயாருடன் பேசி, விளையாடிவிட்டுத் தான் படுக்கத் தன் அறைக்குள் நுழைவான். அதற்குள் பூமாவும் தூங்கிவிடுவாள். அவனும் அதைப் பற்றிக் கவலைப்படாததுதான் அதி சயம். அம்மாவின் ஆதிக்க சக்தி!

தலை தீபாவளி வந்தது. பூமா சீர் வகைகளை ஏற்பாடு செய்ய என்று முதலில் பிறந்தகம் அனுப்பப் பட்டாள். ஆனால் பின்னால் அவன் பண்டிகைக்கு வரவில்லை. தான் ஏதோ பயிற்சிக்காக டில்லி போவ தாகவும் ஆறு எட்டு மாதங்களாகலாம் என்றும் ஹைதராபாத் குடித்தனத்தை அதனால் கலைக்க விரும்புவதாக வும், அதனால் பூமா மறுபடி தன் வேலையை பம்பாய்க்கு - பிறந்த வீட்டு ஊருக்கு மாற்றிக் கொள்வது நலம் என்றும் பண்டிகையன்று ஒரு செய்திக் கடிதம் வந்தது. அதில் தான் வர இயலாததற்கு வருத்தப் பட்டு ஒரு வரிகூட இல்லை. பூமா



ஹைதராபாத் வந்து ஒரு வாரம் இருந்து வேலையை மாற்றிக் கொண்டான். ஆனால் அதன்பின் பூமாவிற்கு எந்தச் செய்தியும் இல்லை. அவன் டில்லி போனதோ விலாசமோ, கோதை, ஸோனா சென்னைக்கருகே ஒரு கிராமத்திற்குத் திரும்பியது பற்றியோ தெரியவில்லை. பூமாவும் முதலில் ஏற்பட்டிருந்த வெறுப்பில் ஆறு மாதம் 'பிகு'வாகவே இருந்தாள். ஆனால் ராமாச்சாரிக்கு ஏனோ உறுத்திக் கொண்டேயிருந்தது. இடையே அவர் ஒருநாள் மாதுங்காவில் சந்தித்த ஒரு நண்பர் கூறிய செய்தி வேறு அவரைச் சிந்திக்கத் தூண்டியது. மனது பொறுக்காமல் ஹைதராபாத்துக்கே வந்து ஆபீசில் விசாரிக்கத் தொடங்கியபோது அவருக்குக் கிடைத்த செய்தி நம்ப முடியாததாக இருந்தது. "ஸோனாவிற்கு மிக ஆடம்பரமாகச் சென்னையில் தாசப்பிரகாஷில் வைத்துக் கல்யாணமாகிவிட்டது. முகேஷ் ஏதோ மேல் படிப்புக்கென்று அமெரிக்கா சென்றுவிட்டான்" என்ற செய்திகளை அவரால் ஜீரணிக்கவே முடியவில்லை. என்னது மனைவிக்குத் தெரியாமல் இதென்ன மாற்றங்கள்...'' இதற்குப் பொருள் என்னவாக இருக்கும்?

அவருடைய குழப்பங்களுக்கு விடை சென்னையில் கோதையம்மாள் மூலம் கிடைத்தது. "என் பிள்ளைக்குத் திருட்டு, ஏமாற்றுக் குடும்பப் பெண்ணுடன் வாழ இஷ்டமில்லை. டைவோர்ஸுக்கு ஏற்பாடு செய்துவிட்டுத்தான் போயிருக்கிறான். சீக்கிரம் நோட்டீஸ் வரும். மேல் படிப்போடு அவன் அங்கேயே வேலை பார்த்து 'ஸெட்டில்' ஆகவும் ஆசை. பேசாமல் பூமா விலகிட்டா கௌரவமாயிருக்கும்...'' திட்டவட்டமாகக் கிழவி கூறிவிட்டாள்.

பெற்றவர் தான் போட்ட நகைகள், வைத்த சீர் பாத்திர வகைகள், பூமாவின் புடைவைகள் இவைகள் பற்றிக் கேட்டபோது கை விரித்து விட்டாள் கிழவி! தனக்கு எதுவும் தெரியாது என்றும் ஒருகால் பூமாவே அவைகளைப் பிறந்தகத்திற்கு எடுத்துப் போயிருக்கலாம் என்றும் வீணாகக் கலாட்டா செய்ய வேண்டாம் என்றும் கிழவி கூறிவிட்டபோது, ராமாச்சாரி வாயடைத்துப் போனார். என்ன அபாண்டம்! பூமா பொருள்களைத் திருப்பிக் கொண்டு போய் விட்டாள் என்று சத்தியம் செய்பவளை என்ன செய்வது?

தந்தையும் மகளும் எங்கெங்கோ நியாயம் கேட்டு அலைந்தனர். ஆனால் பெண்கள் சங்கம், சட்டம், சமஉரிமை எல்லாம் அவனுக்குத்தான் சாதகமாகப் பேசியது. அலுவலகத்தைப் பொறுத்தவரை மிக சாமர்த்தியமாகத் திட்டம் தீட்டி,



வெகுநாள்களாக முயன்று எல்லாவற்றையும் - பாஸ்போர்ட் விசா உட்பட - திறன்படச் சமாளித்துப் பக்கத்தில் படுத்திருக்கும் மனைவிக்குக்கூடத் தெரியாமல், அவளுக்கே குழி பறித்து வென்று விட்டான் முகேஷ்! அதனால் ஆபீஸ் மூலம் மனைவியை ஏமாற்றிச் சென்றவனை - அவளை ஏமாற்றுக் குடும்பம் என்று அவன் கூசாமல் ஏசினாலும் ஒன்றும் செய்ய முடியாது என்று கூறி அவளுக்கு அனுதாபப் பட்டதுடன் விட்டுவிட்டனர்! மற்றவை பர்சனல் - அதனால் அவர்களால் செய்ய முடிந்தது ஒன்றும் இல்லை தான். "நாடு கடந்து சென்று விட்டவனை எப்படிப் பிடிப்பது? 'நீயாகக் கெஞ்சிக் கடிதம் எழுது; அல்லது பெருமுயற்சி செய்து நீயும் அங்கேயே சென்று பார் அவனை" என்று ஏதோ பக்கத்து ஊருக்கு வழி சொல்வது போலக் கைகாட்டிவிட்டது, போலீஸ் கூட! இதற்கு ஒரு 'விமன்ஸ் ஸெல்' - அதற்கு அதிகாரிகள் வேறு!

இதெல்லாம் பழங்கதை! நடந்து முடிந்து மறக்கத் தொடங்கிவிட்ட நிகழ்ச்சி! இப்போது பூமா, பூமா முகேஷ் அல்ல - மீண்டும் வெறும் பூமாதான். நடந்ததை ஒரு கெட்ட கனவாக மறந்து விட்டாள். பழைய ஆபீஸையும் விட்டு விட்டு ஒரு கல்லூரியில் 'லெக்சரர்' ஆகிவிட்டாள். இடமாற்றமாக - ஏன் நல்ல பையனாகக் கிடைத்தால் மறுமணம்கூடச் செய்து கொள்ளத் தயார் என்பதுதான் சூடான செய்தி.

"தன்னை ஏமாற்றி - குள்ளநரிபோல ஆண்மைவீரம் இல்லாது ஓடிய ஒரு கயவனைப் பழி வாங்குவதுபோல - "நீ இல்லாமல் என் வாழ்க்கை அஸ்தமித்து விடவில்லை; உனக்குக் கர்ப்பூர வாசனை ஒத்துக்கொள்ளவில்லை. ஆனால் அதே கர்ப்பூரத்தைப் பய பக்தியுடன் மதித்து ஏற்க இன்னொருவன் இருக்கிறானடா" என்று காட்டவாவது பூமா மறுமணம் செய்து கொள்ள ஆசைப்பட்டது உண்மை தான். தனக்கு மீண்டும் ஒரு வாழ்வை அமைத்துக் கொள்ளத் தகுதி உண்டு என்பதே அவள் வாதம்.

"ஆங்... என்ன இன்னொரு கல்யாணம் பண்ணிக்கவா?" கோதை கொதித்து எழுந்தாள். தன் மகன் அவளை ஒதுக்கியபோது மகிழ்ந்த மாமியார் மனம், உறவு விட்டுப் போனபின்னும் அவள் வாழ்வதைக் கண்டு எரிந்தது. முகேஷுக்கு எழுத வேண்டும். அவளுக்கு நடக்கும் முன் அவனுக்கு ஒரு பெரிய பணக்காரப் பெண்ணை முடித்துவிட வேண்டும். அவள் மூக்கை உடைக்க வேண்டும்! கோதை பரபரவென்று செயல் பட்டாள். மகனுக்குக் கடிதம் பறந்தது, உடனே வந்து ஒரு நல்ல பெண்ணை மணந்து கொள்ளும்படி. அதைப் பற்றி மேற்கொண்டு முடிவு செய்ய ஸோனாவையும் வரச் சொன்னாள்.

முகேஷிடமிருந்து உடனே பதிலும் வந்தது.

"அம்மாவிற்கு,

நாம்தான் அவளைத் தொலைத்துத் தலைமுழுகிவிட்டோமே. இனி அவள் எக்கேடு கெட்டால் நமக்கு என்ன? ஏதோ அவள் பெயரைச் சொல்லி வசூலித்து நாம் திட்டமிட்டபடி ஸோனாவின் சீர்வகைகளைச் சரிகட்டியதற்கு நன்றி சொன்னால் போதும். ஆனால் பெண்ணான அவளே மறுமணம் செய்து கொள்ளும்போது, ஆண் மகனான நான் தனியாக இருக்கிறேனே என்ற உன் தாய் மனத்தின் ஏக்கம் எனக்குப் புரிகிறது. உனக்குத்தான் என்மீது எத்தனைப் பாசம் அம்மா! ஆனால் உனக்கு அந்தக் கஷ்டம் வேண்டாம். அம்மா, இங்கு நானே ஒரு பெண்ணைத் தேர்ந்தெடுத்துவிட்டேன். இங்குள்ள பெரிய 'மில்லியனேரின்' பெண் எமிலிதான் அவள். ஒரு யங் விடோ! ஆனால் எனக்கும் இரண்டாம் மனைவிதானே இது! அவள் நினைத்தால் என்னையே தங்கத்தால் இழைத்து விடுவாள். நல்ல பெண். கூடிய சீக்கிரம் அவளுடன் உன்னையும் ஸோனாவையும் பார்க்க அங்கு வருகிறேன்... உன் ஒரே அன்பு மகன் முகேஷ்".

கோதைக்குத் தலை சுற்றியது. பெருமாளே இது என்ன சோதனை?"

"அடியம்மா - உனக்கு இனிமே யார் ஆதரவு? யார் ஒரு வாய் சோறு

போடுவா?" ஸோனா கூடச் சேர்ந்து ஒப்பாரி வைத்தாள்.

"ஸோனா, நீகூட என்னடீ. என்னைப் பிரிச்சுப் பேசறே..." கோதை திகைத்தாள்.

"ஐயோ... அம்மா... அண்ணன் ஒரு வெள்ளைக்காரியைக் கட்டிண்ட சேதி தெரிஞ்சா என்னையே என் வீட்டுக்காரா மதிக்கமாட்டாளே! அதுலே உன்னை வேறே நான் எப்படிக் கொண்டு வச்சுக்க முடியும்?"

"அடிப்பாவி, உன்னால்தானேடி அந்தப் பெண் பூமாவை ஒட்டவிடாமல் பண்ணினேன். அத்தனை படிச்ச, அழகான, கெட்டிக்காரப் பெண்ணை உனக்காகத்தானே ஆட்டி வச்சேன்?"

"அம்மா, உன் பிள்ளை இன்னும் முகுந்தன்ங்கற முகேஷாகத்தான் இருப்பான்னு நினைக்கிறியா? அவன் ஒரு மோஸஸ் அல்லது தாமஸாக ஏற்கனவே ஆகியிருப்பான். அம்மா இதை தயவு செஞ்சு எங்கள் வீட்டுப் பேர்கிட்ட மூச்சு விட்டுடாதே! அவனை வராதேன்னு சொல்லு. ஏதோ உனக்கு மாசா மாசம் பணம் அனுப்பட்டும். முடிஞ்ச வரை நீ சமைச்சுச் சாப்பிடு. அப்புறம் ஒரு முதியோர் இல்லத்துலே சேர்ந்துடு. மறந்துடாதே அம்மா. இனி அவனுக்கு நம் பணம் எதுவும் வேண்டியிருக்காது அதனாலே உன்னோட கிராமத்து வீடு, நகைகளை மட்டும் எனக்கு எழுதி விடு" - ஸோனா கூசாமல் அடுத்த நடவடிக்கைக்குப் பாய்ந்தாள்.

"அடிப்பாவி, உன்னைச் சொல்லிக் குத்தம் இல்லேடி? தப்பு என்னுடையதுதான். வீட்டுக்கு வந்த பெண்ணை எதிரியா நெனைச்சு... அவள் எதுக்கு நம் வீட்டுக்கு வந்திருக்கிறாங்கற ஞானம் இல்லாமல், அவளோடு ஒட்ட விடாமல் பண்ணி, பெத்த பெண்ணுக்கு ஏதோ உதவி பண்ணறதாக நெனைச்சு, அவள் ஏதோ எனக்கு சாதிக்கப் போறான்னு நம்பி, மூடமாக நடந்துண்டது என் தப்புத்தாண்டி! அனுபவப்பட்ட பெரியவளா அனுசரிச்சு நடக்காம, அந்த அப்பாவிப் பொண்ணை அணு அணுவாகச் சித்திரவதை பண்ணின எனக்கு இதுவும் வேணும் இன்னமும் வேணும்..." கோதை தலையில் கை வைத்துக் கொண்டு உட்கார்ந்து விட்டாள்.

ஸோனா அப்போதும் ஓர் அற்பப் புழுவைப் பார்ப்பது போல அவளைப் பார்த்துக் கொண்டு நின்றிருந்தாள்.

ஃ

# "தழும்புகள் சுமந்த கருப்பு மிதியடிகள்"

## கவியரசு நா.காமராசன்



(உழைத்து ஓய்ந்து - அறுந்துபோன எனது கறுப்பு மிதியடிகளில் விழுந்த - வெள்ளைத் தழும்புகள் எனக்குள் உருவாக்கிய கவிதை இது)

அறுவடை முடிவினிலே - வயலில்
சிறுசிறு நடைவழிபோல் - ஒரு
அழகியின் உடலினிலே
பனிச்சிடும் தேமல்கள் போல்

கறுப்பு மிதியடித் தழும்புகள்;
காலக் குதிரையின் குளம்புகள்.

ஆண்டு ஒன்று உழைத்தன - இவை
ஆண்டு விழாவில் இளைத்தன.
எத்தனை எத்தனை
பாதைகள் மிதித்தன

எத்தனை எத்தனை
சுவடுகள் பதித்தன.

ஏனோ தழும்புகள் சுமந்தன!
வெயிலை மிதித்த
இருட்டின் முதுகில்
வெள்ளைக் காயம்! - இனி

மிதியடி இன்றி வலம் வருவேன் - நான்
புதுவழி கண்டு நடையிடுவேன்.

கடும்வழிப் பாதை அடிப்படை யாகும்.
கால்கள் உழைப்பின் தூண்கள் ஆகும்.
மனதில் அங்கோர் மாளிகை தோன்றும் - எந்தன்
மிதியடித் தழும்புகள் பூத்துச் சிரிக்கும்.

# தமிழில் தவறுகளை அறிவோம்

டாக்டர். தி. முத்து-கண்ணப்பர்

**கர்ப்பம் – கற்பம்**

கருவுற்றிருத்தல், சூல் கொண்டிருத்தல் (Pregnant) என்னும் பொருளையுணர்த்தும் சொல் 'கர்ப்பம்' என்பது. 'கரு' – கர்ப்பம்.

'கற்பம்' என்றால் பிரம்மனின் ஆயுட்காலம். ஒரு கற்பம் என்பது நானூற்று முப்பத்திரண்டு கோடி ஆண்டுக் காலம். (ஆயுளை நீட்டிக்கும் மருந்துக்கும் கற்பம் என்பது பெயர். 'காய கற்பம்) எனவே சூல் கொண்டிருத்தலைக் குறிப்பிடும் சரியான சொல் 'கர்ப்பம்' என்பதுதான்.

**கர்ப்பூரம் – கற்பூரம்**

இவ்விரண்டில் 'கர்ப்பூரம்' என்று எழுதுவதுதான் சிறந்தது. (சூடம்)

"கர்ப்பூரம் போலக் கடலுப்பு இருந்தாலும்

கர்ப்பூரம் ஆமோ கடல் உப்பு" – (நீதி வெண்பா 33)

**கருப்பு – கறுப்பு**

இவை இரண்டுமே கறுப்பு நிறத்தைக் குறிப்பதாக இப்போது வழக்கிலுள்ளது.

ஆனால், 'கருப்பு' என்னும் சொல்லின் உண்மைப்பொருள் பஞ்சம்/வறுமை என்பதுதான்.

'கருமை' என்னும் பண்புப் பெயர் கறுப்பு நிறத்தைக் குறிக்கும். அதாவது கருமை கறுப்பு. ஆனால் 'கருப்பு' என்பதற்கு கறுப்பு என்று பொருள் கொள்வது சிறந்ததன்று.

எனவே நிறத்தைக் குறிக்கக் 'கறுப்பு' என்னும் சொல்லைப் பயன்படுத்துவதுதான் தக்கது. இப்போது இரண்டுமே பயனுக்கு வந்து விட்டன. கறுப்பு நிறத்தைக் குறிக்க கறுப்பு என்பதே சரியானது என்பதை நினைவில் கொள்வோம்.

**கறி(க்)காய் – காய்கறி**

சமையலுக்கு வேண்டிய மரக்கறி வகைகள், காய்கள், கிழங்குகள் முதலியனவற்றைக் காய்கறி என்று சொல்வது பெருவழக்காக உள்ளது. 'கறி' என்றால் சமைத்த, பதப்படுத்தப்பட்ட துணை உணவுப் பண்டத்தைத்தான் குறிக்கும். வீட்டில் என்ன கறி? என்றால் பொரியல், வறுவல், கூட்டு, சாம்பார் முதலியவற்றைத்தான் கூறுவோம். 'கறி' என்னும் சொல்லுக்கு ஊன் – மாமிசம் என்னும் பொருளும் உண்டு.

மரக்கறி உணவை மட்டும் உண்பவர்கள் கடைக்குச் சென்று காய்கள்தானே வாங்குவார்கள்? கறியை-இறைச்சியை எப்படி வாங்குவார்கள்? விளக்கமாகச் சொல்வதானால் கறி என்றால் சமைத்த காய், கிழங்கு வகைகள் அல்லது சமைக்காத இறைச்சி/மாமிசம் – இவற்றைத்தான் குறிக்கும். கறி(க்)காய் வாங்கி வந்தேன் என்றால் கறிக்கு உதவும் காய் வகைகளை வாங்கி வந்தேன் என்பதுதானே சரியான பொருள்.

எனவே 'கறி(க்)காய்' என்று சொல்வதுதான் சரியானது. 'காய்கறி' என்று சொல்வது அவ்வளவு சரியானதன்று. 'கறி(க்)காய்' என்பது கறிக்கு உதவும் காய் (வகைகள்) 'கறிக்கு (கு) நான்காம் வேற்றுமை உருபு 'உதவும்' என்பது பயன். நான்காம் வேற்றுமை உருபும் பயனும் உடன்தொக்க தொகை என்பது இதன் இலக்கணம். எனவே, 'கறிக்காய்' என்று சொல்வதுதான் சரியானது; முறையானது. இத்தொடர் முன்பின்னாக மாறிக் 'காய்கறி' என வழங்கி வருகிறது போலும்!

இனி முன்பின் தடுமாற்றமின்றிக் கறிக்காய் என்றே கூறுவோம்.

**கீர்த்தி – சீர்த்தி**

கீர்த்தி என்பது புகழ், பெருமை எனப் பொருள்படும்.

சீர்த்தி : என்பது 'மிகுந்த புகழ்', பெரும்புகழ்' எனப் பொருள்படும். இந்த வேறுபாடு உணரப்படுதல் வேண்டும்.

'சீர்த்தி, மிகு புகழ்' என்பது தொல்காப்பியம் (தொல், சொல் – 313)

**கொப்பளம் – கொப்புளம்**

எழுத்தாளருள் பெரும்பாலோர் 'கொப்பளம்' என்றுதான் எழுதுகிறார்கள். அது தவறு. கொப்புளம் என்பதுதான் சரி. அப்பளம் சுவைத்த நாக்குக் 'கொப்பளம்' என்று சொல்லச் செய்கிறது போலும்! வெந்நீர் அல்லது காய்ச்சிய எண்ணெய் முதலியன உடலில் பட்டால் அந்த இடத்தின் தோல் குமிழ் போல

பூரித்துவிடுகிறது. அது கொப்புளம். கொப்புளித்தல் என்றால் குமிழ்போல் பூரித்து எழுதல் என்பது பொருள். வாயில் நீரூற்றிக் குலுக்கும் போது இருபக்கத் தாடைகளும் உப்புகின்றன. அதனைக் (வாய்) கொப்புளித்தல் என்கிறோம்.

எனவே, அது கொப்புளித்தல் தான். கொப்பளித்தல் அன்று. 'ப'கரத்தை விலக்கி 'பு' கரத்தைப் புகவிட்டுக் 'கொப்புளம்' என்ற நல்ல தமிழ்ச் சொல்லையே இனிப் பயன்படுத்துவோம்.

கார்க்க - காக்க

'கடவுள் தான் கார்த்தருள வேண்டும்' 'கார்க்கக் கர்த்தர் இருக்க நாம் ஏன் கவலைப்பட வேண்டும்!. இப்படிச் சில வாக்கியங்கள் உள்ளன.

'கா' என்பது காத்தல், காப்பாற்றுதல், பாதுகாத்தல், காவல் செய்தல் முதலிய பொருள்களைக் குறிக்கும்.

'கார்க்க' என்பது பிழையானது. 'கார்க்க' என்னும் சொல்லில் 'கார்' என்றால் கருமை, கார் காலம்; மேகம் மழை; கார் நெல்/அரிசி, இருள் முதலியவற்றையும் குறிக்கும். கார்த்தல் என்றால் கறுப்பாதல் என்றும் கார்க்க - என்றால் கறுப்பாக என்றும் பொருள்தரும். காப்பாற்ற, பாதுகாக்க எனும் பொருள்களைத் தாரா.

'காக்க' என்பதுதான் சரியானது.

"யாகா வாராயினும் நாகாக்க காவாக்கால்

சோகாப்பர் சொல்லிழுக்குப்பட்டு" என்பது குறள்.

எனவே நல்ல தமிழ் காக்கப்பட வேண்டும்.

காச்சு - காய்ச்சு

'நீரைக் காச்சிக் குடிப்பது நல்லது' என்று எழுதுவது தவறு.

காய்தல் என்பது நீர் முதலியன காய்ச்சப்படுதல், சுடுதல், உலர்தல், சூடாய் இருத்தல், உஷ்ணமாய் இருத்தல் முதலிய பொருள்களைக் குறிக்கும். உடம்பு காய்கிறது; வெயில் காய்கிறது, நிலா காய்கிறது என்றும் சொல்கிறோமல்லவா?! காய்தல், கடிந்து கொள்ளுதல், கோபித்துக் கொள்ளுதல், வெறுத்தல், எரித்தல் என்னும் பொருள்களையும் குறிக்கும்.

எனவே காய்ச்சு என்பதுதான் சரியானது. 'காச்சு' என்பது பொருளற்றது. 'காச்சு மூச்சு' என்று பேசுவதைத் தவிர 'காச்சு என்னும் சொல் தமிழில் இல்லை என்றே சொல்லலாம்.

கோடிட்டுக் கட்டுதல் - கோடிக்காட்டுதல்

இச் சொற்கள் அண்மையில், புதிதாகப் படைக்கப்பட்டுத் தமிழில் தலைகாட்டத் தொடங்கியுள்ளன. இவை ஆங்கிலத்தில் 'underlined' என்னும் சொற்பொருளையுணர்த்தப் பயன்படுத்தப் படுகின்றன. 'In his speach, he has underlined this point' என்னும் வாக்கியத்தை 'அவர் உரையில் இதனைத் கோடிட்டு/கோடிக் காட்டியுள்ளார் என்று கூறுகிறார்கள். இது பொருத்தமானதா என்பதைச் சிந்திக்க வேண்டும்.

புதுப்புதுச் சொற்கள் படைக்கப்படல் வேண்டும்தான். உயிராற்றல் பெற்று உலவும் ஒரு மொழியில், நாள்தோறும் வளம்பெருகி வாழும் மொழியில் புதுப்புதுச் சொற்களும், தொடர்களும் தோன்றிக் கொண்டிருப்பது இயல்புதான்; பெரிதும் வேண்டற்பாலதுதான். ஆனால், அவ்வாறு படைக்கப்படும் புதுச் சொல்/தொடர் ஏற்கெனவே வழக்கில் உள்ள சொல்லை அழித்து விட அல்லது மறைத்து விடக் கூடாது என்பதையும், அச்சொல்/தொடர் பொருத்தமானதாகவும், சரியானதாகவும், உரியபொருள் பொதிந்தாகவும் இருத்தல் வேண்டும் என்பதையும் மறத்தல் கூடாது. அம்முறையில் இச்சொல் / தொடர் (கோடிட்டுக் காட்டுதல், கோடிக்காட்டுதல் சரியானதுதானா என்பதைச் சிந்திக்க வேண்டும்.

தமிழில் 'கோடு' என்றும் சொல் 'வளைவு' என்னும் பொருளைத்தரும். கோடு+இ= கோடி; என்பது 'வளைந்து', வளைத்து என்னும் பொருள்களைத் தருவது. அப்படியென்றால் கோடிக் காட்டுதல்' என்பது வளைந்து வளைத்துக்காட்டுதல் 'கீழ்க்கோடிட்டுக் காட்டுதல்' என்னும் பொருள்களையல்லவா தரும். அது பொருத்தமானதாகுமா?

'கோடி காட்டுதல்' என்னும் சொல் சென்னைப் பல்கலைக்கழக வெளியீடான தமிழ்க் களஞ்சியத்தில் (Tamil Lexicon Vol II பக். 1179) காணுப்படுகிறது. அதன் பொருள் 'குறிப்புக் காட்டுதல். " To hint at slightly' என்று குறிக்கப் படுகிறது. ஆனால் கோடி காட்டுதல், / கோடிட்டுக்காட்டுதல் என்னும் சொற்களைப் பயன்படுத்துவோர் அப்பொருள்களில் கூறுவதில்லை. அவர்கள் எண்ணும்பொருள்' மிகுந்த வலிமை தருவது' என்பதேயாம். அப்படியென்றால், நல்ல தமிழில் அதனை வலியுறுத்திக் கூறினார், அழுத்தந்திருத்தமாகக் கூறினார் குறிப்பிட்டுக் காட்டினார் என்னும் சொற்களுள் ஏதேனும் உரிய ஒன்றைப் பயன்படுத்தினால் மிகச் சிறப்பாகவும், பொருத்தமாகவும் இருக்கும் அல்லவா?

# ஸ்ரீராம் டிரஸ்ட் வெளியீடுகள்

145 லிங்கச் செட்டிதெரு, த.பெ.எண். 5043, சென்னை - 600 001



**சந்தனச சிமிழ்** - வசுமதி ராமசாமி - விலை: ரூ.25.00
சுமார் அறுபது ஆண்டுகளாகச் சிறந்த சிறுகதைகள் படைத்து வரும் திருமதி வசுமதி ராமசாமி எழுதி மணம் வீசும் 12 சிறுகதைகளின் தொகுப்பு. சமூகத்தின் பல்வேறு கோணங்களைப் பிரதிபலிக்கும் நூல்.




**கோலத்தில் சிக்கிய புள்ளிகள்** - வேதா கோபாலன் - விலை ரூ.30.00
'அமுதசுரபி' - சுஜாதா பிலிம்ஸ் லிட் இணைந்து நடத்திய இலக்கியப் போட்டியில் ரூ.5000 பரிசு பெற்ற நாவல். திருமதி வேதா கோபாலன் எழுதிய முதல் தொடரும், நாவலும் இதுதான். கவியரசு வைரமுத்து, நூலுக்குச் சிறப்புரை வழங்கியுள்ளார்.




**பாரதியும் புஷ்கினும்** - கமலா பத்மகிரீஸ்வரன் - விலை ரூ.16.00
அமுதசுரபி - சுஜாதா பிலிம்ஸ் லிட் இணைந்து நடத்திய 1991 -ஆம் ஆண்டில் வந்த, பாரதி இலக்கியப் போட்டியில் ரூ.5000 பரிசு பெற்ற நூல். ருஷ்யக் கவிஞர் புஷ்கினை நாம் அறியச் செய்கிறார் ஆசிரியர். முன்னுரை வழங்கியுள்ளார் டாக்டர் வே.ஞான பிரகாசம்.

**அமுதசுரபி - சிறந்த சிறுகதைகள் பதினைந்து** - விலை: ரூ.22.00
நவமணிக் கதைகள் வரிசையில் வந்த பத்து சிறந்த சிறுகதைகளுடன், 'அமுதசுரபி' சிறுகதைப் போட்டியில் பரிசு பெற்ற ஐந்து சிறுகதைகளுடன் (1990இல்) பிரகாசிக்கும் சிறுகதைத் தொகுப்பு நூல்.




**அமுதமொழி** - தொகுப்பு : அமரர் பைங்காநாடு வெங்கட்ராம சாஸ்திரிகள் - விலை: ரூ.20.00
பன்மொழிப் புலவர் பைங்காநாடு வெங்கட்ராம சாஸ்திரிகள் தொகுத்த ஸ்ரீ காமகோடி பீடாதிபதி ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதி சுவாமிகளின் அருளுரைகள். ஸ்ரீஜயேந்திர ஸரஸ்வதி சுவாமிகளின் போட்டோக்கள் நிறைந்த சிறந்த தொகுப்பு நூல்.

**அமரர் கதைகள்** - விலை : ரூ.22.50
அமரர்கள் தி.ஜானகிராமன், சுகி.சுப்பிரமணியன், ஹேமா ஆனந்ததீர்த்தன், லக்ஷ்மி, சாண்டில்யன், ஆதவன், நா.பார்த்தசாரதி, அகிலன், அழகாபுரி அழகப்பன் முதலிய ஒன்பது எழுத்தாளர்கள் எழுதிய - அனைவரும் இன்று இல்லை - அந்தச் சிறுகதைச் சிற்பிகளின் எழுத்தாற்றலும், சமூகப் பிரக்ஞையும், கற்பனை வளமும் வாடாத புதுமலராக என்றும் விளங்கும் சிறுகதைத் தொகுப்பு.




**தியாக தீபம்** - நீதியரசர் ச.மோகன் - விலை ரூ.40.00
காந்திஜியின் கொலை வழக்கு விசாரணையை இளைய தலைமுறையினரும் அறியச் செய்ய நீதியரசர் தொடர்ந்து 'அமுதசுரபி' இதழில் எழுதிய நூல். டாக்டர் நா.மகாலிங்கம் அவர்களின் அணிந்துரையையும், டாக்டர் கி.வேங்கட சுப்பிரமணியம் அவர்களின் அறிமுக உரையையும் கொண்டது.

எனவே, கோடிக் காட்டுதலையும், கோடிட்டுக் காட்டுதலையும் இனிக் கைவிட்டு செய்திகளையும், கருத்துகளையும் மனம் கோடிவிடாமலும், கோடாலும் வலியுறுத்திக் கூறுவோம், அழுத்தந்திருத்தமாகக் கூறுவோம்/எழுதுவோம்.

**கோறுகிறேன் – கோருகிறேன்**

'கோறுகிறேன்' என்பதற்குக் கொல்லுகிறேன் என்பது பொருள். திருமண அழைப்பிதழ்கள் சிலவற்றில் 'சுற்றமும் நட்பும் சூழ வந்து வாழ்த்துமாறு கோறுகிறேன்' என்று அச்சிடப்பட்டுள்ளதைக் காணலாம். மணமக்களை வாழ்த்துமாறு திருமணத்துக்கு அழைத்துக் கொல்லவா வேண்டும்? மங்கல நிகழ்ச்சியில் இப்படி அமங்கலமா?

கோருகிறேன் என்பதுதான் வேண்டுகிறேன், விரும்புகிறேன், கேட்டுக் கொள்கிறேன் முதலிய பொருள்களைத் தரும். 'கோரிகா' என்னும் தெலுங்கு மொழிச் சொல் தமிழில் வந்து இடையின (ரு) வல்லினம்மாக (று) மாறிக்கொல்லப் பார்க்கிறது.

எனவே 'வேண்டுகிறேன்' விரும்புகிறேன், 'கேட்டுக் கொள்கிறேன்' என்னும் பொருள் தரும் 'கோருதல்' (இடையின 'ரு') என்று எழுதுதல்தான் சரியானதாகும்.

**கோர்த்து – கோத்து**

'கோர்த்தல் என்னும் சொல்லின் பகுதி அல்லது (வேர்ச்சொல்/அடிச்சொல்) 'கோ' என்பதுதான். 'அல்' விகுதி பெற்று மாற்றமடைந்து கோத்தல் என்று பெயர்ச் சொல்லாகிறது. 'கோ' என்பது நுழை, புகவிடு, சேர், புனை, கட்டு என்னும் பல பொருள்களைத் தரும். அதனைக் 'கோர்' என்று சொல்வது பிழையானது. ஊசியில் நூலைக் கோத்தல், நூலில் மணியைக் கோத்தல் என்று சொல்வதுதான் சரி. பாடல்கள் பலவற்றின் தொகுப்பு நூலையும் கோவை என்பதுண்டு. ஆசாரக் கோவை முதலியன.

பாரதக் கதையில் கர்ணனோடு தாயம் ஆடிக் கொண்டிருந்த துரியோதனன் மனைவி பானுமதி, துரியோதனன் வருவதைக்கண்டு எழுந்திருக்க முயன்றாள். அவள் இடையில் அணிந்திருந்த மேகலையை, மாற்றான் மனைவி என்பதையும் மறந்து, பற்றினான் கர்ணன். மேகலையில் கோத்திருந்த மணிகள் உதிர்ந்தன. துரியோதனனைக் கண்டு அஞ்சினான் கர்ணன். துரியோதனன் அவனைத் தட்டிக் கொடுத்து, 'எடுக்கவோ கோக்கவோ' என்று கூறிய செயல் பலருக்கு நினைவிருக்கும்.

**சித்திரி – சித்தரி**

கத்தரிக்கோலைக் கத்திரிக்கோல் என்று மாற்றித் தவறாக எழுதுகின்றனர். அவ்வாறே மாற்றிச் சித்திரி என்பதை சித்தரி என்று எழுதுகின்றனர்.

ஓவியத்தைச் சித்திரம் என்கிறோம் அல்லவா? அழகாக, எழுத்தோவியமாக எழுதுவதைச் சித்திரிக்கிறார், சித்திரித்துள்ளார் என்று கூறுவது மரபு. எனவே, சொல்லோவியமாகச் சுவைபட எழுதுவதைச் 'சித்திரிக்கப் பட்டுள்ளது' என்று எழுதுவதுதானே சரியானது. 'தி'யைத் தரித்து (வெட்டி)த் 'த' ஆக்கலாமோ? இதனைச் சிந்தித்து எழுத்தோவியங்களைச் சித்திரிப்போம். ஃ



சென்னை – காஞ்சிபுரம் மார்க்கத்தில் படப்பைக்கு அருகில் ஸ்ரீநகரத்தில் அமைந்திருக்கும் ஸ்ரீமாமேரு தியான நிலையத்திற்கு ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள் சமீபத்தில் வருகை புரிந்தார்.

அண்மையில் பூமி அதிர்ச்சியில் உயிரிழந்த ஆயிரக் கணக்கான மக்களின் ஆத்மசாந்திக்காக ஒரு விசேஷ சுவாசினி பூஜையும், கணபதி வடுக பூஜையும் ஸ்ரீமாமேரு தியான நிலையத்தில் ஸ்ரீசங்கராச்சாரிய சுவாமிகளின் ஆசியுடன் நடைபெற்றது. —நாகு

# ரூ. 10,000 பரிசு பெற்ற நாவல்

# வானமெல்லாம் ஆசைக் காற்றாடி

பி.வி.ஆர்.

## 19

சகஸ்ரம் உள்ளே அரைத் தம்ளர் காப்பிக் காகச் சென்றவன், சொன்னபடி சீக்கிரம் திரும்பவில்லை.

ஈசுவரன் மெல்ல எழுந்து கூடத்தினுள் பிரவேசித்து, சமையலறையை நோக்கி நடந்தார். சகஸ்ரத்தின் வீட்டுக் கூடம் எப்போதுமே இருட்டாகத்தான் இருக்கும். சமையலறை வெளிச்சத்தில் பார்த்தபோது, கூடத்தின் எல்லையில் சுவரோரமாய் ராஜி படுத்துக் கொண்டிருப்பதைக் கண்டார். அவளுக்கு வாரத்தில் ஒரு தடவையாவது ஒற்றைத் தலைவலி வரும். வந்தால் அவ்வளவுதான். கிடைத்த ஒரு மூலையில் படுத்துவிடுவாள். மணிக்கணக்காக எழுந்திருக்க மாட்டாள். இந்த மைக்ரையினுக்கு மருந்து கிடையாது. அனுபவித்துத்தான் தீரவேண்டும் என்று அவள் பிடிவாதமாக இருந்ததால் எந்த முறை சிகிச்சையையும் அவள் ஏற்கவில்லை. ஆயுர்வேதம், ஹோமியோபதி, அலப்பதி, நாட்டு வைத்தியம் என்று முன்பெல்லாம் பார்த்துப் பார்த்து அவளுக்கு அலுத்துப் போயிற்று. 'பாவம் ராஜி' என்று தம்முள் முணு முணுத்துக் கொண்டே அவர் சமையலறைக்குள் சென்றார்.

அங்கே சகஸ்ரம் தலையில் துவாலையைக் கட்டிக் கொண்டு காஸ் அடுப்பின் எதிரே நின்று கொண்டிருந்தான்.

"என்னடா சேயறே?"

"குக்கர்ல இட்லி வேகறது. இப்பத ஃபில்டர்ல வள்ளம் விட்டிருக்கேன். தேங்கா சொரவி சட்னி அரைக்கண்டதுதான் பாக அண்ணா... நீ மௌலிட்டே பேசிண்டிரு. பத நிமிஷத்தில இட்லி, சட்னியோட வரேன்".

"நாங்க வந்தப்ப, 'ராஜி' ராஜின்னு க பிட்டியே?"

"கார்த்தால வரை ஒண்ணும் இல்ல இப்ப வந்தப்பத்தான் படுத்துண்டாச்சுன் தெரிஞ்சுது. நீ போ அண்ணா... நாம பே போறதைக் கேக்கறப்ப மௌலி தெம் இருக்கணும். அதுக்கு அவன் வயறு நெற சிருக்கணும்".

"இந்த டிபனை நான் நம்மாத்ல சே சொல்லியிருப்பேனே, சகஸ்ரம்".

"எந்த ஆமானால் என்ன? அண்ணா, போ... என்னவோ ஏதோன்னு மௌ அரண்டு போயிருக்கான்".

பதில் பேசாமல் ஈசுவரன் திரும்பினா சகஸ்ரம் படித்தவன். அறிவாளி. இ கெல்லாம் மேலாக நல்லவன், பரோபகா ஊரில் யார் என்ன கேட்டாலும் தன்ன முடிந்தால் சளைக்காமல் உதவி செய்வா பாவம் இப்படிப்பட்டவனுக்கும் பகவான் ஒ கஷ்டத்தைக் கொடுத்திருக்கிறார்.

ராஜி படுத்திருக்கும் திசையைப் பாராம ஈசுவரன் திரும்பினார். மௌலி நாற்காலிய அதே நிலையில் இருந்தார்.

"சகஸ்ரம் இப்ப வருவன்".

"என்ன ஈச்சா, ஏதோ சூத்திரம் சொன்னே, என்ன அது?"

"அதான் சொன்னேன் இல்லியா? சகஸ் இப்ப வருவன்னு... ஏன் அவசரப்படறாய் இப்பவே நங்கவரம் மடங்கப் போறதில்லை"

"சரி அவன் வரட்டும்" என்றார் மௌலி.

"அதுவரையில் நாம பேசிண்டிருப்போமே

"பேசலாமே!"

"பாரதி தன் சின்ன வயசுப் பிடிவாதங்க மனசு தொறந்து சொன்னா. அதனால் ஏற்ப சங்கடங்களையும் விவரிச்சா. காலே சஸ்பெண்ட் கூடப் பண்ணினாளாம்."

"ஆமாம் தன் காரியத்தைச் சாதிக் கணும்ங்கற வெறி வந்துட்டா கடைசி வரை மூர்க்கத்தனமா இருப்பா".

"ஜெயிக்கவும் ஜெயிப்பா இல்லியா?"

"முக்காலே மூணு வீசமும்".

"அப்ப அந்த பாக்கி வீசத்திலே தோத்திருப் பாள்னு அர்த்தம்".

"ஆமாம், தோல்வியும் இருந்திருக்கு. ஒரு தடவை எஸ்கர்ஷன் போறதா இருந்தது. ஒண்ணரை மாசம் முன்னாடியே காலேஜ்லே சொல்லியிருந்தா. போகணும்னா. சரின்னேன். ஹரித்வார், டேராடூன், முசூரி, ரிஷிகேஷ்னு பத்ரிநாத் வரை முப்பது பெண்கள் பஸ்ல போறதாப் பிளான். போறதுக்கு ஒரு மாசம் இருக்கறப்ப டைபாய்ட் வந்தது. இருபது இருபத்திரண்டு நாள்ளே குணமாச்சு... ஆனா லும் அவ கம்ப்ளிட் ரெஸ்ட் எடுத்துக்கணும்னு டாக்டர் சொன்னார். பத்து நாள் போதுமான்னு டாக்டர்ட்ட கேட்டாள். ஒரு மாசம்னார் டாக்டர். எஸ்கர்ஷன் பிளானை அவர்ட்ட சொல்லி அபிப்ராயம் கேட்டேன். அசையப்படாது, உடம்பு வீக்கா இருக்கு, இந்த இடங்களுக் கெல்லாம் பஸ்ல போனா நிச்சயமா ரிலாப்ஸ் ஆகும்னார். ஆனா பாரதி கேக்கலே. போய்த் தான் ஆகணும்னு பிடிவாதம் செஞ்சா. நான் கெஞ்சினேன். சுசீலா தற்கொலை செய்துப் பேன்னுகூட மிரட்டினா. ஆனா அப்பவும் பாரதி தன் முடிவை மாத்திக்கலே".

"அப்றம் என்ன செய்தேள்?"

"சுசீலா இன்னம் உசிரோடதான் இருக்கா .

"இவ பிடிவாதத்துக்கு ரண சிகிச்சைதான் மருந்துன்னு பட்டது. வெளிப்பூச்சா, சரி உன் இஷ்டம் போலச் செய்னேன். உல்லன் ஸ்வெட்டர், ஜீன்ஸ், தலைக்குத் தொப்பின்னு அவ தயார் பண்ணிட்டா. ஒருநாள் கார்த்தால ஆறு மணிக்கு அவ காலேஜ் வாசல்ல இருக் கணும். ஆட்டோவில் கொண்டு விடறதாச் சொல்லியிருந்தேன். அவ ரொம்ப சந்தோஷமா விடியறதுக்குக் காத்திருந்தா".

"அப்றம்?"

"அவளுக்குன்னு ஒரு தனி ரூம் உண்டு".

"நான் டில்லி வந்தப்ப அதில்தானே இருந் தேன்?"

"நாலு மணிக்கு எழுப்பச் சொல்லியிருந்தா. சரின்னோம். நாங்க ரெண்டு பேரும் முணே முக்காலுக்கு அவ ரூம் கதவை வெளியே பூட்டிட்டு, லோடி கார்டனுக்குப் போயிட்டோம். ஆறு மணிக்குத்தான் திரும்பி வந்தோம்."

"கூண்டுல அடைச்ச புலிமாதிரி உங்க ரெண்டு பேர் மேலேயும் பாய்ஞ்சு கடிச்சுக் கொதறி இருப்பாளே?"

"அதான் இல்லை ஈச்சா..."

"என்ன சொல்றாய் நீ?"

அவள் காலேஜ் எஸ்கர்ஷன் பத்தியே பேசலை. தயார் பண்ணி வைச்ச துணிகளை யெல்லாம் பெட்டியிலேர்ந்து எடுத்து அல மாரியிலே ஒழுங்கா வைச்சா. சாப்பிட வேண்டிய நேரத்திலே சாப்பிட்டா. ஆனா என்ன, ஏழெட்டு நாளுக்கு எங்க ரெண்டு பேர்ட்டேயும் சௌஜன்னியமாப் பேசலே".

"டேய் மௌலி, இவ ரொம்ப க்ரேட்டுடா! நினைச்சதை சாதிச்சுக்க பிடிவாதம் சேதா. இனிமே கெடைக்கவே சான்ஸ் இல்லேன்னு தெரிஞ்சதும் தனக்குள்ளேயே அடங்கிப் போயிட்டா. மனசை எப்படித் தேத்திக்கற துன்னு எத்தறையோ பேருக்கு - ஏன் எனக் கும், ஒனக்கும்தான் தெரியறதில்லே. ஆனா பாரதியாலே முடியறது. ஔவையார்தான்னு நெனைக்கறேன். என்ன சொன்னா, ஒண்ணு கெடைக்கலேன்னா, அதை மறந்துடுன்னு. கரெக்டா?"

"கிட்டாதாயின் வெட்டென மற" என்றான் மௌலி.

"சூத்திரம்னா என்னென்னு கேட்டியே, இதுதான் சூத்திரம். தந்திரமாச் சேயற ஒரு காரியம். ஆனா அது ஒருத்தரோட நல்லதுக் காக இருக்கணும். சகஸ்ரம் எல்லோருடைய நல்லதுக்கும் ஒரு சூத்திரம் சொன்னான்".

"அவனை இன்னும் காணோமே?"

"இப்ப மிக்ஸியோட சத்தம் கேட்டுது இல்லியா?"

"ஆமாம். ராஜி என்னமோ அரைக்கறாள்".

"அது ராஜி அல்ல. அவ மைக்ரெயின்ல துடிச்சுப் போய்ப் படுத்துண்டிருக்கா... சகஸ்ரம்தான் சட்னிக்கு அரைக்கிறான். இப்ப தாளிச்சுக் கொட்ட கரண்டியை அடுப்புமேல வைச்சுருப்பன்... ஹாங், ஒண்ணு ஒன்னைக் கேக்கணும்னு நெனைச்சேன்!"

"என்ன அது ஈச்சா?"

"இந்த பி.எச்.டி. படிப்பு பத்தி பாரதி உங்கிட்ட பிடிவாதம் பிடிச்சிருக்காளா?"

"எம்ஃபில் ரிஸல்ட் எப்ப வந்ததோ அந்த க்ஷணத்திலிருந்து அவ விட்ட மூச்சே அதுதான்",

"ஏன் மாட்டேன்னு சொன்னாய்?"

"நான் மாத்திரம் காரணம் இல்லை, ஈச்சா!"

"சுசீலாவும் இல்லியா?"

"ஆமாம். உங்கிட்ட நான் ஒண்ணரை லட்சம் கடன் வாங்கியிருந்தேன். நங்கவரத்து வீடு சிதிலமாயிருந்தது. சில இடங்கள்லே இடிச்சுக்

கட்ட வேண்டியிருந்தது. கவர்ன்மெண்ட்லேர்ந்து ரிடயராயிட்டா அரை குறை உசிரோட தவிக்கிற பாம்பு மாதிரித்தான்... வெளியேதான் யாரும் மதிக்க மாட்டான்னா, வீட்லேயும் நிஷித்தமா பேசுவா. கட்டின பெண்டாட்டிகூட அது வரையில் காட்டி வந்த மதிப்பையும் மரியாதையையும் குறைப்பா. பிரைவேட் கம்பெனியில் குறைஞ்ச சம்பளத்துக்கு வேலைக்குப் போலாம்னு அட்வைஸ் பண்ணுவா. முப்பத்தஞ்சு வருஷம் உழைச்சதெல்லாம் மறந்து போகும்".

"லோக ரீதியாப் பேசறதிலே ஆருக்கு என்னடா லாபம் மௌலி? பாரதி விஷயத்துக்கு வா".

"ரிடயரானப்புறம் அவளை மேற்படிப்புக்கு அனுப்ப எங்கிட்ட பணவசதி இருக்கலே. பெத்த புள்ளை எப்பவாவது ஒரு கடுதாசி போடறானே ஒழிய அதுக்குள்ள ஒரு டாலர் நோட்டைக்கூட வைச்சு அனுப்பினதில்லை. பாரதிக்கு டீச்சர் வேலைன்னாலே பிடிக்காது. இருந்தாலும், ஏதானும் காலேஜ்ல லெக்ச்சரரா வேலை செய்ஞ்சு, பி.எச்.டிக்குப் போறேன்னா.."

"அது நல்ல ஐடியாவாச்சே?"

"கவர்ன்மெண்ட் க்வார்ட்ரஸைக் காலி பண்ணிட்டா பிளாட்பாரம்தான் கதி. கரோல் பாக்ல ஒரு பெட்ரூம் ஃப்ளாட்டுக்கு என்ன வாடகை தெரியுமா? ரெண்டாயிரம். க்ரீன் பார்க்ல மூணு. நான் என் பென்ஷன்ல ரேஷன் வாங்குவேனா, இல்லே வாடகை கொடுப்பேனா?"

"அப்ப அவளை அங்கே விட்டுட்டு நீங்க மாத்திரம் நங்கவரம் வந்திருக்கணும்".

"இதைத்தான் பாரதியும் சொன்னா. ஆனா சுசீலா கேக்கலே. அவ டில்லியிலே ஒருநாள் கூடத் தனியா இருக்கப்படாதுன்னா. உடனடியாக் கல்யாணம் பண்ணனும்னா. சத்தியமாச் சொல்றேன், ஈச்சா! என்னைத் தப்பா எடுத்துக்காதே. என் பொண்ணை தங்கம்மா இருக்கற வீட்டுக்கு அனுப்ப எனக்கு இஷ்டமிருக்கலை. நீ நல்லவன். உனக்குத் தாராள மனசு. மனசு எப்பவும் வெள்ளை. உன்பேர்ல எனக்குத் தனி மதிப்பும், மரியாதையும் அபிமானமும் உண்டு. உன் பிள்ளையும் உன்னைக் கொண்டிருப்பதாகவே பட்டது. ஆனா தங்கம்மா பதினேழு பதினெட்டு வயசிலே எப்படி எப்படி இருந்தாள்னு எனக்குத் தெரியும். அப்படிப்பட்டவ உங்கிட்ட வந்தப்புறம் கம்ப்ளீட்டா மாறிட்டாள்னு நெனைச்சேன்".

ஈசுவரன் சிரித்தார் .

"பழைய கதை! விடு, விட்டுத் தள்ளு. ஜன்ம குணத்தை யாராலும் மாத்த முடியாது. கெட்ட பழக்கங்கள், சிகரெட், குடி, தேவடியாள் இதெல்லாம் நடுவிலே வந்தா நடுவிலேயே போக்கிக்கலாம். ஆனா சோரையோட வந்த குணம் சோரை உறைஞ்சு போறப்பத்தான் போகும். இப்ப தங்கம் ப்ரோப்ளம் இல்லை. பாரதிதான் ப்ரோப்ளம்".

"சகஸ்ரம் வர்றான்".

"மின்னால இட்லி திம்போம்" என்றார் ஈசுவரன்.

"நீ தொடங்குடா. நான் அப்ஸர்வர் மாதிரி, வாயைத் தொறக்காம ஒக்கார்ந்திருக்கேன்!" என்று ஈசுவரன் சகஸ்ரத்திடம் சொல்ல, சகஸ்ரம், "மௌலி உனக்கு நெஞ்சுறுதியும், தைரியமும் இருக்கா?" என்று கேட்டான்.

ஒருகணம் மௌலிக்குக் கோபம் வந்தது. சகஸ்ரம் நட்புரிமையோடு கேட்பதை அவர் உணர்ந்திருந்தாலும் அவமானப்படுத்துவது போலத் தோன்றியது.

"எம் பேர்ல ஒனக்கு இப்ப தேகஷ்யம் உண்டாறது நேக்குத் தெரியறது. பட் ஐ டோண்ட் கேர். இப்ப நம்ம எல்லார்க்கும், முக்கியமா அண்ணா குடும்பத்துக்கு, காரியம்தான் முக்கியம்".

"சரி சொல்லு".

"நீ இந்நைக்கோ, நாளைக்கோ ஒன் பொண் பாரதியைக் கூட்டிண்டு போறாய்."

"எங்கே?"

"அப்பன் பொண்ணை எங்கே கூட்டிண்டு போவன்? ஒண்ணு புக்காத்துக்கு, இல்லைன்னா பொறந்தாத்துக்கு! பாரதி இப்ப புக்காத்திலேதானே இருக்கா?"

"கூட்டிக்கிட்டுப் போய்..."

"ஒன் இஷ்டம் போலச் செய்".

"புரியலே சகஸ்ரம்".

"நீயும் ஒன் ஒய்ஃபும் ஆசைப்பட்டா நங்கவரத்திலேயே வைச்சுக்கோங்கோ. பி.எச்.டி. படிச்சுத்தான் ஆகணும்னா அவ அதைப் படிக்க நங்கவரத்திலேந்து அனுப்பு. அது கழியலேன்னா மூணு பேருமா காவிரியிலே விழுங்கோ. எங்களுக்கு அவ இங்கேந்து போனாப் போரும்!"

"என் பொண் என்ன தப்பு செய்ஞ்சா?"

"அவ தப்பு சேதிருந்தா நடக்கற கதையே வேறே. நாங்களே வண்டி ஏத்தி அனுப்பிச்சிருப்போம். அவ இப்ப நல்லவளாத்தான் இருக்கா. எல்லார்ட்டேயும் சிரிச்சுத்தான்

பேசறா. ஆனா இதெல்லாம் மாத்திரம் போறாதே?"

"இன்னும் என்ன வேணும் மௌலி?" - என்றார் ஈசுவரன்.

"ஒடம்பு இங்கேயும் மனசு பி.எச்.டியிலேயும் இருக்கப்படாது. ரெண்டும் ஒரே எடத்தில இருக்கணும். நம்ப கண்ணுக்கு அவ நல்ல பொண்ணா, புத்திசாலிப் பொண்ணா, வீட்டுக் காரியங்களை வேகத்திலே மனசிலாக்கிண்டு திருப்தியா செயற பொண்ணாத் தோணினாலும் அவ மனசு இங்கே இல்லை. பி.எச்.டியில் இருக்கு. அவ அதைப் படிக்கணும்ங்கற ஆசையிலும், மோகத்திலும் பாரதியை எங்க கோந்தைக்கு வாங்கிக்கலை".

"கூடிய சீக்கிரம் அவ முழுகாம இருந்தா இந்தப் பிரச்னை தானாத் தீர்ந்துடாதா?"

"பாரதி முழுகிண்டுதான் இருப்பா. மாசா மாசம் தொழுத்துப் பெரையில மூணு நாள் ஒக்கார்ந்துண்டுதான் இருப்பா".

"இதை உன்னால எப்படி அவ்வளவு நிச்சயமா, தீர்மானமாச் சொல்ல முடியும், சகஸ்ரம்?"

"என்னால் அடிச்சுச் சொல்லக் கழியும்".

"அப்ப அதை நான் தெரிஞ்சுக்கறேன்".

"சொல்லண்டாம்னு பார்த்தேன். நீ சொல்ல வைக்கிறாய். சரி சொல்லியுடறேன். அவா ளுக்கு இன்னும்..."

"சாந்தி முகூர்த்தம் நடந்ததே?"

"வாத்தியார் மந்திரங்களைச் சொன்னார், அம்படத்தான்! அதுக்கு அப்புறம் என்ன நடக்கணுமோ அது இன்னித் தேதி வரை நடக்கலை. என்னையோ, எங்கிட்ட - இந்தக் குஞ்சப்பாகிட்ட எல்லா ரகசியங்களையும் சொல்ற கோந்தையையோ நீ நம்பண்டாம். நீ பெத்த பொண்ணையே தனியாக் கூப்பிட்டுக் கேளு. ஒனக்கும் கூச்சமா இருந்தா நங்க வரத்துக்குக் கூட்டிண்டு போய் உன் ஒய்ஃபை விட்டுக் கேக்கச் சொல்லு".

"சரி, நீ சொல்றது உண்மையாவே இருக் கட்டும். உன் பேச்சைக் கேட்டு நான் என் பெண்ணை அழைச்சுட்டுப் போனா அப்புறம் அவ கதி?"

"மூணு சாய்ஸ் தந்தேனே. நங்கவரம், பி.எச்.டி., காவிரி!"

"அப்புறம் நீங்க என்ன செய்வீங்க?"

"அதை நாங்க பார்த்துக்கறோம். நீ விசாரப் படண்டாம். கோர்ட்டும் வக்கீலும் இருக்கு. பலமான பாயிண்ட் இருக்கு".

"என்ன அது, பலமான பாயிண்ட்?"

"கல்யாணமாச்சு. ஆனா கன்ஸுமேஷன் - கல்யாணத்தின் முடிவான நிறைவு - அது ஆகலையே? எங்க வக்கீல் ஆறு மாசத்திலே டிவோர்ஸ் வாங்கித் தருவன்".

மௌலி சீற்றத்துடன் எழுந்தார்.

"இதைச் சொல்றத்துக்கா என்னை லெட்டர் போட்டு வரவழைச்சீங்க. கோர்ட்டுன்னு வந்தா, நானும் ஒரு கை 'பார்த்துக்கறேன்" மௌலி எழுந்தார்.

சகஸ்ரம் கலகலவென்று வாய்விட்டுச் சிரித் தான். இதுவரை மௌனமாய், பார்வையாள ராக இருந்த ஈசுவரனும் சிரித்தார்.

அவர்களுடைய சிரிப்பு மௌலியின் ஆத்தி ரத்தை மேலும் அதிகமாக்கியது.

"சகஸ்ரம், நம்ப மௌலிக்கு புத்தி போறாது".

"இல்லாட்டா இப்படி தேக்ஷ்யப்பட்டு எழுந்து நிப்பானா? ஒக்காரு மௌலி. இதுதான் என்னோட சூத்திரம்."

"என்ன?"

"ஒரு ஷாக் ட்ரீட்மென்ட்... இல்லைன்னா சர்ஜரி".

"கொஞ்சம் புரியறது" என்றார் மௌலி உட்கார்ந்து கொண்டே. சிரிப்பு வந்தது. ஆனால் அது அசட்டுச் சிரிப்போ என்று அவருக்கே தோன்றியது.

"நீ சாப்பிட்டப்புறம் என்ன செயறாய்... பாரதியை மச்சு மேலுக்குக் கூட்டிண்டு போறாய். அந்தாத்தில அல்ல. அங்கே ஒன் தங்கை இருக்கா. குறுக்கே வந்தாலும் வருவள்.

"மன்னியால நம்ப பிளான் குட்டிச் சுவராகப் படாது. நான் இப்ப சொன்னதையெல்லாம் ஒன் பாணியிலே பாரதிக்கு ஏற்றபடி அவகிட்டப் பேசணும். மனசிலாச்சா?"

"ஆச்சு சகஸ்ரம்".

"எங்க குடும்பத்துக்கு பாரதி வேணம். எங்க ஆசை நிறைவேறணும்னா இதுதான் ஒரே வழி".

"ஒருவேளை எல்லாத்துக்கும் அவ துணிஞ்சா? நாராயணன் வேண்டாம், பி.எச்.டி. தான் வேணும்னு அவ நின்னா?" என்றார் மௌலி.

"அப்ப பகவான் விட்ட வழின்னு இருந்துக்கறோம்!" என்றார் ஈசுவரன்.

→

# 20

பாரதிக்குத்தன் தகப்பனார் எதற்காகத் திடீரென்று பாலக்காட்டுக்கு வந்திருக்கிறார் என்று இன்னும் புரியவில்லை. பாசம் காரணமாக அவர் நிச்சயமாக வரவில்லை. இந்த வீட்டில் சேர்த்துவிட்டு அவரும், அம்மாவும் ஊர் திரும்பி இன்னும் முழுதாக இருபது நாள் ஆகவில்லை. அப்படியே பாசம்



பொங்கி வழிந்த காரணத்தினால் வந்திருந்தால் கூடவே அம்மாவையும் அழைத்து வந்திருப்பார். வெறுங்கையுடனும் வந்திருக்க மாட்டார். காரணத்தை அவளிடமும் சொல்லவில்லை. கூடப்பிறந்த தங்கைக்கும் திருப்தி ஏற்படும் வகையில் நம்பும்படியான விதத்தில் கூறவில்லை. மாமனார் அப்பாவை சகஸ்ரத்தின் வீட்டுக்கு அழைத்துச் சென்றிருக்கிறார். அங்கே என்ன பேசப் போகிறார்கள், அல்லது பேசிக் கொண்டிருக்கிறார்கள்? இந்தப் பத்து நாள்களில் எல்லோருடைய பாராட்டையும் பெற்றிருக்கிறாள். அத்தை மட்டும்தான் இன்னும் அப்படியே இருக்கிறாள். ஆரம்பத்தில் அவளைத் தூக்கி எறிந்து பேசியதை இன்னமும் மனதில் ஊறப் போட்டுக் கொண்டிருக்கிறாளோ என்னவோ? ஆனால் நாளடைவில் அத்தைக்கும் அவளைப் பிடித்துப் போகும். பாட்டிக்கு அத்தையைப் பிடித்துப் போகவில்லையா? அதுபோல. ஆனால் இந்த சுமுகமான வேளையில் அப்பா ஏன் வரவேண்டும்?

பி.எச்.டி., திடீரென்று மண்டையில் அடித்தது. இது பற்றிய கருத்தை அவள் இன்னும் மாற்றிக் கொள்ளவில்லை. அதே துடிப்பும், ஆர்வமும் இம்மியும் குறையாமல் அப்படியே இருக்கின்றன. கைலாசமும், தேவகியும் மனதைச் சற்றே குழப்பினார்கள். உண்மைதான். ஈசுவரனும், சகஸ்ரமும் திசை திருப்பப் பார்க்கிறார்கள். சந்தேகமில்லை. நாராயணன் தன்னுடைய முடிவைத் திட்டவட்டமாகக் கூறியாகிவிட்டது. இப்படியெல்லாம் இருந்தும் அவள் தன் ஆசையை அடக்கிக் கொள்ளவில்லை. வாய்ப்பு கிடைத்தபோதெல்லாம் ஈசுவரன் மற்றும் சகஸ்ரம் சித்தப்பாவிடம் மீண்டும் மீண்டும் வெளியிட்டிருக்கிறாள். ஏன், கமலம் சித்தியிடம்கூடத் தன் அபிலாஷையைக் கூறியிருக்கிறாள்.

ஆசை வேறு, லட்சியம் வேறு என்று தேவகி சொன்னதை அவள் மனப்பூர்வமாக ஆமோதித்தாள். கைலாசம் காட்டு இலாகா சம்பந்தமாகப் படிக்க ஆசைப்பட்டுத்தான் அந்தத் துறைக்கு வந்தார். அவருடைய ஆசை நிறைவேறியது. அதன் பலனை அவர் பல ஆண்டுகள் அனுபவித்திருக்கிறார். அதன் பின்னர்தான் ஒரு லட்சியம் அவரை ஆட்கொண்டிருக்கிறது.

கணவன் நாராயணனுக்கும் திடீரென்று ஒரு லட்சியம் பிறந்திருக்கிறது. வசதி இருக்கிறது. சிந்திக்க நேரம் இருக்கிறது. அநாதை ஆசிரமத்தை நேரில் காணும் வாய்ப்பு ஏற்பட்டிருந்தது. அந்தச் சமயத்தில் ஒரு கிழவனோ, கிழவியோ உயிருக்குப் போராடிக் கொண்டிருப்பதைப் பார்த்திருக்கலாம். அந்தக் காட்சி அவனுடைய மனதில் ஒரு பாதிப்பை ஏற்படுத்தியிருக்கக்கூடும். அவனுடைய கொடை வள்ளல்தனம் லட்சியத்தால் ஏற்பட்டது என்று ஈசுவரன் உயர்த்தினாலும் அவளால் முழுதும் ஏற்றுக்கொள்ள முடியவில்லை. நாராயணனிடம் இயல்பாக தயாள குணம் இருக்கலாம். அதற்கு ஒரு வடிகால் கிடைத்தபோது அவன் அதைப் பயன்படுத்திக் கொண்டான். பரோபகாரம் என்பது அவ்வப்போது எழக்கூடிய செயல்கள்தான். நாராயணன் உண்மையான லட்சியவாதி என்றால் தன்னுடைய பங்கு முழுதையும் தானமாக அளித்து, ஏழை எளியவர்களுக்குத் தொண்டு அல்லவா செய்ய வேண்டும்?

விவசாயத்தில் தீவிர ஈடுபாடு ஏன் கொள்ள வேண்டும்? சம்மேளனங்களில் ஏன் கலந்து கொள்ள வேண்டும்? மந்திரியைப் பார்க்க அந்த ராத்திரியில் ஏன் ஓடவேண்டும்?

அவளுக்கு இப்போது லட்சியம் இல்லைதான். எந்த லட்சியமும் இல்லாமலேயே அவள் வாழ்ந்து முடியவும் கூடும். ஒரு லட்சியம் அவளுள் பிறப்பதற்காக அவள் பி.எச்.டியைத் தேடிப் போக வேண்டிய அவசியமும் இல்லை.

அவளிடம் இருப்பது ஆசை. வெறும் ஆசைதான். டாக்டர் பாரதி என்று எழுதிப் பார்த்துக் கொண்டால் நிச்சயம் பெருமையாகத்தான் இருக்கும். மற்றவர்கள் அவளைக் கண்டு பொறாமைப்படும்போது எத்தகைய குதூகலமும், திருப்தியும் கிடைக்கும்?

அவள் பி.எச்.டி., ஆசையைக் கைவிட மாட்டாள். அதற்கு ஆதரவும் அனுமதியும் கிடைக்கவும் கிடைக்கும். இப்போது அவளைப் பற்றி ஒரு நல்ல எண்ணம் உருவாகி வந்து கொண்டிருக்கிறது. அதை அவள் கெடுத்துக் கொள்ள மாட்டாள். நல்ல பெண்ணாக தொடர்ந்து இங்கேயே இருப்பாள். ஈசுவரன், சகஸ்ரம், நாராயணன், தேவகி இவர்கள் எல்லோருமே ரெயில்வே ஸ்டேஷன் வரை வந்து வழி அனுப்புவார்கள். அவள் டாக்டர் பட்டம் வாங்கித் திரும்பி வரும்போது மாலை போட்டு வரவேற்க தேவகி நிச்சயம் வருவாள்.

"என்னடீ, மச மசன்னு நிக்கறே?"

திடீரென்று அத்தையின் குரல் அவளைத் தாக்க, பாரதி ஏறிட்டுப் பார்த்தாள்.

"என்ன அத்தே?"

"உன் அப்பா சாப்பிடப் போறார், தெரியுமோ இல்லியோ?"

"தெரியும்".

"நான் காய்கறிகளை நறுக்கி வைச்சாச்சு. இனிமே நீ பார்த்துக்கோ".

"என்ன சமையல்...?"

"என்ன சமையல்னு நேத்து எங்கிட்டக் கேட்டியா? முந்தாநாள் கேட்டியா? பாட்டிட்டேயும், உன் மாமனார்ட்டேயும்தானே ஏழெட்டு நாளாக் கேட்டுச் சமைக்கிறே... நீ எதைப் பொங்கி, என்ன போட்டால் எனக்கு என்ன?"

பாரதிக்கு வரும் கோபத்தை அடக்கிப் ப்ழக்கமில்லை. இருந்தாலும் சிரமப்பட்டுத் தன்னைத்தானே கட்டிப் போட்டுக் கொண்டாள். அப்பா வந்திருக்கிற தினம் மாமியாரிடம் வாயாடுவானேன்?

தங்கம்மா சமையலறையை விட்டு வெளியேறியது நிம்மதியை அளித்தது. நறுக்கி வைக்கப்பட்டிருந்த காய்கறிகளைப் பார்த்தாள்.

வெண்டைக்காய்.

அவரைக்காய்.

பூசணி.

சாம்பார், கறி, கூட்டு என்று தனக்குள் தீர்மானித்துக் கொண்டாள். அப்பாவுக்கு வெண்டைக்காயே பிடிக்காது. ஆனால் என்ன செய்ய? தங்கம்மா சாம்பாருக்கான அளவில் தானே வெட்டி வைத்திருக்கிறாள்?

பன்னிரண்டு மணிக்கு மேல் அப்பாவும், மாமனாரும் வந்தார்கள்.

"பொண்ணே, எல்லாம் ரெடியா?"

"ரெடி அத்திம்பேர்".

"தங்கம் எங்கே?"

"தொழுவத்திலே இருக்கா".

"சரி அவ வர்றப்ப வரட்டும். நீ எல்லாத்தையும் கொண்டு வந்து டேபிள் மேல வை".

"சரி".

"பாயசம் வைச்சிருக்காய் இல்லியா?"

"இல்லையே".

"என்ன நீ, ஒன் அப்பா மின்னு மின்னால வந்திருக்கான்.. எனக்கு அவன் சம்பந்தி அல்லவா?"

"விருந்து சாப்பிடறதுக்குன்னு நங்கவரத்திலேர்ந்து உங்க சம்பந்தி வந்திருக்கிறதா எனக்குப் படலை, அத்திம்பேர்!"

ஈசுவரன் வாய்விட்டுச் சிரித்தார்.

"பார்டா மௌலி, ஒன் பொண் என்னை எப்படி மடக்கறான்னு".

"பாரதி நீ உன் மாமனார்ட்ட இப்படியெல்லாம் பேசப்படாது" என்றார் மௌலி.

"நீ பேசாதைக்கு இருடா. நாங்க ரெண்டு பேரும் ஃப்ரண்ட்ஸ். மாமனார் ஸ்தானமாடா

## கத்தரித்து ஒட்டியது...



☆ ஒரு வயதான ஸ்திரீ வீட்டில் இருந்தாள். அவளைக் கண்டும் அந்த இளைஞன் மரியாதைக்குத் தன் தொப்பியைக் கழற்றவில்லை.

"ஸ்திரீகளைக் கண்டால் தொப்பியைக் கழற்றும் வழக்கம் உங்களுக்குக் கிடையாதா?" என்று அந்த வயதான ஸ்திரீ கேட்டாள்.

அதற்கு அந்த இளைஞன், "வயதான ஸ்திரீகளுக்கு மாத்திரம் தான் நான் தொப்பியைக் கழற்றுவது வழக்கம்" என்றான்.

அந்த வயதான ஸ்திரீக்கு ஏற்பட்ட மகிழ்ச்சியைச் சொல்லி முடியாது.

● உலகிலேயே ஸ்வீடன் நாட்டில்தான் காப்பிக் குடி அதிகம். அதற்கு பின் வரும் காரணம் கூறப்படுகிறது.

18 ஆவது நூற்றாண்டில் அந்த நாட்டின் மன்னராக இருந்த மூன்றாவது கஸ்டாவ், "எது மிகவும் கெடுதல்! காப்பியா, தேத் தண்ணீரா?" என்று பரீட்சித்துப் பார்த்து விடுவது என்று தீர்மானி தார். கொலை தண்டனை விதிக்கப்பட்டிருந்த இரட்டை யர்கள் இருவரை, தண் னையை நிறைவேற்றாம நிறுத்தி, ஒருவன் தொடர்ந்து காப்பியும், இன்னொருவ தொடர்ந்து தேத் தண்ணீரு குடிக்க வேண்டும் என் உத்தரவு போட்டார்.

இரு சகோதரர்களும் வெ நாள் உயிரோடு வாழ்ந்தன அரசன் கட்டளைப்பட ஒருவன் தொடர்ந்து காப் குடித்துக் கொண்டு வந்தா இன்னொருவன் தொடர்ந் தேத்தண்ணீர் குடித்து கொண்டு வந்தான்.

கடைசியில் 87 ஆவ வயதில், தேத் தண்ணீர் குடி சகோதரன் இறந்து விடவே காப்பிதான் சிறந்தது என் அந்நாட்டினர் முடிவு செ தனர்! —நாடோ

இப்பப் பெரிசு? என்னை அவ மனசிலாக்கிண்டிருக்கா. நானும் அவ மனசை... எலையைப் பாரு, பாரதி பரிமாறத் தொடங்கியாச்சு".

மௌலி அதன் பின் வாய் திறக்கவில்லை.

அவர் சாப்பிட்டு விட்டு முற்றத்தில் கை அலம்ப வந்தபோது தங்கம்மா வந்தாள்.

"அண்ணா?"

"என்னம்மா?"

"கை அலம்பி முடிச்சதும் நீ கொஞ்சம் மாடிக்கு வா".

"வரேனே".

"உங்கிட்டப் பேசணும்".

மௌலி தங்கையைப் பார்த்தார். அவளுடைய முகத்தில் பிரதிபலிப்பது கோபமா, வெறுப்பா, விரக்தியா, வேதனையா? ஒன்றும் தெரியவில்லை.

மாடி அறையில் அண்ணாவும், தங்கையும் சந்தித்துக் கொண்டார்கள். தங்கம்மா ஆரம்பிக்கட்டும் என்று மௌலி காத்துக் கொண்டிருந்தார். பெண் பாரதியைப் பற்றி பொதுவாக என்ன எண்ணம் இருக்கிறது என்பதை அவர் சகஸ்ரத்தின் வீட்டில் தெரிந்து கொண்டாகி விட்டது. அதனால் இப்போது மனம் கலங்கவில்லை.

"அண்ணா!"

"சொல்லு தங்கம்மா".

"உன் பெண் சரியில்லே".

"விவரம் தெரியாத பெண் பாரதி, தங்கம்மா... கொஞ்சம் செல்லமா வளர்த்துட்டேன் போலிருக்கு. டில்லியிலே பொறந்து வளர்ந்தவ. இங்கே அட்ஜஸ்ட் செய்ஞ்சுக்கக் கொஞ்சம் டயம் கொடு".

"நான் இதைப் பத்தியெல்லாம் பேச உன்னை இங்கே கூப்பிடலே. அவளுக்கு வாய்க் கொழுப்பு ரொம்ப ஜாஸ்தி. வந்த ரெண்டு நாள்லே அவ எங்கிட்ட எப்படி எப்படி என்னென்னவெல்லாம் பேசினான்னு உனக்குத் தெரியாது. அந்தச் சமயத்திலே மட்டும் என் கையிலே டேப்ரிகார்டர் இருந்திருந்தா நீயும் அவ பேச்சைக் கேட்டு ரசிச்சிருக்கலாம்".

"அவ உன்னை எதிர்த்துப் பேசறது தப்பு... ரொம்பத் தப்பு. கண்டிக்கறேன்".

"எனக்கே பெப்பே காட்றவள் உன் பேச்சையா கேட்கப் போறா...? கார்த்தால எத்தனை மணிக்குத் தூங்கி எழுந்திருப்பா, தெரியுமா? ஒன்பது ஒன்பதே கால்... ஒருநாள் பத்து."

"ஏன் என்னாச்சு அவளுக்கு!"

"உன் பொண்ணாலே என் மானமே போறது. நங்கவரம் மானத்தையும் அவள் காசு கொடுக்காமக் கூடிய சீக்கிரம் வாங்கிடுவா! அதனால..."

"அதனால?"

"அவளை நீ அழைச்சுட்டுப் போயிடு".

"எத்தனை நாளைக்கு".

"அதை இப்ப செரல்ல மாட்டேன்".

"என் பொண்ணை உன் பிள்ளைக்குக் கொடுக்க எனக்கோ சுசீலாவுக்கோ ஆரம்பத்திலே இஷ்டமே இல்லை. ஈச்சாதான் மொதல்ல எழுதினான்".

"எல்லாம் அவராலே வந்த வினைதான்".

"நான் ஏன் இஷ்டப்படலைன்னு நீ கேக்கலே, தங்கம்மா?"

"சரி இப்பக் கேக்கறேன், சொல்லு".

"நீ வீட்ல எப்படி இருந்தவள்னு எனக்குத் தெரியும். அம்மாவையே அடிக்கக்கை ஓங்கினவள் நீ. அப்பா செத்துப் போனப்ப உன் கண்ல மட்டும்தான் நீர் வரல்லே... அவர் செத்த நாலாம் நாள் நீ சினிமா பார்க்கப் போனே! இப்படிப்பட்டவகிட்ட என் பெண் மாட்டிக்கப் படாதுன்னுதான் நினைச்சேன். ஆனா ஈச்சாவோட நங்கவரம் வந்தப்ப நீ முழுசா மாறிட்டதாத் தோணித்து. குழையக் குழையப் பேசினே. என் பொண் ஜெனிச்ச அன்னிக்கே அவ உன் புள்ளைக்குத்தான்னு நெகிழ்ந்தே... உன் குணமே மாறிட்டதுன்னு நான் கணக்குப் போட்டேன். அந்தக் கணக்கு தப்புன்னு இன்னிக்குத் கார்த்தாலே நான் வந்ததுமே புரிஞ்சுது. தலையிலே இடி விழுந்தாப்ல ஆயிடுத்து..."

"எதுக்கு அண்ணா வளவளன்னு பேசணும்? உன் பொண்ணை அழைச்சுட்டுப் போ!"

"நீ மாத்திரம் சொன்னாப் போதாதே... என் மாப்பிள்ளை சொல்லட்டும்".

"அவன் என் புள்ளை. நான் கிழிச்ச கோட்டைத் தாண்ட மாட்டான்".

"அதையும் பார்த்துடுவோம். ஈச்சாவும் சொல்லட்டும்".

"அவர்ட்ட நீ இது பத்திப் பேசத் தேவையில்லை!"

"எப்படித் தேவை இல்லாமப் போகும்? அவர்தானே சம்பந்தி? என் பெண்ணோட தலைவிதியை நிர்ணயிக்கும் பொறுப்பு அவருக்கும் இருக்கே?"

"அவர் சம்மதிக்க மாட்டார்".

"ஏனாம்?"

"அவங்க ரெண்டு பேரும் சகஜமாப் பழகறா".

"அப்ப அதுதான் காரணமா உன் முடிவுக்கு? சீ, என்ன அற்பத்தனமான, ஈனத்தனமான எண்ணம், உனக்கு!"

"நீ உன் பெண்ணைக் கூட்டிட்டுப் போயே ஆகணும்".

"பாரதி வர்றதுக்கு மறுத்தா?"

"மறுக்க மாட்டா... சொல்லப் போனா துள்ளிக் குதிச்சுக்கிட்டு உன் பின்னாலே வருவள்".

"எப்படி அவ்வளவு நிச்சயமாச் சொல்றே?"

"அவளுக்கு இந்த ஊர் பிடிக்கலே, இந்த வீட்டுச் சாப்பாடு பிடிக்கலே, எல்லாத்துக்கும் மேலா அவ கண் பி.எச்.டியிலே நிலைச்சு நிக்கறது. அந்தப் படிப்பைப் படிக்க என் புள்ளை சம்மதம் கொடுக்க மாட்டான். அவனோட அப்பாவும் கூடாதும்பார்".

"சரி, நான் அழைச்சுட்டுப் போறேன்னே வைச்சுக்கோ... அதுக்கு அப்புறம்?"

"அதான் அப்பவே சொன்னேனே, நான் அப்புறமா முடிவு எடுக்கறேன்னு".

"என் பெண்ணை வாழாவெட்டி ஆக்கறதுன்னு நீ கங்கணம் கட்டிட்டு நிக்கறே!"

"நான் கங்கணமும் கட்டலே, வளையலும் போட்டுக்கலே... உன் பெண் இந்த வீட்ல இருக்கறதே என் கண்ணுக்கு எரிச்சலா இருக்கு".

"அப்ப வேறு ஒரு வழிதான் இருக்கு".

"என்ன வழி?"

"தனிக்குடித்தனம்!"

தங்கம்மா கேலியாகச் சிரித்தாள்.

"என் பிள்ளையோட அப்பாவே கல்யாணமாகி முப்பது வருஷமானப்புறமும் தனிக்குடித்தனம் வைக்க நினைக்கலே."

"இப்ப நினைக்க வைக்கிறேன். என் பொண் அவ புருஷனோட வேற ஒரு வீட்ல தனியா இருக்கட்டும்".

"அது என் பொணம் விழுந்தப்புறம்தான் நடக்கும்" தங்கம்மா சீறினாள்.

"அப்ப உன் பொணம் விழுந்தப்புறம்தான் என் பெண் இந்த வீட்டை விட்டுப் பிறந்த வீட்டுக்குப் போவா! நீ இப்ப இதையெல்லாம் இந்த மாடி ரூம்ல தனியா உட்கார வைச்சுப் பேசறே, சாது மாதிரி இருக்கேங்கறதாலே சாமர்த்தியமும், தைரியமும் இல்லேன்னு எடை போட்டுடாதே. இன்னிக்குச் சாயங்காலமே இந்தப் பள்ளிப்புறம் கிராமத்திலே இந்த வீட்டெதிரே நின்னுண்டு கோஷம் போட்டு கூட்டம்

# என்னதான் நடக்குது?





என்னதான் நடக்குது தெரியலடா – அதை
எண்ணித்தான் பார்க்கிறேன் புரியலடா

நல்லதை நினைப்பவன் சாகிறான் – இங்கே
நாள்தோறும் துன்பத்தில் வேகிறான்
அல்லதைச் செய்பவன் உயர்கிறான் – இன்பம்
அனைத்தையும் அவன்தானே துய்க்கிறான்.

என்னதான் நடக்குது தெரியலடா – அதை
எண்ணித்தான் பார்க்கிறேன் புரியலடா

பொய்யிலே குளிப்பவன் வாழுறான் – இந்தப்
பூமியை அவனேதான் ஆளுறான்.
மெய்சொல நினைப்பவன் வாடுறான் – நல்ல
மனிதரைக் கணந்தோறும் தேடுறான்.

என்னதான் நடக்குது தெரியலடா – அதை
எண்ணித்தான் பார்க்கிறேன் புரியலடா

மானத்தை நினைப்பிலும் ஒதுக்குறான் – அவன்
வானத்தை எட்டியே மிதிக்குறான்
மானத்தில் உயிரையே வைத்தவன் – சொந்த
மானமும் உயிருமே இழக்குறான்.

என்னதான் நடக்குது தெரியலடா – அதை
எண்ணித்தான் பார்க்கிறேன் புரியலடா

சிரிக்கிறான் உள்நெஞ்சு வெடிக்கிறான் –ரொம்பச்
சின்னத்தனத்திலே நடிக்கிறான்
விரிக்கிறான் வஞ்சக வலையினை – அதில்
வீழும் மனிதரைச் சுவைக்கிறான்.

என்னதான் நடக்குது தெரியலடா – அதை
எண்ணித்தான் பார்க்கிறேன் புரியலடா

**ச. சவகர்லால்**



"நீங்க வாங்கித் தந்த பேண்டேஜ் துணி மொத்தத்தையும் யூஸ் பண்ணிட்டேன்..."

— சுதர்ஸன்

சேர்ப்பேன். நீ இப்ப சொன்னதையெல்லாம் அவாகிட்ட சத்தம் போட்டுச் சொல்லி என் பெண்ணுக்கு நியாயம் கேட்பேன்... அடிபட்ட புலியைப் பார்க்கணும்னு உனக்கு ஆசை இருந்தா இன்னிக்கு சாயங்காலம் பாரு!"

"என் மானத்தை நடுத்தெருவுக்குக் கொண்டு வரத் துடிக்கிறியா?"

"உனக்கு மட்டும்தான் மானம் இருக்கோ? எனக்கு இல்லியோ? என் பெண் பாரதிக்கு இல்லியோ?"

"கத்தாதே".

"நீ கத்த வைக்கிறே?"

"கீழே என் மாமனார், மாமியார் இருப்பா. அவரும் இருப்பார்."

"இருக்கட்டுமே! உன் மனசிலே எவ்வளவு அழுக்கு இருக்குன்னு அவங்களுக்கும் தெரியட்டுமே".

"சரி... சரி... இப்ப நீ உன் பெண்ணைக் கூட்டிட்டுப் போக வேண்டாம்".

"இப்ப என்ன இப்ப? எப்பவுமே கூட்டிட்டுப் போக மாட்டேன்".

"நான் கீழே போறேன். நம்ம நாத்தம் மத்தவாளுக்குத் தெரிய வேண்டாம்".

"நான் என்னிக்குமே நாறாதவன். நாறவும் மாட்டேன். ஒரு தங்கமான மனுஷனுக்கு நீ பொண்டாட்டியா வாய்ச்சியே! பாவம் அவர் என்ன பாவம் பண்ணினாரோ?"

தங்கம்மா சரசரவென்று கீழே இறங்கிப் போக மாடிப் படிகளில் விரைந்தாள்.

கீழ்ப்படிக்கு அருகே ஈசுவரன் நின்று கொண்டிருந்தார். அவரைத் தாண்டிச் செல்ல அவள் யத்தனிக்கையில் –

"தங்கம்!" என்றார் ஈசுவரன்.

அவள் தாண்டிச் சென்றாள்.

"எங்கே ஓடறாய்! நில்லு".

"என்ன வேணம்?"

"உன் அண்ணாகிட்ட என்ன பேசிண்டிருந்தாய்?"

"ஒண்ணுமில்லை".

"ஒண்ணுமில்லாததைக்கா அரைமணிக் கூறு. மச்சு மேல் இருந்தாய்?"

"இப்ப ஒங்ககிட்டச் சொல்லும்படியா விசேஷமா ஏதும் இல்லை".

"பாரதியைப் பத்தியா?"

தங்கம்மா பதில் சொல்லாமல் சென்றாள்.

சற்றைக்கெல்லாம் மௌலி இறங்கி வந்தார்.

"என்ன அண்ணாவும், தங்கையும் ரொம்ப நேரமா சொகாரியம் பேசிண்டிருந்தேள்? நானும் தெரிஞ்சுக்கலாமா, மௌலி?"

"சொகாரியம்னா ரகசியம்தானே?"

"ஆமாம்".

"ரெண்டு பேருக்குள்ளே இருந்தாத்தான் ரகசியம். உன் பாஷையில சொகாரியம்! மூணாம் மனுஷனுக்குத் தெரிஞ்சா பரஸ்யமாயிடறது... சரி, இப்ப நான் சகஸ்ரத்தின் வீட்டுக்குப் போறேன்".

"சரி நீ போய்க்கோ... இப்ப பாரதி அங்கதான் இருக்கா... நான் என் கடை, பங்க் இதையெல்லாம் சுத்திப் பார்த்துட்டு நாலு மணிக்கு மின்னால வந்துடறேன்".

"நீ எப்ப வேணம்னாலும் வா. நான் வந்த காரியம் முடியாமல் நங்கவரம் திரும்பறதா இல்லை!"

"மௌலி நீயா இப்படி அடிச்சுப் பேசறாய்? சாது மிரண்டா...."

"காடு கொள்ளாது. எனக்கும் தெரியும். நான் வரேன் ஈச்சா!"

"ஆல் தி பெஸ்ட்".

மௌலி பதில் கூறாமல் வெளியேறி, தெருவைத் தாண்டி சகஸ்ரம் வசிக்கும் வீட்டுக்குள் பிரவேசித்தார்.

இரண்டு கட்சிகள். ஒரே திசையில் அவர் செல்ல வேண்டும் என்று வற்புறுத்துகிறார்கள். ஆனால் நோக்கங்கள் வெவ்வேறு!

அவராகச் செயல்பட மூன்றாவது திசை இருக்கிறதா? தேடினார். புத்தி மழுங்கியது தான் மிச்சம்.

(தொடரும்)



# வீழ்தலும் விடியலும்

லீலா கோபாலன்

டில்லி விமானம் அரை மணி தாமதமாக பேகம்பேட் விமான நிலையத்தில் வந்திறங்கியது. கையில் ஒரு பை மட்டுமே எடுத்துக் கொண்டு வந்த பவித்ரா விடுவிடென்று வெளியே வந்து அவளுக்காகக் காத்திருந்த தந்தையைக் கண்டு முகமலர்ந்தாள்.

"ரொம்ப நேரமாகி விட்டதாப்பா?" என்று ஆர்வத்துடன் வினவ,

"இல்லேம்மா. வா. அம்மா தான் தவிச்சிண்டிருப்பா..." அம்பாஸடர் கார் மாரட்பள்ளியை நோக்கிச் சென்றது.

"ப்ளேனானாலும் ரயிலானாலும் தாமதமா வரது நம்மவங்கள் வழக்கமாயிடுத்து. தோசை வார்க்கிறேன். முகம் கழுவி வா..." அம்மா ஆதுரத்துடன் சொல்ல,

"வேண்டாம்மா. ப்ளேன்லேயே ரிஃப்ரஷ் பண்ணிட்டேன். ப்ரட் டோஸ்ட் காபி ஏதோ கொடுத்தான். குளித்து மணக்க சாப்பிடணும் வத்தக் குழம்பும் பொரித்த கூட்டுமாக" என்று துவாலையை எடுத்துக் கொண்டு கிளம்பினாள்.

"என்னவோ ஆத்தோட வாசலோட உஸ்மானியால படிச்சுத் தேறினே. இங்கேயே உனக்கு டயத்துக்கு வர முடியாது உன் டாக்டர் பொழைப்பு. இப்போ பெரிய உத்யோகம்னு டில்லிக்குப் போயிட்டே. அங்கு நடக்கும் கலவரங்கள் கேக்கறச்சே குலை நடுங்குறது..." அம்மா தங்கம்மா அங்கலாய்க்க,

"ஏம்மா இந்த ஊரில் கலவரம் மட்டாவா இருக்கு. இங்கு நடக்கும் அமர்க்களங்களை பேப்பர்ல படிக்கும்போதோ, டி.வி.யிலே பார்க்கும்போதோ உங்களை அங்க கூட்டிண்டு போயிடலாம்னு நேக்கு தோணும்..."

"போருமே,... உங்கப்பா அவரோட பங்கனப்பல்லி மாந்தோட்டத்தையும், திராட்சைப் பண்ணையையும் விட்டு வருவாரா. அதுங்களுக்கப்புறம்தானே நீகூட அவருக்கு ..." அம்மாவின் 'விட்'டை ரசித்துக்கொண்டே குளிக்கப்போனாள் பவித்ரா.

நெற்றியில் விபூதி, குங்குமம் இட்டு, சுவாமி கும்பிட்டு, தலையைத் துவட்டி முடிந்து கொண்டு வந்தமர்ந்தாள்.

"அப்பா சாப்பிட உட்காரப் போகிறார். நீயும் உட்காரேன்."

"எனக்குப் பசியில்லை. இருந்தாலும் அப்பா கூடப் பேசிண்டே சாப்பிடறது ஒரு ஃபன்."

"ஊருக்கெல்லாம் டாக்டரானாலும் இன்னும் நமக்கு சின்னக் குழந்தையாத்தான் இருக்கா!" அம்மா அப்பாவுடைய பழத் தோட்டத்தைப் பற்றி அவள் கேட்க, அ... மருத்துவத் தொழிலில் டில்... அனுபவங்களை அவர் கேட... அம்மா ரசித்துக் கொண்... பரிமாற, சட்டென்று நினை... வர, "ஏம்மா... நம்ம யாதம்... எப்படி இருக்கா... இஸ்... ஒகே? வேலைக்கு ... கிறாளா...?"

"எல்லாம் வந்திண்டிருக்கு... இப்ப என்ன அதப்பற்றி வ... தும் வராததுமா... முத... சாப்பிடு..."

யாதம்மா குடும்பத்தை ப... வருடமாகப்பராமரித்து அன்... ஆதரவும் காண்பித்து வ... அம்மாவின் பேச்சு அவளு... வியப்பு அளித்தது.

"என்னம்மா சொல்றே... நான்தான் போன தட... அவளை கீதா நர்சிங் ஹோ... 'அட்மிட்' பண்ணி 'ஸ்டெர்... ஸர்ஜரி செய்தேன். ... தனையோ 'ப்ரிகாஷன்' எல்ல... சொல்லிவிட்டுப் போனே... நம் ஜனங்களின் இல்லிட... நல்லதைப் புரிந்துகொள்... தெரியாத பரிதாபம். எ... தான் நடந்தது? ஐ ஆம் இ... ரஸ்டட் இன் ஹர் வெல்ஃ... தயிர் சாதம் உண்டு முடி... கை கழுவித் துவால... கைதுடைத்த வண்ணம் சே... வில் வந்து சாய்ந்தமர்ந்த... அம்மாவும் எதிரில் அமர, ...

அவர்கள் பேசப்போகும் ஷயத்தின் நிலவரத்தைப் ரிந்து கொண்ட அப்பா ண்டு பேப்பருடன் வாசல் ராந்தா சாய்வு நாற்காலியில் க்கியமானார்.

"முன்னைவிடப் பத்து டங்கு அனுதாபம் காட்டும்படி த்தான் அதன் நிலைமை மைஞ்சு போச்சு. நானும் தற்கு அனுதாபம் காட்டத் ன் செய்கிறேன். இல்லை னால் அஞ்சு மணிக்கு வந்து சல் தெளிச்சு மொக்கு டுமே, ஒன்றும் கிடையாது. னா தானோன்னு பத்து ணிக்கு வரும்... நானும் திக்காரியம் செஞ்சிருப் ன்... நான் கொடுக்கிறதை ந்தைகளும் அதுவுமா ர்ந்துண்டு சாப்டுட்டுப் ாகும்... என்னமோ அவல டுத்து பாவம் அதன் ழைப்பு!" அம்மா கண் சிவக் து.

"என்னம்மா! புதிரே டறே, சொல்லம்மா..." த்ரா பதட்டப்பட்டாள். தற்குள் வாசல் மணி க்க அவளே போய் க்கிறாள். யாதம்மாதான் கிறாள்!

யாதம்மாவா இது! வயிற்றி ான்றும் கையிலொன்றாக ந்து அரை வயிற்றுக்கு க்கும்போதுகூட பளபள ளமும், இழைய வாரிய கரு தலைமுடியும் சிரித்த மாக இருந்த இவளா போது நடைப் பிரேதமாக...

அதற்குள் அவளே "பாகுன் ரா சின்னம்மா?" என்று க...

"அவுனு... ஏமாயிப் யிந்தி... நீகு.."

பெத்தம்மா செப்பலேதா... ா நா கர்மா.." என்று ல்லித் தன் வேலையை ப் போய்விட்டாள்.

னைத்த மனதுடன் வந்த தாள் பவித்ரா. அம்மாவும் எதை எப்படித் தொடங்குவது என்பதுபோல் முகம் இறங்கி இருந்தாள்.

"அவளுக்கென்னாயிற்று? ஏன் சொல்லத் தயங்குகிறாய், அவ நெத்தியிலோ பொட்டு இருக்க புருஷனுக்கு ஒன்னும் ஆகலை. ஓடிட்டானா... விட்டுட்டு...?" பதட்டப்பட்டாள்.

இந்த யாதம்மா பவித்ரா வீட்டிற்குப் பத்து வருடமுன் வேலைக்கு வரும்போது கையிலொன்று, இடுப்பிலொன்று, வயிற்றில் ஒன்றுமாகத்தான் வந்தாள். அப்போதுதான் இவள் மருத்துவக் கல்லூரியில் சேர்ந்திருந்தாள். அப்போது தான் இவள் மனதில் மிகக் கடுமையாக ஒடிக்கொண்டிருந்த எண்ணம், பணம் படைத்தவர்கள் இரண்டோ அல்லது ஒன்றேகூடப் போதும் என்று குடும்பத்தை சுருக்கிக் கொள்கிறார்கள். ஆனால் இந்த உழைக்கும் வகுப்பிலல்லவா குடும்பக் கட்டுப்பாடு போய்ச்சேர வேண்டும்! யாதம்மாவுக்கும் இருபத்திரண்டு வயதில் மூன்று பெண் குழந்தைகள். "இந்தக் குழந்தைகளை நன்றாக வளர்த்த வேண்டுமானால் இனி குழந்தை பெறாதே. இவர்களைப் படிக்க வை" என்று மிரட்டுவாள்.

"நட்டதெல்லாம் பயிரா? தேவுடு கொடுக்கிறார்ம்மா!" என்று வேதாந்தம் பேசுவாள் சிரித்துக்கொண்டே. அடுத்த வருடம் நாலாவது உண்டாகியிருப்பாள். குழந்தைகளுக்கு தடுப்பு ஊசிகளை நிர்ப்பந்தமாகப் போட வைப்பது இவளுக்கு உன்பாடு என்பாடு ஆகிவிடும். 'ஓர் ஆண் குழந்தை வேண்டும் இல்லாட்டா எங்க 'சுட்டாலு" என்னை ஒதுக்கிட்டு அவனுக்கு வேறே கட்டிடு வாங்க" என்றே ஒன்றும் இரண்டும் வருட இடைவெளியில் அவள் ஐந்து பெண்களைப் பெற்று இவள் பின்னால் பட்டாளமாக வரும். பெரிய பெண்கள் இரண்டும் இவள்கூட வேலை செய்ய வரும் போது பவித்ராவுக்குக் கெட்ட கோபம் வரும். "இலவசப்படிப்பு இருக்கு. பெண்களைப் படிக்க வாவது அனுப்பு" என்று பிடித்துப் பள்ளிக்கு அனுப்புவாள். துணிமணிகள் புத்தகம் கொடுப்பாள்.

"அக்கா! நீ பாட்டுல சொல்றே. வீட்டுல சின்னக் குழந்தே. குடிகாரப் புருஷன் ஒண்ணும் வீட்டுக்கு சரியா கொடுக்க மாட்டான். இவங்கள்ள ஒத்தி வீட்டப் பாத்துண்டு, இரண்டு என்கூட வந்தா நான் இன்னும் ரண்டு வீட்டு வேலை பிடிச்சுக்க முடியும்மா..." என்று கெஞ்சுவாள்.

"உஃப்! இவர்களுக்கு விமோசனமே இல்லையா?" என்று நொந்து போவாள் பவித்ரா.

மருத்துவம் முடிந்து டில்லியில் தனியார் மருத்துவ மனையில் தகுந்த வேலை ஏற்றுப் போய், மறுவருடம் விடுமுறையில் வந்த போது, யாதம்மா மகிழ்ச்சியாகவே இருந்தாள். ஆம்! ஓர் ஆண் குழந்தையைப் பெற்றெடுத்திருந்தாள். தன் அந்தஸ்தே மனிதர்கள் நடுவில் சிறிது உயர்ந்து விட்டதுபோல் பாவித்துக் கொண்டாள். பெண்களை விரட்டுவாள். "அக்கா நீ சொன்ன மாதிரி இவனைப் படிக்க வைக்கிறேன் பாரு. இவனை ஆளாக்கிக் கொடு. ஜன்மமும் மறக்க மாட்டேன். இவன்தான் என்னை உக்கார வச்சு சோறு போடப் போறான்" என்பாள் பெருமையாக. "அது சரி உடம்பு கொஞ்சம் தேறட்டும். இனிமே பெத்துக்காதே. நான் மூன்று மாதத்தில் இங்கு ஒரு வேலையாக வருவேன். அப்ப உனக்கு 'குடும்பக் கட்டுப்பாடு'. என்ன" என்பாள். "ஐயோ என் புருசனுக்கு இன்னோர் ஆண் குழந்தை

வேண்டுமாம். அவன் சம்மதிக்கணுமே.”

“இந்தப் பிள்ளை பிறக்க விட்டு வீட்டுக்குக் கொஞ்சம் பணம்கூடக் கொடுக்கிறது. என்னைக்கூட அடிக்கிற தில்லே...” மகிழ்ச்சியில் அவள் கருமுகம் சிவந்தது.

நினைத்தபடி அந்தத்தடவை அவள் டில்லியிலிருந்து ஊர் திரும்ப முடியவில்லை. அதற்குள் இங்கு யாதம்மா ஏழாவது குழந்தையாக ஒரு பெண்ணைப் பெற்றுவிட்டாள் என அம்மா எழுதியபோது இவளுக்கு ஆத்திரம்தான் வந்தது. ஒரு மாத லீவில் ஊருக்கு வந்திருந்தாள் பவித்ரா.

“அக்கா! ஆட பில்லா பொ
தது என் குற்றமாக்கா. அ
பிள்ளையை பெற்று தந்த
நான்தானே. இந்த மி
ஜனங்களுக்கு என்னிக்
புரியும்? மறுபடியும் குடி
அந்தப் பெண் குழந்தைக
யும் என்னையும் லொத்த
கழட்டறான். இனிமே கு
தையே வேண்டாம். என
இந்தத் தடவை ஆபரேச



சய்துடு" என்று எப்படியோ ன்வனிடம் கைநாட்டும் ாங்கி வந்து விட்டாள்.

பவித்ராவுக்கு ஏக மகிழ்ச்சி. நானோதயம் வந்ததா இப்ப ாவது என்று ஒரு த்ரில். அப்பா! யாதம்மாவுக்கும் பிடிவு பிறக்கப் போகிறது! அவள் அறுவை தோல்வியைத் தந்திலலையே!

அம்மா தொடர்ந்தாள். அதெல்லாம் நீ சொன்ன மாதிரிதான் ஆறுமாசம் வீட்டு வேலைக்கெல்லாம் வரலை. பிறந்த வீட்டுக்குப் போயி ரெஸ்ட் எடுத்துண்டுது... அந்தப் பொண்கள்தான் நாலு வீடும் லொங்கு லொங்குனு செஞ்சு வீட்டையும் பாத்துண்டு... எனக்குத்தான் செத்த இரக் கமா இருக்கும். பாத்திரத்தைக் கழுவிப் போட்டுப்பேன். துணி களும் போடுவது கிடையாது. சோற்றைக் கொஞ்சம் கூடவே வடிச்சுக் கொடுத்துடுவேன். எல்லோமே இங்க உக்கார்ந்து உண்டுட்டு, அம்மைக்கும் எடுத்துப்போகும். தம்புடுவைக் கண்ணுக்குள்ள வைச்சு முடித்தான் பார்த்துக் கொண் டதுகள், அவளும் பிள்ளையை யாதகிரிகிட்டா அழைத்துப் போய் மொட்டை போட்டுக் கொண்டு வந்தா. அவன்தான் படிச்சு, உத்தியோகம் பண்ணி தன்னை காப்பாத்த போறான்னு மூணு வயசு முடிந்தும் பக்கத்துல இருக்கிற கான்வென்டுல கொண்டு சேர்த்தது. இரண்டு செட்டு புது ட்ரெஸ் தெச்சுக் கொடுத்தேன் அதுக்கு உம்..." அதற்கு மேல் சொல்ல முடியாது அம்மா திணறினாள்.

"உம்! அப்புறம் என்ன...?" மேலே கேட்கப் பரபரத்தாள் பவித்ரா.

"அப்புறமென்ன. பள்ளிக் கூடத்திலிருந்து அக்கா கையைப் பிடிச்சுண்டு வந்த கொழந்தே வேலை முடிஞ்சு அம்மா எதிரே வர்றத பார்த் துட்டு அக்கா கையிலேந்து தன்னை பிடுங்கிக் கொண்டு அம்மாவைப் பார்த்து ஓடிருக்கு. குறுக்கே வந்த மோட்டார் சைக்கிள் அப்படியே தூக்கி எறிஞ்சுடுத்து. அம்மா வும் அக்காவும் அலறிண்டு ஓடி வர்றதுக்குள்ளே பின்னோ டயே வந்த லாரி அப்படியே அறைச்சுட்டுப் போயிடுத்து போ..."

அம்மா பொல பொல வென்று கண்ணீர் சிந்தக் குலுங்கிக் குலுங்கி அழுது விட்டாள்.

"ஐயையோ..." என்று அவள் கூவி, இரு முட்டிகளின் நடுவில் தலையைக் கவிழ்த்துக் கொண்டு கரைந்தாள். எதற்கும் அடங்காத அவள் மனமும் ஆடிவிட்டது.

"அந்தக் கண்றாவியை ஏன் கேக்கறே. தினமும் அம்மா தலைப்பைப் பிடிச்சுண்டோ இல்ல, அக்காவோடயோ வரும். என் கையாலேயே சாப்பாடு போட்டு எல்லாம் பண்ணிட் டேனா... என்னமோ ஆத்துக் குழந்தை மாதிரி நம் எதிரேயே வளர்ந்து நம் கண்முன் பிராணனை விட்டுட்ருது..." என்று தலைப்பால் கண் ணீரைத் துடைத்துக் கொண்டு அம்மா கேவினாள்.

"இப்போது இன்னொன்று பெற வழியில்லாம ஆயிடுத்தே அம்மா..." என்று அவள் விக்கித்து அமர்ந்திருந்தாள். அம்மா பாவமாகப் பார்த்தாள். நல்ல வேளை. யாதம்மா குளி யலறையில் குழாயை 'ஹோ' என்று திறந்துவிட்டு துணி தோய்த்துக் கொண்டிருந்தாள். அவள் காதில் இந்தக் கதை விழுந்திருக்காதுதான்.

"அதோடு போச்சோ, பெரிய பெண் இதன் நடுவிலே பெரிய மனுஷியாயிடுத்து. மனக் கஷ்டமோ பணக் கஷ்டமோ இத மட்டும் சுற்றத்தாரைக் கூப்பிட்டு பெரிசா விழா கொண்டாட ணுமே...". அம்மா சொல்ல... அவள் மனம் வெகுண்டது.

"வெளியூர்லேர்ந்து நாத்தி, மாமியார், உள்ளூர் இவள் உறவு எல்லாம் வந்துட்டது. பெண்ணுக்கு மஞ்சள் நீராடி ன்தும் இவள் தமையன் வாங்கி வந்த புடைவையை முதலில் உடுத்தினாளாம். வந்தது வம்பு, நாத்தி தான் வாங்கின புடைவையை ஏன் உடுத்தலை என்று ரகளை கூட்ட, கூட்டம் கூடி, மாமியார் இவள் கணவன் எல்லாம் ஏச, இது அண்ண னுக்கும், நாத்தி புருஷனுக்கும் அடிதடியில் வந்து, சமைச்ச விருந்தை யாரும் உண்ணாது கிளம்பி விட்டாளாம். போற போக்குல உடன்பிறந்தாள் "இவளுக்கு ஆண் குழந்தை யில்லை இனி பிறக்கவும் பிறக்காது. "நீ வேற பெண் ணைப் பண்ணிக்கோ"ன்னு கிளப்பிக் குடுக்க, ஒரு மேனா மினிக்கியை அழைச்சுண்டு வந்து வீட்டுல வச்சிண்டு இவளையும், பெண்களையும் துவம்சம் செய்யத் தொடங்கி யிருக்கான். அவள் தமையன் வந்து அழைக்கப் போக, இவள் போக மறுத்துட்டு, தனியே ஒரு வீட்டுல பெண்களோட இருக்கு. பாவம்... பெரிசு நாலும் கூட வேலை செய்யறது... கடைசிக் குழந்தையை முந்தினது பாத் துக்கறது இவள் வேலைக்கு வரச்சே... விடிவே இல்லாது போயிடுத்து... பாவம்... எப்படி அந்தப் பெண் குழந்தைகளைக் கட்டிக்காத்து ஒத்தன் கையிலே குடுக்கப் போறதோ...?

"எவன் கையிலையும் வேண் டாம். அவள் குழந்தைகளுடன் மானமா வாழ நானே ஒரு வழி பண்ணித்தான் ஆகணும்". அவள் வாய் முணுமுணுத் தாலும், சமுத்திர அலைகள் பாறைகள் மீது மோதி விழுவது போல் அவள் நெஞ்சம்

பாடாய்ப்பட்டது. பெற்ற குழந்தைகளை அவள் செழுமையாக வளர்க்க வேண்டுமென்ற நல்லெண்ணத்துடன் தான் செய்ததன் விளைவு எதிர்மறையாகி அவள் வாழ்வையே குலைத்துவிட்ட நிலை அவளால் தாங்கமுடியத்தான் இல்லை. உதவியே உலையாகி விடுமா?

தபசு கிடந்து ஒரு பிள்ளையைப் பெற்று அதுவே தனக்கு வாழ்வு என்று வாழ்வில் ஏதோ ஒரு கலங்கரை விளக்கை எதிர்நோக்கிய யாதம்மாவுக்கு அந்த அருமைப் பிள்ளையைப் பிடுங்கி வாழ்வையே தேய வைத்து விட்டது விதி. அதனால 'விதியே' என்று நினைத்து அப்பெண்ணின் வாழ்வு மட்டுமல்ல அவள் வயிற்றில் பிறந்த பெண்களின் வாழ்வும் வழி தெரியாது தத்தளிக்க விடுவது தான் பெண்கள் விடுதலைக்கு தன்னைப் போன்ற இளம் பெண்களும், சமூக சேவகிகளும் எடுத்துக்கொண்ட சவாலுக்கு விடையா? யாதம்மாவின் வாழ்வுக்கு ஒரு வழி தேட வேண்டியது தன் கடமை என்று இரவெல்லாம் யோசித்தாள்.

மறுதினம் யாதம்மாவின் பெண்களை வற்புறுத்தி அழைத்துப்போய் அருகிலுள்ள பள்ளியில் சேர்த்து, தானே கார்டியனாக எழுதிக் கொடுத்து, புத்தகம், துணி என்று ஏற்பாடு செய்தாள். அவர்கள் கல்விச் செலவுக்கென்று தன் அம்மாவின் பொறுப்பில் பணத்தை பாங்கில் போட்டாள்.

பெரிய பெண் எட்டாவது முடித்ததும் தையல் கற்க ஒரு பள்ளியில் ஏற்பாடு செய்து வைத்தாள். மற்றவளை பள்ளிக்கு பின் 'நர்ஸ்' பயிற்சிக்கு ஏற்பாடு செய்வது என்று தீர்மானித்தாள். யாதம்மாவிடம் இவற்றை விவரித்து, "உன்னை ஒதுக்கிய சுற்றத்தாருக்குப் பயப்படாமல் அவர்கள் ஏச்சு பேச்சுகளை ஒதுக்கி உன் குழந்தைகளின் முன்னேற்றத்திலேயே முனைப்பாக இரு. உனக்கும் அதே பள்ளியில் துப்புரவு செய்யும் வேலை, குழந்தைகளுக்குத் தண்ணீர் நிரப்பும் வேலை. அதிக ஊதியம். வருடத்திற்கு சேலை, துணிமணிகள் உண்டு. போனஸ் உண்டு. இப்போது பெண்களைப் பிள்ளைகளாக வளர்த்துவா. அவர்கள் தகுதியறிந்து படித்த நல்ல பிள்ளைகளைத் தேடலாம்".

"சின்னம்மா, உன்னைப் போல் வீட்டுக்கு ஒரு பவித்ராம்மா இருந்தா என்னைப் போல எத்தனை யாதம்மாக்கள் வாழ்வு பெற்றுத் தலை நிமிருவாங்களே. நீ நல்லாயிருக்கிணும் அக்கா" என்று கரைந்தாள் யாதம்மா.

"அம்மா, நான் சீக்கிரமே இங்கு திரும்பி வருவேன். கவலைப்படாதே" என்று ஓர் உருப்படியான காரியத்தை முடித்த திருப்தியோடு டில்லி புறப்பட்டாள் பவித்ரா.

"எனக்காக இல்லாவிட்டாலும் யாதம்மாவுக்கு வேண்டியாவது வந்து விடு!" என்று அம்மா சொன்னாலும் அதில் கொடுமை இல்லை - மென்மையே இருந்தது.



பாவலர். கருமலைத்தமிழாழன்

# மூவகை மனிதர்



தனக்காக வாழுகின்ற
தன்னலமே குறியாகித்
தினந்தினமும் பொருள்குவிக்கும்
தீராத ஆசையினை
மனம்வைத்து ஈகையினை
மறந்திட்ட மனிதனிங்கே
இனத்தோடு சேராமல்
விலங்கென்றே பெயர்பெறுவான்!

தன்னலமும் பொதுநலமும்
தகைநலமாய் இணைந்திங்கே
அன்புநலம் தன்னகத்து
அழகுநலம் எனவணிந்து
தன்குடும்பம் சுற்றத்தார்
தகுவாழ்வு நடத்துதற்கே
இன்பமுடன் உழைப்பவனே
இந்நிலத்தில் மனிதனாவான்!

இனிக்கின்ற பொதுநலமே
இனிமையெனப் பிறருக்காய்
கனிவாகத் தன்வாழ்வை
கனியாக எடுத்தளித்துப்
புனிதமென அருளினையே
புரிகின்ற அகமாகி
முனிவின்றி ஈபவனே
மனிதரிடை தெய்வமாவான்!

# களப்பணி அனுபவங்கள்

திருநெல்வேலி மா.தி.தா. இந்துக் கல்லூரியில் எம்.ஃபில் ஆய்வு மாணவனாய் சேர்ந்தேன். அப்போது மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக் கழகமும் இயங்க ஆரம்பித்து விட்டது. நாட்டுப்புறக் கதைகளுக்கு என்று தனித்துறை ஆரம்பிக்கப்பட்டதால் எனது ஆய்வுக்கு வழிகாட்டிய டாக்டர். பேராசிரியர் திரு. தட்சணாமூர்த்தி அவர்கள் என்னிடம் "நீங்கள் கிராமத்தில் வாழ்கிறீர்கள், இலக்கியவாதியாகவும் இருக்கிறீர்கள். எனவே "நாட்டுப்புறக் கதைகள்" சார்பான ஆய்வையே மேற்கொள்ளுங்கள்" என்று கூறினார்கள்.

அந்த விதை என் நெஞ்சில் ஆழமாகப் பதிந்தது. சிலநாள் கழித்து தென்காசியில் ரசிகமணி டி.கே.சி. அவர்களின் நினைவு நாள் கொண்டாடப் பட்டது. அதில் கலந்து கொள்ள கரிசல் இலக்கிய மேதை திரு. கி. ராஜ நாராயணன் அவர்கள் வந்திருந்தார்கள். அவர்களைச் சந்தித்து 'ஆய்வு' குறித்துக் கூறினேன். அவர் "நீர் நாட்டுப்புறக் கதைகளைத்தான் ஆய்வுக்கு எடுத்துக் கொள்ள வேண்டும்" என்று உத்தரவே போட்டு விட்டார். விதை முளைக்க ஆரம்பித்தது.

எனது 'நட்சத்திர விழிகள்' நூல் வெளியிடுவது சம்பந்தமாக திரு. மீரா அவர்களைச் சந்திக்க சிவகங்கை சென்றிருந்தேன். அவர்களிடம் ஆய்வு குறித்தும் ஆய்வின் தலைப்பு குறித்தும் கூறினேன். அவரோ இதுவரை தமிழகத்தில் வெளிவந்திருக்கிற நாட்டுப்புறக் கதைகளின் பட்டியலையும் தந்து தான் வெளியிட்டிருக்கிற நாட்டுப்புற இலக்கியம் தொடர்பான புத்தகங்களையும் தந்து "இவைகளில் இல்லாத, இதுவரை அச்சேறாத கதைகளைத் தொகுத்துத் தாருங்கள். நூலாக வெளியிடுகிறேன்" என்றார்கள். முளைத்த விதை தளிர்விட ஆரம்பித்தது.

**கழனியூரான் எம்.ஏ.**



முதலில் இதுவரை அச்சில் வெளிவந்திருக்கிற நாட்டுப்புறக் கதைகள் அனைத்தையும் சேகரித்தேன். அதன்பின் அவைகளைப் படித்து உள்வாங்கினேன். அதன்பின் கதைகள் தேடிக் களத்திற்குப் போனேன். எல்லா ஊரிலும் "அடேடே... நன்றாக கதை சொல்கிற ஒரு பெரியவர் இருந்தார். அவர் போன வாரம் தானே செத்துப் போனார்" என்பது மாதிரியான பதிலையே கூறினார்கள்.

யார் எந்தக் கதை சொன்னாலும் அது அச்சில் வந்ததாகவே இருந்தது, எனக்கு சோர்வைக் கொடுத்தது. கதைகளைச் சேகரிக்க ஆரம்பித்த புதிதில் வெட்கமாகவும் கேவலமாகவும் இருந்தது. ஆய்வு வெற்றி பெற வேண்டும் என்ற 'வெறி'தான் என்னை இந்தப் பணியில் ஆழமாக ஈடுபட வைத்தது.

அநேகக் கதைகளில் உள்ள கற்பனை நயமும் கலை அம்சமும் என்னை வியப்பில் ஆழ்த்தின. இந்த ஆர்வம் நாளாக நாளாக வெறியாகவே மாறி விட்டது. நாட்டுப்புறக் கதைகள் என்பது ஒரு தனி உலகமாகவே எனக்குப் பட்டது. மற்ற அனைத்துப் படைப்பிலக்கியங்களின் 'வேர்' இதுதான் என்ற ரகசியம் எனக்கு புரிந்தது.

நாட்டுப்புறக் கதைகளை முதலில் கேட்டு நோட்டில் எழுதினேன். அந்தக் கதைகளின் 'ஜீவனே' கதை சொல்லுகிறவர்களின் மொழி நடையிலும், தொனியிலும்தான் இருக்கிறது என்பதைப் புரிந்து கொண்டு அவர்கள் சொல்வதை அப்படியே டேப்

ரிக்கார்டர் மூலம் கேசட்டு களில் பதிவு செய்தேன். நாட்டுப்புறக் கதைகளைப் புத்தகமாக வெளியிடுவதை விட அதை கேசட்டாக வெளி யிடுவதுதான் "தர்மம்" ஆகும்.

நாட்டுப்புறக் கதைகளோடு எனக்கு நீண்ட நெடிய உறவு உண்டு. என் காது கேட்கப் பழகிய காலத்தில் இருந்து சுமார் பதினைந்து வயது வரை எத்தனை கதைகளை கேட்டி ருக்கிறது என் காதுகள்?

அந்தக் காலத்தில் ஓர் ஊரில் இருந்து இன்னோர் ஊருக்குப் போக 'பஸ்' போக்கு வரத்து அவ்வளவாகக் கிடை யாது. அதனால் பெரும்பாலும் நடந்தேதான் போவார்கள். என் தாத்தா எந்த ஊருக்குச் சென் றாலும் நடந்தேதான் போவார். நான்வேறு அவருடன் கிளம்பு வேன். அவருக்கும் என்னை விட்டுவிட்டுப் போக மனம் இருக்காது. எனவே தோளில் துண்டை நாலாக மடித்துப் போட்டு அதில் ஏறி இருந்து கொள் என்பார். நான் தோளில் இருந்து அவர் தலைமுடியை இறுக்கமாகப் பிடித்துக் கொள் வேன். நடை கூடியதும் கதை சொல்ல ஆரம்பித்து விடுவார். ஊர்போய்ச்சேரும் வரை கதை தொடரும். அப்படிக் கதைகள் கேட்டபோது எனக்கு எட்டு அல்லது பத்து வயது இருக் கும். அவை எல்லாமே இப் போது எனக்கு மறந்துவிட்டன.

என் தாயாருக்கு எழுதப் படிக்கத் தெரியாது. கை நாட்டுப் பேர்வழி. நான் எம்.ஏ., படித்தவன். எனவே எனக்கு படித்தவன் என்ற "மமதை" இருந்தது. எம்.ஃபில் ஆய்வு என்று ஆரம்பித்தபின் நாட்டுப் புறக் கதைகள் சேகரிக்க வேண்டும் என்ற நிலை வந்த பின் முதன் முதலில் நான் கதை கேட்டது என் தாயாரிடம் தான். அப்போதுதான் நான் உணர்ந்தேன். "நம்மிடம் ஏட்டுக் கல்வி மட்டுமே இருக்கிறது. இப்போது அவர்களிடம் அல்லவா ஆய்வுக்கு "மூலப் பொருள்" வேண்டிக் கையேந்தி நிற்க வேண்டியதிருக்கிறது" என்பதை உணர்ந்து கொண் டேன்.

சேரிப் பகுதியில், மாட்டுத் தொழு வீச்சத்தில், கொசுக் கடிக்கு மத்தியில் அரிக்கேன் விளக்கு வெளிச்சத்தில் வாழும் மக்களில் சிலர் கூறிய கதை களில் எல்லாம் ராஜாவும் ராணியுமே கதாபாத்திரங்கள்.

கதை அவர்களுக்கு கனவு களை வளர்க்கிறது. கஷ்டங் களில் இருந்து விடுபட உதவும் செலவில்லாத "கலை" கதை சொல்வது, கதை கேட்பது.

ஒரு கிராமத்திற்குக் கதை சேகரிக்கச் சென்றேன். ஒரு குடிசையில் ஒரு மூதாட்டி படுத்த படுக்கையாய் கிடந் தாள். அவள் நன்றாகக் கதை சொல்வாள் என்று கேள்விப் பட்டு அங்கு சென்றேன். "இவ ளிடமும் போய் 'கதை' கேட்க வேண்டுமா...?" என்று என் 'மூளை' முகம் சுழித்தது. என் றாலும் என் உணர்வு என்னை முன் தள்ளியது. அவளை 'தழைய வளையக்கட்டி' ஒரு மாதிரி கதை சொல்லச் சொன் னேன். எழுந்திருக்கவே 'கதி' இல்லாமல் கிடந்தவளுக்குக் கதை சொல்ல வேண்டும் என்றதும் புதிய தெம்பும் தெளி வும் வந்துவிட்டது. கதை சொல்ல ஆரம்பித்தவுடன் அவள் உடல் நலமில்லாமல் இருக்கும் உணர்வை அவளே மறந்து விட்டாள் போலும். கதையோடு ஒன்றி, உணர்ச்சி மயமாய் கதை சொல்ல ஆரம் பித்து விட்டாள். ஆனாலும் வயதாகிவிட்டதால், உடல்நிலை வேறு மோசமாகிவிட்டதால் இடை இடையே கதையை விட்டு விட்டாள். ஞாபகமறதியாக சில கதைகள் ஒன்றோடு, மற்றதைக் கலந்து சொன்னாள். அவை அநேகமாய் நான் ஏற்கனவே பதிவு செய்ததுதான். ஆனால் அதையும் பதிவு செய்தேன். கதை சொல்வதில் அவளுக்கு இருந்த ஆத்மதிருப்தியை என் னால் அன்றுதான் உணர முடிந்தது. அப்போது பதிவு செய்த கதையை உடனே அவ ளுக்குப் போட்டுக் காட்டினேன். அவள் குரலை ஒரு கருவி பதிவு செய்து மீண்டும் ஒலிப் பதை அவள் தன் தொண்ணூறு வருட 'சர்வீசில்' இன்றுதான் முதன் முதலாகக் கேட்கிறாள். அதைக் கேட்டு அட...டா... அவள் அடைந்த ஆனந்தம் இருக்கிறதே அதற்கு விலை மதிப்பேது...? இந்த முன்னுரை எழுதும்போது அவள் இறந்து விட்டாள் - என்று கேள்விப் பட்டேன். அவள் ஆத்மா சந் தோஷப்பட்டிருக்கும் என்று நினைத்துக் கொண்டேன். அதே போல பக்கத்து ஊரில் உள்ள ஒரு பெரியவர் "அடுத்தவாரம் வா கதை சொல்கிறேன்" என்றார். போனேன். அவர் 'பாடை' என் எதிரே வந்து கொண்டு இருந்தது - எனக்கு அவரோடு பல கதைகளும் பாடையில் போவதாக தோன் றியது.

எங்கள் ஊரில் இன்னொரு முதியவள் இருந்தாள். அவ ளும் நன்றாகக் கதை சொல்லு வாள். ஆனால் எங்கள் குடும்பத் திற்கும் அவள் குடும்பத்தாருக் கும் பரம விரோதம். போக்கு வரத்து எதுவும் கிடையாது. நன்மை தீமையில் இருந்தும் ஒதுங்கிக் கொண்டோம். கதை சேகரிக்க வேண்டும் என்று வந்தபோது, என் பரம்பரை வைராக்கியம், ஒரு மாலைப் பொழுதில் முறிந்தது. 'கதை' ஒரு நட்பு மலரை மலரச் செய்து விட்டது. அவளிடம் இருந்தும் சில அருமையான கதைகள் கிடைத்தன.

இன்னொருத்தி சுமார் மூன் றடி உயரம்தான் இருப்பாள். ஆனால் அவளுக்கு வயதோ 55

ஆகிறது. சிறுபிள்ளைகள் அவளை "குட்டக்காப் பாட்டி" என்று அழைக்கிறார்கள். பத்து வயது சிறுமியைப்போல இருக்கும் பெரிய மனுஷி அவள். அந்த ஊரில் பலரும் கூறினார்கள், "அந்த குட்டக்காப் பாட்டி குருணிக்கதை சொல்வாள்" என்று. அவளை 'வா... போ...' என்று ஒருமையில் அழைத்தால் கோபப்படுவாள் என்றும் 'வாங்க... போங்க' என்று பன்மையில் அழைத்தால்தான் சந்தோஷப்பட்டுக் கதை சொல்வாள் என்றும் முன்கூட்டியே கூறினார்கள். நான் அவளின் தாழ்வு மனப்பான்மையைக் கண்டு உருகிப் போனேன்.

நான் பன்மையில் அவளைப் புகழ்ந்து பேசிப் பல கதைகளைப் பதிவு செய்தேன். மற்ற பெண்களைப் போல அவளுக்குக் குடும்பம், வாழ்க்கை என்று சுமை இல்லை, சிக்கல் பிக்கல், பிடுங்கல் இல்லை. சதா கதைகளோடும், கனவுகளோடும்தான் வாழ்ந்திருக்கிறாள். மற்ற பெண்களைப் போல் நமக்கு உடல் வளர்ச்சி இல்லையே என்ற ஏக்கம் அவள் அடி மனதில் மண்டிக் கிடக்கிறது. ஆனால் மூளை வளர்ந்திருக்கிறது. எனவே அவள் கதைகள் கேட்டும், கதைகள் சொல்லியுமே தன் காலத்தைக் கழித்திருக்கிறாள்.

அதனால் தனக்கு ஒரு 'மாஸ்' வர வேண்டும் ஒரு மரியாதை கிடைக்க வேண்டும் என்று முயன்றிருக்கிறாள். எனவே மனதில் வைத்துப் பல கதைகளை ஒரு பொக்கிஷத்தைப் போலப் பாதுகாத்திருக்கிறாள். கதை சொல்லும் போதுதான் அவள் முகத்தில் எத்தனை மகிழ்ச்சி! தன் கதையும் பதிவு செய்யப்படுகிறது என்று உணர்ந்து அவள் மனதில்தான் எத்தனை சந்தோஷம்...? அவள் குரலை மீண்டும் அவள் கேட்டபோது அவள் அடைந்த



பரவசம் இருக்கிறதே... அது ஒரு பூ மலர்வதைப் போன்று புனிதமானது.

கல்யாண வீடு போன்ற விசேஷ வீடுகளுக்கு இரவெல்லாம் விழித்து வேலை செய்ய நேர்கிறபோது 'கதை' அங்கு நேரப் போக்கிற்கு உதவுகிறது. வயற்காட்டில் களை எடுக்கும் போதும் நடுகை நடும் போதும் வேலைக் களைப்பு தெரியாமல் இருக்கவும், வெயிலின் வெம்மையை மறக்கவும் 'கதைகள்' உதவுகின்றன.

பெண்கள் பெண்களிடம் கதை சொல்லத் தயங்குவது இல்லை. ஆண்களிடம், அதுவும் அந்நிய ஆண்களிடம், கதை சொல்லத் தயங்குகிறார்கள். எத்தனை வயதானாலும் பால் வேற்றுமை அவர்களைப் பாதிக்கத்தான் செய்கிறது.

அந்நிய ஆடவன் ஒருவன் அவள் முன்போய் நின்று கதை கேட்டால் அவள் கிழவியாக இருந்தாலும், 'புதுமணப் பெண் போல்' நாணம் கொள்ளவே செய்கிறாள். சில "பால் இயல்" கதைகளை பெண்கள் தங்களுக்குள்ளேயே பரிமாறிக் கொள்கிறார்கள். அதேபோல் ஆண்கள் சில பால்இயல் கதைகளை ஆண்களிடம் மட்டும் அதுவும் சிறிது பக்குவப் பட்டவர்களிடம் மட்டுமே கூறுகிறார்கள்.

சில பெரியவர்களுக்கு நல்ல கதைகள் தெரிந்து இருக்கிறது. ஆனால் அவர்கள் "நாமோ... படிக்காதவர், நாம் கூறும் கதைகள் இவர்களுக்கு எப்படி உதவும்?" என்று ஒரு தாழ்வு மனப்பான்மையில் இருக்கிறார்கள். எனவே அவர்களிடம் முதலில் இதற்கு முன் சேகரித்த ஒரு கதைக் கேசட்டைப் போட்டுக் காட்ட வேண்டும், அதைக் கேட்டால், 'அடேயப்பா... இது மாதிரிக் கதைதான் எனக்கு ஏராளமாக தெரியுமே..." என்று கதை கூற ஆரம்பித்து விடுவார்.

இதற்கு எதிர் மறையான அனுபவமும் சில இடங்களில் ஏற்படுவது உண்டு. ஒரு பெரியவர் கேட்டார். "தம்பி, நீங்க எதுவரைப் படிச்சிருக்கீங்க?" என்று. நான் 'எம்ஏ' படித்திருக்கிறேன் என்றேன். அவர், "அப்படியா?... நான் ஓர் அழிப்பாங்கதை போடுகிறேன். அதை அழி பார்க்கலாம்... அப்பதான் உனக்குக் கதை சொல்லுவேன்னு கூறினார்.

நான் "சரி சொல்லுங்கள் அழிக்கிறேன்" என்றேன். அவர்

கதை போட்டார்; 'ஆத்து மணலில் அரக்கீரை, பால லாகுமா? சாத்தூர் ரோட்டிலே, சுமைதாங்கி வைக்கலாகுமா?" என்று. நானும் கொஞ்சம் நேரம் யோசித்து யோசித்துப் பார்த்தேன். விடை தெரிய வில்லை. "தெரியவில்லையே" என்றேன். அவரோ, முகத்தில் அடித்த மாதிரி "நீ... என்ன... எம்ஏ. படித்துக் கிழித்தே? இந்தக் கதையழிக்க முடிய வில்லையே!" என்று கூறிவிட்டுப் பிறகு கதையை அழித்தார். (அரக்கீரையை ஆற்றுமணலில் பாவினால் முளைக்காது பாவல் என்றால் பாகற்காய் என்றும் பொருள்படும். வைக் கேலாகுமா - வைக்கலாமா? என்றும் வைக்கோலாகுமா என்றும் பொருள்படும்). நான் இவருக்கு 'தான்' அறிவு ஜீவிங் கிற மமதை நிறைய இருக்கிறது என்பதைப் புரிந்து கொண்டு, அவரிடம், என்ன இருந்தாலும் நாங்க படிச்சது பள்ளிப் படிப்புதானே! ஏட்டுச் சுரைக்கா கரிக்கு ஆகுமா...? என்று சொல்லி அவர் வழிக்கு நான் போய் பேசினேன். அதன்பின் அவர் சில கதை களைக் கூறினார். கிராமத்து மக்களிடம் நாம் படித்தவர்கள் அவர்கள் அறிவில்லாதவர்கள் என்ற நினைப்போடு அவர் களை அணுகக் கூடாது என்ப தற்கு இந்தச் சம்பவம் ஓர் உதாரணம்.

ஒருமுறை இரண்டு கதை சொல்கிறவர்கள் ஓர் இடத்தில் இருக்கும்போது நான் அங்கு போனேன். ஒருவர் கதை சொல்கிறவர் என்று எனக்குத் தெரியும். அவரிடம் போய் கதை கேட்டேன். அவர் கதை சொல்ல ஆரம்பித்தார். சிறிது நேரத்தில் பக்கத்தில் இருந்தவர் நீ கதையைத் தப்பாகச் சொல்லுகிறாய். அந்தக் கதை அப்படி இல்லை என்று பக்கத் தில் இருந்தவர் ஆரம்பித்தார். இவர் அதை மறுக்க, அதை அவர் சரி என்று கூற உனக்கு அந்தக் கதை தெரியுமா? என்று அவர் இவரை கேட்க, உனக்கு இந்தக் கதை தெரியுமா என்று இவர் அவரைக் கேட்க... எனக்கு ஒரே குழப்பமாகி விட்டது. எப்படியோ நான் இடையில் புகுந்து சமரசம் செய்து வைத்தேன். "ஊரு ரெண்டு பட்டா, கூத்தாடிக்கு கொண்டாட்டம்... கூத்தாடி இரண்டு பட்டா ஊருக்குக் கொண்டாட்டம்..." என்கிற மாதிரி அவர்கள் சண்டையால் எனக்குப் பல அரிய கதைகள் கிடைத்தன. இரண்டு புலவர் கள் இருக்கிற இடத்திலும், இரண்டு பெண்கள் இருக்கிற இடத்திலும் சண்டைக்குக் குறை வில்லை என்பார்கள். இரண்டு கதை சொல்லிகள் இருந் தாலும் அப்படித்தான் போலும். கலைஞர்களுக்கே உரித்தான ஒரு "டிரேடு மார்க்" அல்லவா... இந்த சிந்தனைச் சண்டை?

ஒரு பெரியவர் ஒரு கிரா மத்தில் ஒதுக்குப்புறமாக சிறிய பலசரக்குக் கடை வைத்து இருக்கிறார். அவர் நன் றாகக் கதை சொல்வார் என்று கேள்விப்பட்டுப் பல தடவை அவரிடம் போனேன். அவர் இன்னைக்கு நாளைக்கு என்று வாய்தாப் போட்டுக் கொண்டே இருந்தார் எனக்குப் பொறுமை இழந்துவிட்டது. இந்த மனிதன் இப்படி "கல்லாச் சாதிக்கி றாரே" என்று மனதுக்குள் நினைத்துக் கொண்டேன். என்றாலும் விடாமல் அடிக் கடி போய் கதை கூறும்படி கேட்டேன். கடைசியில் ஒரு நாள் அவர் கடையின் முன் பகுதியில் உள்ள நீண்ட பலகை யின் ஒரு பகுதியில் அமர்ந்து கொண்டு ஒரு ரூபாய்க்கு வேர்க் கடலை வாங்கினேன், தின்று தீர்த்தேன். பின்பு சோடா வாங்கிக் குடித்தேன். காசு கொடுத்தேன். 'ஓயாமல் அலை கிறானே" என்று என்னைப் பரிதாபமாகப் பார்த்த அவர் "தம்பி இன்றைக்குக் கதை சொல்லுகிறேன்" என்று ஆரம் பித்தார். கதை சொன்னார். கதை சொல்லும்போது கதை யோடு ஒன்றிவிட்டார். ஒருத் தன் வந்து "அண்ணாச்சி ஒரு கட்டு செய்யது பீடி கொடுங்க" என்றான்: இவர் இல்லை என்று சொல்லிவிட்டுக் கதை யைத் தொடர்ந்தார். கடைக் காரர் கதை சொல்வதில்தான் குறியாக இருந்தாரே தவிர வியாபாரத்தை மறந்தே விட் டார்.

கதைகள் சொன்னார் சொன் னார், சொன்னார், சொல்லிக் கொண்டே இருந்தார். இராத் திரி வெகுநேரம் ஆகிவிட்டது எனக்கே தூக்கம் வந்து விட்டது. இருவரும் சாப்பிட வும் இல்லை. எங்களைச் சுற்றிக் கதை கேட்க ஒரு கூட்டமே கூடிவிட்டது. அவர் பசியை மறந்து, தூக்கத்தை மறந்து, வியாபாரத்தை மறந்து கதை யிலேயே ஒன்றிவிட்டார்.

ஒருவர் ஒரு கதையைச் சொல்ல ஆரம்பித்தபின் அந்தக் கதை நாம் ஏற்கனவே பதிவு செய்த கதையாக இருந்தாலும், 'இந்தக் கதைதான் நமக்குத் தெரியுமே... என்று நினைத்து தாத்தா... இந்தக் கதை எனக் குத் தெரியும் வேறு கதை கூறுங் கள்' என்று கூறக் கூடாது... அந் தக் கதையையும் பதிவுசெய்து கொள்ளவேண்டும். ஏனெனில் அந்தக் கதைக்கும் அதற்கு முன் நாம் பதிவு செய்த கதைக்கும் எந்த விதத்திலாவது ஒரு 'பாடபேதம்' இருக்கும். அது நம் ஆய்வுக்குப் பயன்படும். அது மட்டும் அல்லாமல், கதை கூறியது போதும் என்று நாம் இடையில் நிறுத்தினால் அவ ருக்குக் கதை கூறும் ஆர்வம் குன்றிவிடும்.

ஒரே கதையை ஒரே நபரே மீண்டும் கூறும்போது சில மாற் றங்கள் காணக் கிடக்கின்றன. அவ்வப்போது உள்ள மன

நிலை, சூழ்நிலை, கதை கேட்கும் நபர், கதையைச் சொல்லும் காலம் முதலியவைகளைப் பொறுத்துக் கதையில் மாற்றம் நிகழ்கிறது. ஒரே நபர் ஒரு கதையை நீட்டி முழக்கியும் கூறுகிறார். அதே நபர் அதே கதையை வெட்டிச் சுருக்கி, 'கட்டியாக' ஒரு சில வரிகளிலும் சொல்லி விடுகிறார். இதனால் கதை கூறுபவர்களின் மன நிலை, உடல் நிலையைப் பொறுத்தும் கதையின் தன்மை அமையும் எனக் கருதலாம்.

பொதுவாக, சில நாட்டுப்புறக் கதைகளை உண்மைகளாகவே நடந்த கதை என்று கிராமத்து மக்களில் பலரும் நம்புகிறார்கள். அது ஒரு வேளை மூடநம்பிக்கையாகக் கூட இருக்கலாம். என்றாலும் அந்த நம்பிக்கையால்தான் அந்தக் கதைகளுக்கு அப்படி ஒரு மதிப்பும் மரியாதையும் கிடைக்கிறது. எனவேதான் அவை இன்றும் பலராலும் மனதில் வைத்து பூஜிக்கப் படுகிறது என்றும் கூறலாம். உதாரணமாக, 'கிளிக் கோயில் கதை' என்ற கதையில் வருகிற கிளிக் கோயிலுக்கு அரசன் மானியம் வழங்கியதாகவும் நம்பப்படுகிறது.

அதேபோல வெயிலின் கொடுமைதாளாமல் கைக்குழந்தையை மணலில் போட்டு அதன் மேல் ஒரு தாய் ஏறி நின்றதாக வரும் செய்தி உண்மை என்றும் அந்தத் தாயும் குழந்தையும் உடனே கல்லாகி விட்டார்கள் என்றும் அப்படி ஒரு சிலை ஏதோ ஓர் இடத்தில் இருப்பதாகவும் நம்புகிறார்கள்.

நாட்டுப்புறக் கதைகள் சேகரிக்க நான் ஒரு யுக்தியைக் கையாண்டேன். அதன் மூலம் எனக்குப் பல கதைகள் கிடைக்கின்றன. அதாவது "நான் கிராமங்களில் நடைபெறுகிற பட்டி மன்றம், வழக்காடு மன்றம் போன்ற நிகழ்ச்சியில் கலந்து கொண்டு பேசுகிறபோது எல்லாம் பேச்சின் இடையே ஏதேனும் ஒரு நாட்டுப்புறக் கதையைக் கூறிவிடுவேன். பிறகு இதுபோன்ற கதை தெரிந்தவர் எனக்குக் கதை கூறுங்கள் அல்லது கதை கூறத் தெரிந்தவர்களின் பெயர்களையாவது கூறுங்கள்" என்று கூறுவேன். நிகழ்ச்சி முடிந்தபின் எனக்குப் பல கதைகள் கிடைத்தன. அல்லது கதை கூறுபவர்களின் முகவரி கிடைத்தது.



சாதாரணமாக பஸ்ஸில் போகிறபோது, பஸ்ஸுக்காகக் காத்து நிற்கிறபோது என் அருகில் கிராமத்து மக்கள் இருந்தால் நானே வலியப் போய் ஒரு 'கதை' சொல்வேன். அவர்கள் எனக்கும் இது மாதிரி கதை தெரியுமே என்று கூற ஆரம்பித்து விடுவார்கள்.

நான் பிறந்து வளர்ந்த ஊரில் எனக்குக் கதை சேகரிக்க கஷ்டமே இல்லை. ஏனென்றால் என்னைப் பற்றி அனைவரும் அறிவர். நான் அடிக்கடி நாடகம் நடத்துவதாலும், வழக்காடு மன்றத்தில், பட்டிமன்றத்தில் பேசுவதாலும், அவர்களிடமே நன்கொடை வசூல் செய்து இலக்கிய நிகழ்ச்சிகள் பல ஏற்பாடு செய்வதாலும் என்னை நன்றாக அறிந்து இருந்தனர். எனவே நான் நாட்டுப்புறக் கதைகள் சேகரிக்கிறேன் என்று தெரிந்து அவர்களில் பலர் தாமே முன் வந்து, என் வீடு தேடி வந்து பல கதைகளைக் கூறி உதவினர்.

அநேகமாகப் பலர் எங்கள் குடும்பத்தோடு தொடர்பு உடையவர்கள் அல்லது எங்கள் கழனியில் வேலை பார்ப்பவர்கள். எனவே எனக்காகத் தங்கள் பொன்னான நேரத்தை ஒதுக்கிக் கதை கூறினார்கள்.

நான் இலக்கிய நிகழ்ச்சி நடைபெறும் வரையிலான மாலை நேரத்தில் எல்லாம், கேசட்டில் பதிவு செய்த கதைகளை ஒலிபெருக்கி (loud speaker) மூலம் ஒலிபரப்புவேன். பலரும் கூட்டம் கூட்டமாக ஒலிபெருக்கிமுன் அமர்ந்து அதைக் கேட்க ஆரம்பித்து விட்டனர்.

என் கதைக் கேசட்டுகள் எத்தனையோ பேர் கைமாறி இருக்கிறது. அவரவர் வீட்டில் போட்டுக் கேட்க ஆரம்பித்து விட்டனர். அதைப் பிரதி எடுத்து வைத்துக் கொண்டவர்களும் உண்டு. அகில இந்திய வானொலி நிலையத்துக்காரர்களிடமும் நான் பதிவு செய்த கதைகளில் சிலவற்றைப் போட்டுக் காட்டினேன். ஓர் இந்துப் பெண் முஸ்லிம் குடும்பத்தைப் பற்றிய கதையைக் கூறினார். அதேபோல் ஒரு முஸ்லிம் பெண் இந்துக் குடும்பத்தைப் பற்றிய கதையைக் கூறினார். ஆனால் இருவர் கூறிய கதையிலும் அவரவர் மதத்தின் சம்பிரதாயங்கள், சடங்குகள், பழக்க வழக்கங்கள் மாறவில்லை. நம் முன்னோர்கள் எந்த அளவுக்கு அடுத்த மதத்தவரின் பழக்க வழக்கத்தை, பண்பாட்டை, சமயச் சடங்கைக் கூர்ந்து கவனித்து இருக்கிறார்கள். அதை மதித்தும் போற்றியும்

இந்தக் கதைகள் சான்றாகும். ஒரு சமய ஒருமைப்பாட்டை இந்தக் கதைகள் ஏற்படுத்தி இருக்கின்றன.

கதைகளை அவர்கள் கூறு கிற நாட்டுப்புற வழக்குச் சொற்களைக் கொண்டேதான் எழுதவேண்டும் எனத் தீர் மானித்துக் கொண்டு அதே மாதிரி எழுத ஆரம்பித்தேன். எழுதத் துவங்கிய பிறகுதான் வட்டார வழக்கு மொழியில் எழுதுவதில் சிரமம் எனக்குப் புரிந்தது. அவர்கள் இயல்பாக, எளிதாக சொல்லிவிடுகி றார்கள். ஆனால் எழுதுகிற போதுதான் கஷ்டமாக இருக் கிறது. ஏனென்றால் நாம் வழக்கமாக எப்போதும் எழுத் துக்கு என்று ஒரு 'தனித் தமிழ்' நடை வைத்து எழுதிப் பழகி விட்டோம். இப்போது வட்டார வழக்கில் எழுதும்போது எழுத்து குறிப்பிட்ட நடையில் வேகமாக வருவதில்லை. நான் என்னதான் வட்டார வழக்கில் தான் எழுத வேண்டும் என்று முயன்றாலும், என்னையும் அறியாமல் அதில் எனது 'பண்டிதத் தமிழ் நடை' புகுந்து விடுகிறது. எல்லாம் பழக்க தோஷம்தான் காரணம். ஒரு வழியாக எனது வழக்கமான தமிழ் நடையை ஒதுக்கிவிட்டு வட்டார வழக்கில் எழுத ஒரு குட்டிப் போராட்டத்தையே என்னுள் நிகழ்த்தினேன். இப்ப வும் வட்டார வழக்கில் கதை எழுதுவது என்ற செயலில் நான் முழு வெற்றி பெற்று விட்டேன் என்று சொல்ல முடி யாது. ஏதோ முயன்றிருக் கிறேன் என்று சொல்வதுதான் பொருத்தம்.

இதுவரைக்கும் நான் களப் பணி செய்த பிறகும் பலப்பல கதைகளைக் கேட்ட பின்னும், பலப்பல கதைகளைப் படித்த பின்னும், நாட்டுப்புறக் கதை கள் என்ற ஒரு மகா சமுத் திரத்தில் ஒரே ஒரு துளியைத் தான் தெரிந்திருக்கிறேன் என் பதை நான் உணர்ந்துதான் இருக்கிறேன்.

இந்தத் துறை ஒரு 'மகா சமுத்திரம்'. இதில் நான் ஒரே ஓர் அடிதான் எடுத்து வைத் திருக்கிறேன் என்பது எனக்குப் புரிகிறது. அந்த ஓர் அடியி லேயே எத்தனை எத்தனை அற்புதமான அனுபவங்களை, அறிவை, கனலை, கற் பனையை, கலாபூர்வமான தரி சனத்தைப் பெற்றிருக்கிறேன் என்று எண்ணுகிறபோதுதான் என்னை அறியாமலேயே நாட்டுப்புறக் கதைகள் மேல் எனக்கு ஒரு தீராத காதலும் ஈடுபாடும் ஏற்படுகிறது.

கதை கேட்பது என்பதும் ஒரு கலைதான். ஒரு கண்ணாடிப் பாத்திரத்தைக் கையாள்கிற நேர்த்தியோடு அவர்களிடம் பழகிக் கதை கேட்க வேண்டிய திருக்கிறது. ஒரு தூண்டில் காரனின் சாமர்த்தியத்துடனும் நாம் நடந்து கொண்டால்தான் கதைகளை சேகரிக்க முடியும்.

நம் கல்வியை, அறிவை, ஞானத்தை, புலமையை ஒதுக்கிவிட்டு அவர்களைச் சரண் புகுந்திட வேண்டும். அவர்கள் 'கலைஞர்கள்' என் பதை உணர்ந்து அவர்களை மதித்துப் போற்றி அவர்களை ஒரு குருவின் நிலையில் வைத்து உபசரித்து நாம் அவர்கள் முன் இரந்து நின்று யாசித்து அந்தக் கலையமுதத்தைப் பெறவேண்டும்.

நமக்குத் தெரியாத ஒரு வித்தை, நமக்கு இல்லாத ஒரு புலமை அவர்களிடம் இருக் கிறது என்பதை உணர்ந்து நாம் அவர்களை அணுகினால் நிச்சயமாய் நமக்கு நல்ல கதைகள் கிடைக்கும். 'மோப் பம் குழையும்... அனிச்சம் முகம் திரிந்து, நோக்கக் குழையும் விருந்து' என்றார் வள்ளுவர். முகம் திரிந்து நோக்காமல் ஓர் அனிச்சப் பூவை நுகர்கிற நுட்பத்துடன் அவர்களை அணுகினால் நல்ல வெற்றி கிட்டும் என்பது எனது சொந்த அனுபவம்.

நம் கிராமத்து மக்களை நாம் மதிக்கிற மனம் இருந்து அவர் களின் கலைகள் மீதும் நமக்கு ஒரு மரியாதை உள்ளபடியே உள்ளத்தில் இருந்து நாம் களத்தை நோக்கிச் சென்றால் நமக்காக ஒரு நல்ல வரவேற்பு காத்திருக்கிறது என்பது உண்மை. ஏதோ ஆய்வுக்காகத் தலை எழுத்தே என்று 'கதை' சேகரிக்கப் போகிறவர்களுக் கும், காசு கொடுத்தும், அவர் களுக்குப் புகையிலையும் பொடி யும் வாங்கிக் கொடுத்தும் கதை சேகரித்து விடலாம் என்று போகிறவர்களுக்கும் நல்ல கதைகள் கிடைக்கும் என்று நம்புவதற்கில்லை. என் அனுபவத்தில் என்னிடம் கதை சொல்ல யாரும் காசு கேட்டதே இல்லை. நான்தான் சில முக் கிய பெண்களுக்கு என்னால் இயன்ற பணத்தைக் கொடுத்து இருக்கிறேன். அதுவும் அவர் களின் ஏழ்மை கருதிக் கொடுத் தேன். அதையும் அவர்கள் வாங்க மறுத்து, பிறகு நான் கட்டாயப்படுத்தியதின் பேரில் மனத்தாங்கலோடு தான் பெற்றுக் கொண்டனர். எனவே பணத்தை, ஆய்வை முன் வைத்து நம் பயணத்தை மேற் கொள்ளாமல் ஆர்வத்தை, அன்பை, ஈடுபாட்டை முன் வைத்துக்கதைகளைச்சேகரிக்க ஆரம்பித்தால் நல்ல வெற்றி கிடைக்கும் என்பது உறுதி.

சிதறுவது என்பது எளிது. சேமிப்பது என்பது கடினம். பொதுவாக உழைக்கவும் உற் சாகமாக எதையும் செய்யவும் தயங்காதவர்களுக்குக் கதை களைத் திரட்டுவது என்பதும் ஒரு கடினமான பணி அல்ல.

எனக்குக் கதைகள் கூறிய என் வட்டார மக்களுக்கே இக் கட்டுரையைக் காணிக்கை யாக்குகிறேன்.

ஃ




அரைமணி நேரத்திற்கு மேலாக நின்று கொண்டிருந்ததில் கால் வலிக்க ஆரம்பித்தது. பூச்சிதறலாய் நீர்த்திவலைகள் முகத்தில் தெறிக்குமளவிற்கு அடர்த்தியாகக் குளிர்ந்த காற்று வீசிக்கொண்டிருந்தும் அந்த சுகம் அனுபவிக்க முடியாத அளவுக்கு வலியின் தன்மை வீரியமாக இருந்தது. நீலமா பச்சையா என இனம் பிரிக்க முடியாத நிறத்தில் நீளநெடுக படர்ந்து வியாபித்திருந்த அந்த ஹுசேன் சாகர் ஏரித் தண்ணீரிலிருந்து பார்வையை மீட்டு இடமும் வலமும் பார்த்தான். இரு பக்கங்களிலும் கண்ணுக்கெட்டிய ஏழெட்டு பெஞ்சுகளிலும் ஜோடியாகவும் ஒற்றையாகவும் குடும்பமாகவும் ஜனங்கள் இருந்தார்கள்.

ஒருத்தராவது எழுந்து போய்த் தொலைக்கக் கூடாதா...? எரிச்சல் பட்டான்.

அம்மாவின் முணுமுணுப்பிற்குப் பயந்தே அதனின்று தப்பிக்க முடியாதெனினும் அதைச் சிறிது நேரம் ஒத்திப் போடலாமென்று வழக்கம் போல் ஆபீஸ் முடிந்து பஸ் பிடித்து வீடு போகாமல் ராணி கஞ்சிலிருந்து டாங்க்பண்ட் ரோடு மீது நடந்து வந்தான். ஏறக்குறைய இரண்டு கிலோ மீட்டர் நீளத்திற்கு விரிந்திருந்த அந்த அகன்ற சாலை ட்வின் சிடிஸ் எனப்படும் ஹைதராபாத் - செகந்திராபாத் நகரங்களைப் பிரிக்கிறதா இணைக்கிறதா...? எதுவோ ஒன்று. ராணிகஞ்சில் தொடங்கும் அக்கோடியிலிருந்து போலீஸ் ஸ்டேஷனில் முடியும் இக்கோடி வரை அலுப்பின்றி பல தடவை நடத்திருக்கிறான். ஆனால் இன்று அந்த நடை சுகம் தரவில்லை. மனம் சலித்துப் போயிருப்பதால்.

மீண்டும் திரும்பிப் பார்க்க... பெஞ்சுகள் ஹவுஸ்ஃபுல் நிலைமை. அதோ... இருவர் எழுந்து கொண்டிருக்கிறார்கள்.. இவன் சரசர வென்று நடப்பதற்குள் அதற்கு நேர் எதிரே நின்று கொண்டிருந்த இருவர் சட்டென

அந்த இடத்தைப் பிடித்துவிட்டார்கள். வெறுத்துப்போனான். சாலையின் மறுபக்கம் இருக்கும் புல்வெளியில் உட்கார நினைத்து பிளாட்பாரத்தை விட்டிறங்கி சாலையை கிராஸ் செய்ய முயன்றபோது... அதற்கும் காத்திருக்க வேண்டியதாயிற்று. பஸ்கள்... டபுள் டெக்கர்கள்... கார்கள்... ஆட்டோக்கள்... ஸ்கூட்டர்களின் அணிவகுப்பு கொஞ்சத்தில் இடம் தரவில்லை. இடைவெளி அற்ற அந்த வாகனச் சங்கிலி அவனுக்கு நிறையவே அலுப்பு தந்தது. ஒருவாறு கிராஸ் செய்து புல் தரையில் அப்பாடா என்று விழுந்து கால்களை நீட்டி கைகளை இரு பக்கமும் பரப்பி ஊன்றி அமர்ந்து அத்தனை நேரம் நின்ற உடல் ஆயாசத்தை ஆசுவாசப்படுத்திக் கொண்டான்.

'... பல்லி... பல்லி... கரம் பல்லி... டைம் பாஸ்... ஏக் ருப்யா, ஒக ரூபாய'...

பசி எட்டிப் பார்த்த வயிறு வாங்கச் சொன்னது. வேண்டாம். தாகமெடுக்கும். தண்ணீருக்கு எங்கே போவது...? எதற்கு இத்தனை வேண்டாத அவஸ்தையெல்லாம். ஒழுங்காக வீட்டிற்குப் போயிருந்தால் அம்மா டிபன் காப்பி தயாராக வைத்திருப்பாள். ஆனால் கூடவே அவளுடைய ஓயாத கல்யாண நச்சரிப்பும் தயாராகக் காத்திருக்குமே...

"என்னால் முடியலே வெங்கடேஷ். எனக்கும் வயசு ஏறிண்டே போறதுன்னு உனக்கு தோணவே தோணாதாடா...? எனக்கு முடியலேங்கறது ஒருபக்கம் கிடக்கட்டும். இந்தப் பொண்ணை எனக்கப்புறம் பார்த்துக்கவாவது ஒரு திக்கு வேணாமா? இதுக்கு வயசு ஏற ஏற இன்னும் எத்தனையோ இருக்கு. ஆம்பிளையான உன்னால அதெல்லாம் சமாளிக்க முடியாதேப்பா. நான் எத்தனை காலம் சாசுவதம்... ஒரு பொண்ணைப் பார்த்து பண்ணிக்கோ வெங்கடேஷ். உனக்கு அப்படி ஒண்ணும் வயசாகி விடலையே..."

ஏன் மனம் இப்படிப்பேயாட்டம் போடுகிறது... எதைத் தவிர்க்க வீடுபோவதை தாமதப் படுத்துகிறானோ அதுவே ஒரு மணி நேரமாக இப்படி ஒரு கணம் ஓயாமல் சிந்தையைச் சித்திரவதை செய்கிறதே...

ஹேமாவுடன் எத்தனையோ தடவை இந்த டாங்க்பண்ட் வந்திருக்கிறான். அந்தச் சமயங்களிலெல்லாம் நினைத்தாவது பார்த்திருப்பானா ஐந்து வருடம் கழித்து மாலை நேரங்களை அதே இடத்தில் இப்படி சங்கடத்துடன் கழிக்க வேண்டி வரும் என்று... கல்யாணமான அடுத்த வருடமே ஒரு புது உயிரை இவ்வுலகிற்கு அளித்து அதற்கான விலைபோல் தன் உயிர் நீத்தாள் ஹேமா. பிரசவப் போராட்டம்தான். அப்போது ஆரம்பித்த அம்மாவின் கல்யாணப் பாட்டு இத்தனை வருடங்களாய் நாள் விடாமல் ஒலித்துக் கொண்டிருக்கிறது.

அவள் மீதும்தான் என்ன தவறு... வயது ஏறிக்கொண்டே போவதால் கூடிக்கொண்டு போகும் தள்ளாமை. தனக்குப் பிறகு பேத்தியின் கதி என்னாகுமோ என்கிற கவலை. பிள்ளைக்கென்று ஒரு துணை இல்லாத துயரம். எல்லாமாகச் சேர்ந்து அவளை இம்சிப்பதால் அத்தனைக்கும் ஒரே பரிகாரமான மறுமணத்தை அவன்மீது வற்புறுத்துகிறாள்.

'ஹேமாவுடன் வாழ்ந்த வாழ்க்கையை வேறு பெண்ணுடன் பகிர்ந்து கொள்ள மனம் இடமளிக்கவில்லை. அவளிடத்தில் இன்னொருத்தியா...' என்றெல்லாம் அவன் அலட்டிக் கொள்ளவில்லை. அவன் அவளுடன் வாழ்ந்ததே ஒரு வருட காலம்தானே... ஆக, அவள் மீதான மறக்க முடியாத பிரேமை காரணம் காட்டி அவன் மறுமணம் மறுத்தான் என்றில்லை. புதிதாக ஒரு தொல்லையை வலிய வரவழைத்துக் கொள்ள வேண்டுமா என்றுதான். வயது முதிர்ச்சி, வறுமை, ஜாதகக் கோளாறு என்று எத்தனையோ இருக்கின்றனவே... அவைகளுள் ஏதாவது ஒரு காரணம் காட்டி ஒரு கையாலாகாத தகப்பனார் தன் பெண்ணை அவனுக்குக் கட்டி வைக்கத் தயாராக இருக்கலாம். இவ்வளவாவது தனக்குக் கொடுப்பினை உள்ளதே என்று அந்தப் பெண் ஆரம்ப காலங்களில் சுமுகமாகவே இருக்கக்கூடும். போகப் போக மனம் பேதலிப்பு காரணமாக உணர்வுகள் தறிகெட்டலைந்து அந்தச் சுமுகம் தலைகீழாய் மாறிவிடும் சாத்தியக் கூறுகளும் உண்டே... அதன் பிரதிபலிப்பாய் அந்த விஷ முள் அவனையும் அவனின் சின்னஞ்சிறு மகளையும் எப்படியெல்லாம் குத்திக் குதறுமோ...? மகளுக்காக மறுமணம் என்பது போய் அந்த மறுமணமே மகளுக்குப் பகையாகி விடக்கூடாதே. அவனுடைய பிடிவாதமான மறுப்புக்கு இது ஒன்றுதான் ஆழமான காரணம் என்றில்லை. இதுவும் ஒன்று. மொத்தத்தில் அவனுக்கு இன்னுமொரு கல்யாணத்தில் மனம் செல்லவில்லை. நாட்டமில்லை... இசைவில்லை... அவ்வளவுதான்.

புல்வெளியில் ஆங்காங்கே கொத்துக் கொத்தாய் அமர்ந்திருந்த ஜனங்கள் கலைய ஆரம்பித்தனரே அன்றி புதிதாக எவரும் வந்து உட்காரவில்லை. வாகன நடமாட்டம் குறையவில்லை என்றாலும் முன்பத்தனை பரபரப்பில்லை. முன்னிரவு முடியும் தருணம் நெருங்கிவிட்டது உணர்ந்து எழுந்துகொண்டான்.

அம்மா கவலைப்படுவாள் பாவம். அனுக்குட்டி தூங்கிப்

போயிருக்கும். ச்சே... தன் சிரமத்தையே பெரிதாகக் கருதி அவர்களை நினைக்கத் தவறி விட்டது எத்தகைய முட்டாள் தனம்.

அம்மா தன் வாதத்தை வக்கணையாக ஆரம்பிப்பாள். இருக்கவே இருக்கிறது வழக்க மான பதில். ஒப்பித்துவிட் டால் அப்போதைக்கு அம்மா ஓய்ந்துவிடுவாள், அது இன் றைய தினத்திற்கான முத் தாய்ப்பு மட்டுமே. உத்தரவாத மில்லாத முடிவுரை. ஆனால் குறைந்தபட்சம் இன்று என்ற ஒரு நாள் முடிந்து விடுகிறதே...

ஆனால்...வீடுசேர்ந்தபோது அம்மா கல்யாணம் பேச வில்லை. அவளிடம் வேறு புது விஷயம் இருந்தது அவனுக்குச் சொல்ல.

"வரதாச்சாரியை உனக்கு நினைவிருக்கா வெங்கடேஷ்...?"

"வரதாச்சா...ரி...? ஆங்... வக்கீல்தானேம்மா... மெட் ராஸ்ல அவர் வீட்டில் நீ சமை யல்..." சட்டென்று நாக்கடித்து நிறுத்தி பின்பு தொடர்ந் தான். "அவரோட பங்களா அவுட்ஹவுஸிலேதாம்மா அப்ப நாம குடியிருந்தோம்..."

"பரவாயில்லடா. நீ ஒண் ணும் தப்பா பேசிடலயே. அப்ப நான் சமையல்காரியா இருந் தாலும் இப்ப ராஜாவாட்டம் கை நெறய சம்பாதிக்கற பிள்ளை. எனக்கென்ன... மகா ராணியாட்டம் இருக்கேன்... ஒரே ஒரு குறையை நீத்துப் பார்த்தா..." குபுக்கென்று பொங் கிய நீரை வந்த வேகத்தில் உள்ளுக்குள் இழுத்துக் கொண்டு பேசினாள்.

"அந்த வக்கீலேதான். அவர் கிட்டேயிருந்து லெட்டர் வந் திருக்கு. அடுத்த வாரம் ஹைதராபாத் வராறாம். ஆமா... ஏன் இத்தனை லேட்... அனுகூட தூங்கிட்டது பார். டிபன் வேணாம். ஒரேடியா சாப்பிட்டுடு. லெட்டர் படிச் சிட்டு வா..."

அவன் கடிதம் படிக்க வில்லை. அம்மா குறிப்பிட்ட அந்தப் பெயர் ஆழ்மனதுள் உறங்கிக் கொண்டிருந்த பழைய நினைவுகளை விசுக் கென்று தட்டி எழுப்ப அதில் அமிழ்ந்துபோனான்.

அவனுக்கு ஆறு வயதான போது அந்தக் காலத்தில் சொற்ப சம்பளத்தில் கிளார்க் வேலை பார்த்த அவன் தந்தை இறந்து போக அம்மா சமையல் வேலை செய்து ஜீவனம் ஓட்ட வேண்டிய நிலைமை ஏற் பட்டது. அப்படி அவள் சமை யல்காரியாக அமர்ந்தது வக்கீல் வரதாச்சாரி வீட்டில்தான். அந்தக் காம்பவுண்டின் அவுட் ஹவுஸில் அவர்கள் தங்கிக் கொள்ள அனுமதிக்கப்பட்டது. வக்கீலின் ஒரே மகளான பத்மா படித்த பள்ளியிலேயே அவனையும் படிக்க வைத் தாள் அம்மா. சக்திக்கு மிஞ்சி யதுதான். ஆனாலும் வயிற் றைக் கட்டி வாயைக் கட்டி மகன் கல்விக்குச் செலவழித் தாள். ஒன்பதாவது வகுப்பில் படித்துக் கொண்டிருந்தபோது பள்ளிக் கூடத்தில் ஹைதரா பாத் எக்ஸ்கர்ஷன் போகத் திட்ட மிட்டபோது அவனும் ஆசைப் பட்டான். அதற்கு மேற்கொண்டு ஒரு நூறு ரூபாய் தேவைப் பட்டு, அவனும் அம்மாவுமாய் வக்கீலை அணுகியபோது அவர் நாக்கு கக்கிய விஷத் துளி இன்னும் நெஞ்சை விட்டு இறங்கவில்லை.

"கேவலம் ஒரு சமையல் காரியின் பையனுக்கு எக்ஸ் கர்ஷன் கேட்கறதா... நாங்க இருக்கப்பட்டவா. ஹைதரா பாத் என்ன, உலகம் முழுக்க சுத்தி வரலாம் என் மகள் பத்மா. அவளோட உனக்குப் போட்டியா... அவளுக்கு சமமா அவ படிக்கற ஸ்கூல்ல நீ படிக்கறயே, அதுவே உன் தலைல கிரீடம் வச்சதுக்கு சமானம். எதுவோ எதைப் பார்த்தோ ஆசைப்பட்டு அவ மானப்பட்டது. சின்னப் பையன் அவனுக்குத்தான் தெரியாது. உனக்குமா அது புரியாது அல மேலு? அவனுக்கு சிபாரிசு பாடிண்டு கூட வந்து நிக் கறயே... ரெண்டு பேரும் போய் வேலையைக் கவனி யுங்க..."

ஓலக் குமுறல்களை அப் படியே உள்ளுக்குள் இழுத்துக் கொண்டு ஊமைகளாக இடம் விட்டு நகர்ந்தார்கள். 'நீயு மாச்சு... உன் வேலையுமாச்சு' என்று உதறிவிட்டு வரமுடிய வில்லையே என்ற ஆற்றாமை மட்டும் பொங்கிப் பொங்கி எழுந்தது.

வறுமைக் கோட்டின் மீது நிற்பவர்களுக்கு ரோஷம் என் பது பரம வைரி ஆயிற்றே... சுயகௌரவத்தை மதித்து அமுக்கி அங்கேயே தொடர்ந்து நின்று பள்ளிப்படிப்பு முடித்து... பிறகு அந்த வீடு விலக்கி வேறு இடம் சேர்ந்து... ஸ்பெஷல் கோர்ஸ் எடுத்து எங் கெங்கோ சுற்றித்தற்செயலாக அதே ஹைதராபாத் நகரில் கைடாக உத்தியோகம் ஏற்றான். அடுத்த மூன்றாவது வருடத்தில் 'ஹைதராபாத் ஸைட்ஸீயிங்' டூரிஸ்ட் பஸ்ஸில் எதிர்பாராத விதமாக வரதாச்சாரி, அவர் மனைவியைச் சந்திக்க நேர்ந் தது... அவர்கள் இவனை அடையாளம் கண்டு கொண்டு தங்கள் தவறு நினைத்து வருந்தியது... உலகம் என்ன, வீட்டைக்கூடச் சுற்றிவர முடி யாமல் இருந்த இடம் விட்டு நகர முடியாதபடிக்கு ஒரு விபத்து பத்மாவைச் சக்கர நாற்காலிக்குள் சிறைப்படுத்த... அத்தனைக்குப் பிறகும் அவர்கள் சிறிதும் மனசாட்சி இன்றி அவளைக் கல்யாணம் செய்துக்கறயான்னு அவனைக் கேட்டது... இதுதான் சமய

மென்று அவர்களைப் பழி 'வாங்கும் எண்ணமின்றி அவர்கள் மனம் புண்படாத விதத்தில் நாசூக்காக மறுதலித்தது... அத்தனையும் டைரி படிப்பதுபோல் வரிசையாக அவன் நினைவில் ஓடின.

அதே வரதாச்சாரிதான் இப்போது வருகிறாராம். எதற்காகவாம்... கடிதம் படிக்கலானான்.

அவரின் நான்கு வயதுப் பேரன் கடுமையான ஆஸ்த்துமாவால் அவதிப்பட்டுக் கொண்டிருப்பதாகவும், எந்த மருந்துக்கும் கட்டுப்படாத நிலையில் ஹைதராபாத்தில் ஒவ்வொரு வருடமும் ஜூன் ஏழாந்தேதி வழங்கப்படும் மருந்தின் மீது நம்பிக்கை வைத்து வருவதாகவும், அவனுக்கு அந்த ஊரில் உள்ள அதிகமான அனுபவம் காரணமாக அவனை அணுகுவதாகவும் எழுதியிருந்தார்.

கைடு வேலை அலுத்துப்போக அதே நிறுவனத்தில் டேபிள் ஒர்க் மேற்கொண்டு சில வருடங்கள் ஆகின்றன. அவனுக்கு அந்த ஆஸ்த்துமா சிகிச்சை குறித்து விபரங்கள் ஓரளவுக்குத் தெரிந்திருந்தன.

வக்கீல் குடும்பம் குறித்து அறவே மறந்து போயிருந்த அவனுக்கு அப்போது நினைவுகள் மட்டும் நெஞ்சின் அடித்தளத்தில் இருந்து அலை அலையாய் மேலே கிளம்பி வந்தனவே தவிர வேறு எந்தவிதமான சலனமும் இல்லை. அந்தத் தீக்கங்கு வார்த்தைகள் மட்டும் நினைவில் உறுத்திக்கொண்டே இருந்ததே தவிர அது காரணமாய் அவர்கள் மீது துவேஷம் இல்லை. அதே மனநிலையில் அதற்கு அடுத்த வாரம் ஸ்டேஷன் சென்று அவர்களை அழைத்து வந்தான். வரதாச்சாரி, அவர் மனைவி அலமேலு... உப்பிய முகத்துடன் புஸ்புஸ் என்று மூச்சிறைத்த படி மூக்கு உறிஞ்சிக் கொண்டிருந்த நான்கு வயது தீபக்... ஆக மூன்று பேர்தான்.

இந்தப் பையன் யார் குழந்தை... பத்மாவினுடைய தாகத்தான் இருக்க வேண்டும். அவள் அவர்களுக்கு ஒரே வாரிசாயிற்றே. அப்படியானால் பத்மா ஏன் வரவில்லை... சட்டென நினைவு வந்தது அவளால் நடக்க முடியாது என்பது. அவளுக்கு கல்யாணமாகிவிட்டதா... இது அவள் குழந்தைதானா... மனதுள் ஏகப்பட்ட கேள்விக் கொக்கிகள்.

அவன் ஊகித்தது சரிதான். அவன் பத்மாவின் குழந்தைதான். அலமேலு அழுகையினூடே மகளைப் பற்றிக் கூறிய தகவல்கள்... அவர்கள் ஏராளமாய் வாரி வழங்கிய வரதட்சிணை, சீர் செனத்தி சீதனங்களைத் தாராள மனதுடன் பெற்றுக்கொண்ட மாப்பிள்ளைப் பையன் கூடவே பத்மாவையும் சக்கர நாற்காலி சீதனத்துடன் ஏற்க வேண்டியதாயிற்று. சில மாதங்களுக்குள்ளாகவே நொண்டிப் பெண்ணுடனான அந்த இல்லறம் கசந்து போக, அந்தப் பையனும் அவன் வீட்டாரும் அவளை மிகவும் கேவலமாகக் கொடுமைப்படுத்த ஆரம்பித்தார்கள். சதாசர்வ காலமும் அவளை இம்சித்து சித்ரவதை செய்தார்கள். விஷயமறிந்து கொதித்துப் போன வக்கீல் மகளை உடனுக்குடன் வீட்டிற்கு அழைத்துக் கொண்டார். அவளின் மனப்பூர்வமான சம்மதத்துடன் விவாகரத்தும் வாங்கிவிட்டார். இப்போது அவளுக்கு வாழ்வில் மிஞ்சியதெல்லாம் அந்த சின்னஞ்சிறு ஆஸ்த்துமா பிள்ளையும், சக்கர நாற்காலியும் மட்டுமே.

'மாமி... மாமி...' என்று அரற்றியபடி நடந்து முடிந்த அவலக் கதையை அம்மாவின் கைகளைப் பற்றிக்கொண்டு வாய்விட்டுப் புலம்பியபடி கொட்டித் தீர்த்தாள் அலமேலு. ஒரு காலத்தில் 'கேவலம் சமையற்காரி' ஆன அம்மா இப்போது அவளுக்கு அந்தஸ்திற்குரிய 'மாமி' ஆனாள். முதுமை மட்டுமன்றி மகளின் வாழ்க்கை பல படிவங்களில் கோரமாகச் சீர் அழிந்து போன வேதனை காரணமாகவும் அந்த தம்பதிகள் குறுகித் தளர்ந்து போயிருந்தார்கள். அடியோடு நிலைகுலைந்து போயிருந்தார்கள். பரிதாபமாகத்தான் இருந்தது அவனுக்கு. அவர்களின் ஆணவம் அகம்பாவம் எல்லாம் எங்கே போயிற்று...!

பத்மாவின் கால்கள் சிதைந்து போனதற்கு இவன் வயிற்றெரிச்சல் காரணமாயிருக்குமோ என்று அவர்கள் பல வருடங்கள் முன்பு அந்த டூரிஸ்ட் பஸ்ஸில் பேசிக் கொண்டதை அவன் கேட்க நேரிட்டது. இப்போது அவள் வாழ்க்கையே சிதைந்து போயிருக்க இதெல்லாம் இவன் சாபம் காரணமாகத்தான் என்று எத்தனை தடவை நினைத்துக்கொண்டார்களோ...

ஏழாந்தேதி அவர்கள் வந்த வேலை முடிந்தது. சிறுவன் சோர்ந்து போய் உறங்கிக் கொண்டிருந்தான். அவனை அணைத்தபடி பக்கத்தில் அலமேலு. வரதாச்சாரி ஈஸிசேரில் கண்மூடி சாய்ந்திருந்தார்.

அம்மாவைத் தன் அறைக்கு அழைத்துச் சென்றான் வெங்கடேஷ். மெல்லிய குரலில் கிசுகிசுப்பாக அவன் சொன்ன விஷயத்தைக் கேட்டு பலத்த அதிர்ச்சி அடைந்தாள் அம்மா. "சுயநினைவோடதான் பேசறயா வெங்கடேஷ்... அந்தப்பெண்..."

"நீ சொல்ல நினைக்கறது எனக்குத் தெரியும்மா. நானும் செகண்ஹாண்ட் தாங்கறது மறந்துட்டயா?"

அம்மா எதுவும் சொல்ல வில்லை.

"வாழ்க்கைல எத்தனையோ விதத்துல கஷ்டப்பட்ட நீ இன்னொரு பெண்ணுக்கு நல்லது நினைக்கக்கூடாதாம்மா...?"

"சரி... செகண்ட்ஹாண்டோ தேர்ட்ஹாண்டோ... உன் இஷ்டம். ஆனா... கால் விளங்காத அந்தப் பொண்ணால உனக்கோ குழந்தைக்கோ என்ன சுகம் கிடைச்சிடப் போறது? கல்யாணம் பண்ணிக்கோன்னு தவியா தவிக்கற என்னோட நோக்கமே நிறைவேறாமப் போயிடுமேடா. மாறாக நீதான் அதனால நிறையக் கஷ்டப்படுவே. எனக்கு இதுல கொஞ்சம்கூட இஷ்டமில்லே. நான் சொல்றதைச் சொல்லிட்டேன். அப்புறம் உன் இஷ்டம்..." அம்மா முகத்தைத் திருப்பிக் கொண்டாள்.

இவளைச் சமாதானப் படுத்த சரி என்று சொல்ல வைக்க நிறைய பொறுமை தேவை எனப்பட்டது. இவள் புரிந்து கொள்ளும் விதத்தில் விளக்கமாகச் சொல்ல வேண்டும்.

சில வினாடிகள் சொல்ல நினைத்தவற்றை மனதுள் கோவைப்படுத்தும் விதத்தில் மௌனமாய் இருந்தான். சொல்ல ஆரம்பித்தான்.

"அம்மா... நான் சொல்லப் போறதைக் கொஞ்சம் கவனமா கேக்கறயா... மறுமணமே வேண்டாம்னு பிடிவாதமா இருந்த நான் இவர்களைப் பார்த்ததும் திடீர்னு மனசு மாறினது உனக்கு ஆச்சரியமா இருக்கலாம். இவர்கள் மேலோ அந்தப் பெண் பத்மா மீதோ பச்சாதாபம் ஏற்பட்டு நான் இந்த முடிவுக்கு வந்துடலே. இதுக்கு இரக்கம் மட்டுமே காரணம்னா ஏழெட்டு வருஷம் முன்னால இவர்கள் பத்மாவைக் கல்யாணம் செய்துக்கறயான்னு கேட்டப்பவே சரின்னு சொல்லி இருப்பேன். இப்ப திடீர்னு ஏன் இப்படியொரு தீர்மானம்னு சொல்றேன் கேள். இதுல என்னோட சுயநலமும் நிறையவே இருக்கும்மா. நடமாட முடியாதவள்... டைவர்ஸ் பெற்றவள்... மகனுக்குத்தந்தை என்ற ஒரு பலம் இல்லாதது... இந்த வேதனைக்குரிய குறைகள்ளாம் அவகிட்ட இருப்பதால் இதையெல்லாம் நினைச்சு நிச்சயமா அவ அனுவுக்கும் எனக்கும்... உனக்கும் கூட அனுசரணையா இருப்பா. நாற்காலி விட்டு இறங்க முடியாத பெண்ணால் அனுவை எப்படிப் பாத்துக்க முடியும்னு நீ யோசிக்கலாம். அவளைக் குளிப்பாட்டி விடறது சாதம் போடறது இதெல்லாம் நானோ நீயோ பார்த்துக்கலாம். முடியலேன்னா ஒரு வேலைக்காரி கூட அதுக்கு வச்சுக்கலாம். இதெல்லாம் மீறி அவளுக்கு தலை பின்னி விடறது, டிரஸ்

செய்யறது, பாடம் சொல்லித் தர்றது, பக்கத்துலே உக்கார வச்சு அன்பா அனுசரணையா பேசறது, ஆதரவு காட்டறது, அவ நல்லது கெட்டது கவனிச்சுக்கறது இதெல்லாம் பத்மாவால முடியுமேம்மா..." சற்று நிறுத்தி ஆசுவாசப் படுத்திக்கொள்ள....

அம்மா மௌனமாய்க் கேட்டுக்கொண்டிருந்தாள்.

"அம்மா... காய்கறிக்காரன் கிட்ட பேரம் பேசறாப்பல நான் பேசறதா தயவு செஞ்சு நினைச்சிடாதே. உனக்கு அத்தனையும் விளங்க வைக்கணும். என்னோட இந்த தீர்மானத்திற்கான அடிப்படை காரணங்களை நீ முழுசா சரியான விதத்துலே புரிஞ்சுக்கணும்னுதான் இத்தனை சொல்றேன். அப்பா அம்மாவுக்கு பின்னால் தன்னோட எதிர்காலம் என்னவாகும்கற பயத்துல அதை நினைச்சு அவ நிச்சயமா நல்லபடியா பொறுப்பா நடந்துப்பா. தாயில்லாத என் குழந்தைக்கு உனக்கப்புறம் ஒரு பெண் துணை வேணுமேங்கற தவிப்பு காரணமா நானும் அவளை நன்னாவே பார்த்துப்பேன். அவளுக்கும் அவள் குழந்தைக்கும் மனப்பூர்வமான துணையா இருப்பேன். ஆதரவா இருப்பேன். இதுல என்னோட சொந்த நன்மை நிறையவே இருந்தாலும் அதையும் தாண்டி கணவனால் கைவிடப்பட்டவளான ஒரு பெண்ணுக்கு நல்லது செய்யறோம்கற ஆறுதல் இருக்கும்மா... பாவம்... உதிரப்போற அந்தப் பெரியவர்களுக்கும் பெரிய நிம்மதி கிடைக்கும். அந்தக் காலத்துல நம்மைக் கேவலமாய்ப் பேசியதை மனசுல வச்சு இப்ப இதுக்கு மறுத்துடாதேம்மா. அது ரொம்ப சின்ன விஷயம். சகஜமா நடக்கறது... அத நினைச்சு நாம வருத்தப்படறதும் சகஜம்தான். ஆனா அதுபோன்ற அல்ப விஷயங்கள் குறித்து நெஞ்சு நிறைய ஆங்காரம் நிரப்பிண்டு துவேஷம் பாராட்ட ஆரம்பிச்சா மனுஷனுக்கு சண்டை போடறது தவிர வேறு எதுக்குமே நேரம் இல்லாமல் போயிடும். இந்த ஜன்மம் எடுத்ததே சண்டை போடறதுக்குத்தான்னு ஆயிடும். அதெல்லாம் மனசு வேர்ந்து அடியோட துடைச்சுப் போட்டுடும்மா. இத்தனை காலமா நீ மன்றாடினே. இப்ப அதே விஷயம் குறித்து நான் உன்னைக் கெஞ்சறேன். சரின்னு சொல்லும்மா".

"இவ்வளவு தூரம் விஷயத்தை அலசி ஆராய்ஞ்சு வக்கணையா நீ பேசறப்ப நான் சொல்ல என்ன இருக்கு? உன் இஷ்டம்..." அந்த 'உன் இஷ்டம்' மூன்றாவது முறையாக உதிர்ந்தது அவளுடையது அரை மனது சம்மதம்தான் என்பதற்கு அழுத்தம் கொடுக்கும் விதமாக.

மெட்ராஸ் கிளம்ப ஒன்பதாம் தேதிதான் அவர்களுக்கு ரிஸர்வேஷன் கிடைத்திருந்தது. மனநிலை சரியில்லை. வேண்டாம் என மறுத்தபோதும் வந்த இடத்திலாவது நினைவோட்டங்களைச் சற்று திசை திருப்பலாமே என்று வற்புறுத்தி அவர்களை வெளியே அழைத்துச் சென்றான்.

ஒரு பத்து நாள்கள் முன்பு அவனை ஏகத்துக்கு அலைக்கழித்து ஆட்டி வைத்த அந்த டாங்க்பண்டிற்கு அழைத்துச் சென்றான். அனுவும் தீபக்கும் இப்போது சிநேகமாகி விட்டிருந்தனர். புல்வெளியில் குதூகலமாக விளையாட்டு துவங்கியது.

இப்போது அவனுள் எந்த விதமான சலனமும் இல்லை. மாறாக மனம் முழுக்க வியாபித்திருந்த ஒரு நிம்மதி... தெம்பு... அத்தனையும் மீறி ஒரு குறுகுறுப்பு இருக்கத்தான் செய்தது. 'நான் தீர்மானித்துவிட்டேன். சரி... பத்மா சம்மதிப்பாளா...?'

"முன்னே பார்த்ததைவிட இப்ப இந்த இடம் இன்னும் அழகா இருக்கு. ஆனா மனசுதான் ஒட்ட மறுக்கறது. அங்கு பத்மா எப்படி இருக்காளோ... அவ நினைப்பெல்லாம் இங்குதான் இருக்கும். குழந்தையை விட்டு ஒரு நிமிஷம் இருக்க மாட்டா. இவனுக்கு உடம்பு சொஸ்தமாகணுமேங்கற ஆதங்கத்துலே இப்ப இவனை விட்டுப் பிரிய துணிஞ்சிருக்கா. அவளோட வாழ்க்கை இப்படி சீரழிஞ்சு போனதுகூட அவளுக்கு ஒரு பெரிய விஷயமா தோணல. அவளுக்கு எல்லாமே இவன்தான். இவனுக்காக நெருப்புல குதின்னாகூட குதிச்சிடுவா. அவ தவம் பலிக்

---

★ நாம் இடது கையைவிட வலது கையை அதிகமாக உபயோகப்படுத்துவதன் காரணத்தை ஓர் இத்தாலிய வைத்தியர், நூறு வருடங்களுக்கு முன்னமே சொல்லியிருக்கிறார்.

நம் இதயம் இடது பக்கத்தில் இருப்பதால், இடது கையை அதிகமாக உபயோகித்தால், இடது பக்கத்து நரம்புகளுக்கும், இதயத்திற்கும் வலி ஏற்படும். அதனால் தான் நம்மையறியாமல் வலது கையை உபயோகிக்கிறோம் என்கிறார் அவர்.

★ ஒரு கல்லூரிப் பேராசிரியருக்கு ஞாபக மறதி அதிகம். ஒருநாள் அவர் மனைவி அவரைப் பார்த்து, "இதோ பாருங்கள், பத்திரிகையில் நீங்கள் இறந்துவிட்டதாகச் செய்தி வந்திருக்கிறது" என்றாள்.

அதைக் கேட்ட பேராசிரியர், "ஐயோ, பாவம்! அவர் மிகவும் நல்லவர். நாம் இப்பொழுதே போய் துக்கம் விசாரித்துவிட்டு வருவோம், வா!" என்றார்.

—நாடோடி

கணும். இவனாவது அமோகமா வாழணும்..." கண்ணில் நீர் பனிக்கக் கூறினாள் அலமேலு.

தற்செயலாக அவள் சொன்னது அவனுக்கு நிறைய நம்பிக்கை தந்தது.

ஒரு ஆட்டோ பிடித்து சார்மினார் சென்றார்கள். ஹைதராபாத் என்றால் சார்மினார், சார்மினார் என்றால் ஹைதராபாத் என்று இரண்டுமே ஒன்றையொன்று சார்ந்த படிக்கு அவ்வளவு முக்கியத்துவம் பெற்ற அந்த வரலாற்று சிறப்பு பெற்ற நினைவுச் சின்னத்தை கழுத்து உயர்த்திப் பார்த்து 'ஹை...' என்று வாய் பிளந்து வியந்தான் தீபக். அவனும் அனுவும் கைகொட்டிக் குதூகலிக்க... அந்தப் பிஞ்சுகளின் பூரிப்பு இவனுக்கு சந்தோஷம் தந்தது.

பக்கத்திலேயே இருந்த சூடி பஜாரில் சிகப்பும் பச்சையும் நீலமுமாய் கற்கள் பதித்த வளையல்கள் வாங்கி, "பத்மாவுக்கு இது என் சின்ன பிரசன்ட்" என்று கொடுத்தான்.

"இது நாம போற கடைசி இடம்" என்று அருகிலேயே இருந்த மக்கா மசூதிக்கு அழைத்துச் சென்றான். ஒரே கல்லில் உருவான நுணுக்கமான கலை வேலைப்பாடுகள் நிறைந்த வெள்ளை வெளேரென்ற அந்த உயரமான கட்டடத்துள் கால் வைத்ததுதான் தாமதம்... பளீரென்று ஒரு நினைவுப் பொறி ஏற்படுத்திய உந்துதலில் வரதாச்சாரி அவசரமாய்க் கூறினார், அங்கு இருந்த நீண்ட கல் பெஞ்சுகளை உற்றுப்பார்த்தபடி...

"போன தடவைபோல் இங்கு எங்களை உட்காரச் சொல்லாதே வெங்கடேஷ். இங்கு உட்கார்ந்தா இன்னொரு முறை நிச்சயம் ஹைதராபாத் வரச் செய்யும் சக்தி இந்த இடத்திற்கு இருக்கிறது என்ற காலம் காலமான ஐதீகம் இந்தக் குழந்தையின் வியாதி ரூபத்தில் தானா நிரூபிக்கப் படவேண்டும்... மறுபடியும் வரநேர்ந்து போச்சுன்னா அதற்கான அவசியம் என்னவாக இருக்குமோன்னு பயமா இருக்குப்பா..."

"மனசு பாரமா இருக்கறதால குழம்பிப் போய் நிஜத்தை மறந்து பேசறீங்க நீங்க. இந்த ஆஸ்த்துமா சிகிச்சை இது முதல் வருஷம்தானே... இங்கு உட்கார்ந்தாலும் உட்காராட்டாலும் இன்னும் ரெண்டு வருஷம் நாம நிச்சயம் வரத்தான் போறோம்..." அலமேலு யதார்த்தம் எடுத்துரைத்தாள்.

"ஸார்... ஒரு விஷயம் சொல்லட்டுமா...? அடுத்த ரெண்டு வருஷ ட்ரீட்மெண்டுக்குன்னு குழந்தை ஸ்பெஷலா ஹைதராபாத் வரவேண்டிய அவசியமே இருக்காது. அவன்தான் இன்னும் கொஞ்சநாள்ல பர்மனெண்டா இங்கேயே இருந்துடப் போறானே, அவன் அம்மாவுடன். உங்க மகளோட குடித்தனம் பார்க்கறதுக்கு நீங்கதான் ஸ்பெஷலா இந்த ஊருக்கு... ஐ மீன்... எங்க வீட்டுக்கு வரணும். இப்ப இந்த பெஞ்சுலே நீங்க ரெண்டு பேரும் உட்கார்ந்து இதனோட மகிமையை இன்னுமொரு தடவை நிரூபிப்பீங்களா ஸார்..." - கை பிடித்து வருடிக்கொடுப்பவன் போல் மென்மையாய் ஆதரவாய்க் கேட்டான்.

இவன் என்ன சொல்கிறான்... ஒரு கணம் புரியாமல் தடுமாறியவர்கள் சட்டெனப் புரிந்து போக... பிரமிப்பின் உச்சம் நின்றார்கள். வயோதிகத் தோள் மீதானசுமையைத் தான் ஏந்திக் கொள்ளத் தயாராக இருப்பதை எவ்வளவு நயம்படக் கூறிவிட்டான்... அது மட்டுமன்றி உங்களுக்குச் சம்மதமா என்று உட்பொருள் மறைந்த இங்கிதமான கேள்வி வேறு.

சொல்வதறியாது செய்வதறியாது பிரமை கொண்டு நின்றார்கள்.

அந்த மசூதியின் அகலமான தாழ்வாரத்தில் நூற்றுக்கணக்கான புறாக்கள் தத்தித் தத்தி விளையாடிக் கொண்டிருந்தன. திடீரென்று யாரோ முடுக்கிவிட்டதுபோலச் குபுக்கென்று ஒருசேர சடசடவென்று சிறகுகள் சப்திக்க மேலே உயர்ந்து உல்லாசமாகப் பறக்க ஆரம்பித்தன. அந்த அழகான காட்சி தந்த சந்தோஷத்தில் அனுவும் தீபக்கும் 'ஹேய்... ஹேய்...' என்று கூச்சலிட்டபடி ஒருவர் கை ஒருவர் கோத்துக் கொண்டு குதித்தார்கள். அந்தக் கூட்டுச் சந்தோஷம் தொடங்கவிருக்கும் மாறுபட்ட வாழ்க்கை குறித்து நிறைய நம்பிக்கை தந்தது அவனுக்கு.



## சஷ்டியப்த பூர்த்தி

சென்னை, யூகோ வங்கியின் பிரதான கிளை மானேஜர் பி.என். ஈசுவரமணி - பேபி ஈசுவரமணி தம்பதியரின் சஷ்டியப்த பூர்த்தி விழா, சென்னை திருவல்லிக்கேணி டி.பி.பண்ட் சத்திரத்தில் சமீபத்தில் சிறப்பாக நடைபெற்றது.

திரளானோர் விழாவில் கலந்து கொண்டு சிறப்பித்தனர்.




# துப்பாக்கித் தாலாட்டு

ஆண்டாள் பிரியதர்சினி

முழுமையாகாத
என் முழுநிலவே!
முத்தாய் வளராத
மழைத் துளியே!
செதுக்கப் படாத
உயிரின் பிம்பமே!
என் –
வயிற்றில் வசிக்க வந்த
உணர்ச்சித் துடிப்பே!

உனக்கு
உயிர் இன்னும்
ஓரிரண்டு மணித்துளிதான்!

அப்புறம்
நீ அரூபம்!

அம்மாவே அழிக்கின்ற
வருத்தம் நீ கொள்ளாதே!

இந்தப் பிறவியிலேயே
உன்னைப்
பெற்றெடுக்க விருப்பம்தான்!

இப்போது
நீ பிறந்தால்
துப்பாக்கித் தொட்டிலில்
வெடிகுண்டுத் தாலாட்டில்தான்
கண் வளர வேண்டும்!

அரிச்சுவடி
படிக்கும் முன்பே
அடிதடி படிப்பாய்...
அட்டூழியம்தான்
ஆத்திச்சூடி ஆகும்!

அஹிம்சை, ஆன்மிகம்
இன்சொல் எல்லாமே
பொய்யாய்ப் பழங்கதையாய்ப்
போன கதை எங்கள் கதை!

தினசரிகளில் பாயும்
ரத்த ஆறுதான்
கங்கை ஆறு!

ம(னி)தம்
மனிதத்தின் சுருக்கமா?

மதத்தால்
மனிதனே சுருங்கிவிட்டான்!

எம்மதமும் சம்மதம்!
இது பழைய ஏற்பாடு!
எம்(ன்) மதம்தான் சம்மதம்!
இது புதிய ஏற்பாடு!

காவி உடைகூடச்
சிவப்பாகிவிட்டது!
கமண்டலத்துக் கைககளிலே
கைத்துப்பாக்கி கொலுவிருக்க...
தெய்வங்களின் கையில்கூட
ஏ.கே.47...
உற்சவ மூர்த்திக்கு –
வீதி உலாவில்
கறுப்புப் பூனை பாதுகாப்பு...

ஆயிரம் சீதைக்குத்
தீ வைத்துவிட்டு
இராமருக்குத் தீபாராதனை...

இதயவாசலை
இறுக்கி மூடி –
கோயில் வாசலையும்
சொர்க்க வாசலையும் திறந்தால்
வைகுண்டப் பதவி உண்டா?

பொய்மையே வாழ்வியலாய்...
இருக்கின்ற நிலைமாறிப்
புதுஉலகம் பிறக்கட்டும்!
அமளிகள் ஓயட்டும்!
வன்முறைகள் மாயட்டும்!

மதம் பிடிக்கா உலகத்தில் –
அடுத்த ஜென்மத்தில்
நான் உன்னைப் பெற்றெடுப்பேன்...

அதுவரைக்கும் –
நான்
மலடியாய் மரித்தாலும்
மனக்கவலை எனக்கில்லை...

# சங்கப் பலகை

## ஸ்ரீ மஹா கணபதி ஸபர்யா பத்ததி (சம்ஸ்கிருதம்)

(தொகுத்தெழுதியவர் - ஸ்ரீ வித்யா வாசஸ்பதி, ஸ்ரீவித்யா மார்த்தாண்ட பூஜ்யஸ்ரீ சி.வி. சுவாமி சாஸ்த்ரிகள். (ஸ்ரீ அனந்தா நந்தநாதர்). பதிப்பு - இரண்டாம் பதிப்பு. பதிப்பித்தவர்கள் - Dr.PV.B. மஹாதேவ், "அனந்தாநந்த ப்ரகாசன்", 21. பாப்பாத்தியம்மாள் தெரு, கோடம்பாக்கம், சென்னை - 600 024. போன் - 427824. விலை - ரூ. 60.00).

எல்லாவற்றிற்கும் ஆதி காரணமாய், பரம்பொருளாய் மூலப்ரக்ருதியாய், மூலாதார தெய்வமாய் ("மூலாதாரஸ்திதோஸி நித்யம்") விக்ன விநாயகராய் விளங்குபவர் ஸ்ரீமஹா கணபதி. எந்த தெய்வத்தை வழிபடுபவர்களாக இருந்தாலும், முதலில் மஹா கணபதியை வழிபட்டபின்தான் தன் வழிபாட்டை தொடங்குவது என்பது நமது மரபு. இவ்வாறு கணபதியை வணங்கி வழிபட, உலகில் பலவிதமான வழிபாட்டு முறைகள் உள்ளன. நமது தெய்வ உருவங்கள் பலப்பல என்பது போல வழிபாட்டு முறைகளும் பலப் பலவே! இதில் கணபதியை வழிபட மிக சுலபமான முறையில், வாழ்க்கையில் அல்லலுறும் நாம் அனுஷ்டிக்கதக்க வகையில், மந்த்ர, தந்த்ர உபாஸனையை - ஏட்டுச்சுவடிகளிலிருந்தெல்லாம் மிகவும் பரிச்ரமத்துடன் எடுத்து தொகுத்து, கணபதி மந்த்ர உபதேசமானவர்கள் அனுஷ்டிக்கும் படியாக இந்த புத்தகத்தை ஆக்கியிருக்கிறார் இதன் ஆசிரியர். இவர் ஒரு வித்யா உபாஸகர். குருக்ருபையை பூரணமாக பெற்றவர். ஸ்ரீமஹானந்த மண்டலியில் ஸூர்யனாக ப்ரகாசித்தவர். தீர்க்கதரிசி, ஸித்தபுருஷன் என்று மஹான்களால் போற்றப்பட்டவர். நூற்றாண்டு விழா கண்ட நமது பரமாசார்யாளின் 'பேரன்புக்கு பாத்திரமானவர். எனவே இந்த புத்தகம் பெருமை வாய்ந்ததாகிறது.

### 1. சதுராவ்ருத்திதர்ப்பணம்

இதனை ஒரு சாதகன் தினசரி நித்ய கர்மாவாக காலை 40 நிமிஷங்கள் செய்து வரும் காலத்தில், அவன் தன் வாழ்க்கையில் அன்றாடம் குறுக்கிடும் விக்னங்கள் நீங்குவதை உணருவதுடன், "த்யானயோகம்" கைகூடுவதையும் உணருகிறான். மன ஏகாக்ரதையை ஏற்படுத்தி மன் அமைதி பெற இது வழி செய்கிறது. உபதேசமானவர்கள் யாரும் செய்யலாம்.

### 2. பூஜா பத்ததி

இந்த பூஜையானது ஸ்ரீவித்யா ஆவரண பூஜா முறையில் உள்ளது. இதனை குறிப்பிட்ட வழிமுறையில் செய்ய வேண்டும். இந்த பாகத்தில் உள்ள பெரும்பாலான நியாஸங்கள் தஞ்சை சரஸ்வதி மஹால் ஏட்டுச் சுவடிகளிலிருந்து தொகுக்கப்பட்டது. இந்த பூஜையை அர்த்த ஞானத்துடன் செய்யும் காலத்தில் சாதகனின் ஸாமான்ய ஞானம், விசேஷ ஞானமாக பரிணமிப்பதுடன், 'ப்ரஹ்ம ஞானம்' அடையவும் வழிசெய்கிறது.

### 3. துதிகள், உபநிஷத்துகள்

இதில் ஆசிரியரால் இயற்றப்பட்ட கணேச மூலமந்த்ர பதமாலா, வக்ரதுண்ட ஷடக்ஷரி ஆகியவை மிகுந்த அர்த்த புஷ்டியுடன் கணபதியின் உண்மை தத்துவத்தை வெளிப்படுத்துகின்றன. உபநிஷத்துகளில் "அதர்வசீர்ஷம்" பிரபலமானது தான். வல்லபேசோப நிஷத் என்பது மிகவும் புராதனமான, ரஹஸ்ய மந்த்ர - தந்த்ர - வேதாந்த கருத்துகளை தன்னகத்தே கொண்டது.

### 4. ஸ்ரீமஹா கணபதி ஹோமம்

ஒரு சாதகன் தான் தினசரி காலையில் தன் வீட்டிலேயே பிறர் உதவியின்றியே தன் உபாஸனா பலத்தால் கணபதி ஹோமம் ஸங்க்ரஹமாக செய்யும்படியான முறை இதில் உள்ளது. இதன் வழிமுறையில் செய்து பலன் கண்டவர் அநேகர் உள்ளனர். இது அனுபவ ஸித்தாந்தமாம். இதன் தத்வம் - ஜீவ பாவத்திலிலுள்ள துர்வாஸனைகள் நசுக்கப்பட்டு ஸத்வாஸனை நிறையச் செய்வது தான்.

### 5. நாமாவளிகள்

அஷ்டோத்திரம், ஸஹஸ்ர நாமங்களுடன் மூல மந்த்ர த்ரிசதி என்ற விசேஷமான த்ரிசதியும் உள்ளது.

இன்னும் பலவித சேர்க்கைகளுடன் உள்ள இந்த நூலை அனுஷ்டானம் செய்பவர்களுக்கு ஸத்குரு க்ருபையால் ஸ்ரீமஹா கணபதியின் அருளால், விக்னங்கள் நிவர்த்தியாகி - வாழ்க்கையில் சிறக்கலாம். இதில் சந்தேகமில்லை. எனவே - அன்பர்கள் இதனை வாங்கி பலனடைய வேண்டுகிறோம்.

"அருட்சக்தி" நாகராஜன்

---

## பாரதிதாசன் திருக்குறள் உரை

(ஆசிரியர் - ச.சு. இளங்கோ. வெளியீடு - பாரி நிலையம், 184, பிராட்வே, சென்னை - 600 108. பக்கங்கள் - 264. விலை - ரூ. 32.00)

பாவேந்தரின் பரந்த உலக ஞானம், அவர் உரை விளக்கம் தந்துள்ள 85 குறள்களிலேயே தெளிவாய் வெளிப்படுகிறது. சின்னஞ்சிறு இடறல், மாறுபாடு, வேறுபாடு எதுவுமின்றி தெளிவும், நுட்பமும், கொண்டு எளிய நடையில் எல்லார்க்கும் புரியும் பாங்கில் நூலாய் விரிந்திருக்கிறது. பரிமேலழகரின் அகரமுதல எழுத்தெல்லாம்... போன்ற சில குறட்பாக்களுக்கு பாவேந்தர் உரை விளக்கம் தருவது முற்றிலும் புதுமை செறிந்து பொதுமைக்கு ஏற்புடையதாய் அமைந்திருக்கிறது. வெவ்வேறு காலங்களில் குயில் பத்திரிகையில் எழுதிய குறட்பா விளக்கங்களோடு நூலாசிரியரின் ஆய்வுரையும், குறளுக்கு யார் யார் இதுவரை எவ்வெவ்வாறு உரையாத்தனர் என்ற பட்டியல் போன்ற இணைப்புகளும் அடங்கியுள்ளன. எப்போதோ வெளிவந்திருக்க வேண்டிய இச்சிறந்த நூல் இப்போது வெளிவந்திருக்கிறது. வரவேற்போம்.

— நீலவன்

# சங்கப் பலகை

## வெண்குட்டத்திற்கு சித்த மருந்துகள்

(ஆசிரியர் - டாக்டர் பொ.இரா. இராமசாமி. பதிப்பகம் - அலைகள் வெளியீட்டகம், 36, தெற்குச் சிவன்கோயில் தெரு, கோடம்பாக்கம், சென்னை - 600 024. பக்கங்கள் - 120. விலை - ரூ 18.00)

வெண்குட்ட நோய்க்குச் சித்த மருந்துகள் என்பனவற்றைக் கூறவந்த ஆசிரியர், தமது ஆழ்ந்த அனுபவத்தைக் கொண்டும் சில அரிதான ஏட்டுச் சுவடிகளைக் கொண்டும் ஆய்ந்து, குட்டம் நீங்குவதற்கான மருந்து செய்முறைகளை மிகத் தெளிவாக எழுதியுள்ளார்.

குட்டம் என்பதற்கு ஒரு விளக்கத்தைக் கூறி, அந்தக் குட்டத்தை 18 வகையில் சித்த மருத்துவம் அடக்கியுள்ளது என்றும், வெண்குட்டம் என்பது வேதபுராண காலத்திலேயே அறியப்பட்ட நோய் என்றும் வெண்குட்டத்தைப் பற்றிய சுவையான செய்திகளைக் கூறுகிறார் ஆசிரியர்.

இந்நூலின் மற்றொரு சிறப்பு, தோலின் அமைப்புப் பற்றியும், அது உடலைக் காக்கும் பாதுகாப்புக் கவசமாக எப்படிச் செயல்படுகிறது என்பது பற்றியும், அதை நாம் பராமரிக்க வேண்டிய முறைகள் பற்றியும் தெளிவாகக் கூறப்பட்டுள்ளதேயாகும்.

'உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே' என்னும் திருமூலர் வாக்கிற்கேற்ப, உடம்பை நல்ல முறையில் பேணிக் காக்க விரும்பும் ஒவ்வொருவரும் படித்துப் பயன்பெற வேண்டிய நூலாகும் இது.

## மனவளர்ச்சிக் குன்றியோரின் பாலுணர்வு மற்றும் திருமணப் பிரச்னைகள்

(ஆசிரியர்கள் - ஜான் முருக செல்வம், ஜாய்ஸ் முருகசெல்வம். பதிப்பகம் - அலைகள் வெளியீட்டகம், 36, தெற்குச் சிவன் கோயில் தெரு, கோடம்பாக்கம், சென்னை - 600 024. பக்கங்கள் - 174. விலை - ரூ. 25.00)

மனவளர்ச்சிக் குன்றிய குழந்தைகளைப் பெற்றுவிட்டாலே பெற்றோருக்குப் பெரும்பிரச்னை ஆகிவிடுகிறது. குழந்தைப் பருவத்தில் அப்பிரச்னை ஒருவாறு சமாளிக்கப்பட்டாலும், திருமணத்தை எதிர்நோக்கியுள்ள வாலிபப் பருவத்தின்போது, அப்பிரச்னை பன்மடங்குப் பெருகிப் பெற்றோரைத் திண்டாட வைக்கிறது. அப் பிரச்னைக்குத் தீர்வு காணமுடியாமல் அவர்கள் படும் வேதனையை நாம் கண்கூடாகக் காணுகிறோம்.

அத்தகையோர், "தங்கள் பிரச்னைகளை எப்படிச் சமாளிப்பது? அவற்றிற்குத் தீர்வு காண்பது எப்படி?" என்பனவற்றுக்கெல்லாம் விடையாக, வழிகாட்டியாக 'மனவளர்ச்சிக் குன்றியோரின் திருமணம் மற்றும் பாலுணர்வுகள்' என்னும் இந்நூல் அமைந்துள்ளது.

இந்நூலை எழுதிய ஆசிரியர்கள் ஊனமுற்றோர் துறையில் அனுபவம் வாய்ந்தவர்கள் என்பதால், மனவளர்ச்சிக் குன்றிய ஆண்பெண் இருபாலாருடைய பாலுணர்ச்சிகளை நெறிப்படுத்தும் பயிற்சிகளை மிகத் தெளிவாகவே எழுதியுள்ளார்கள்.

எனவே, மனவளர்ச்சிக் குன்றியோரின் பெற்றோருக்குச் சிறந்த ஆலோசனையையும், வழிகாட்டுதலையும் இந்நூல் கொண்டுள்ளதால் அவர்களுக்கு இந்நூல் பேருதவியாக இருக்கும் என்பதில் ஐயமில்லை.

## மருத்துவ திறவு கோல்

(ஆசிரியர் - டாக்டர் எஸ். சிதம்பரதாணுப்பிள்ளை. பதிப்பகம் - சித்த மருத்துவ நூல் ஆராய்ச்சி நிலையம், 32, அண்ணா நகர் (கிழக்கு), சென்னை - 600 012. பக்கங்கள் - 117. விலை - ரூ. 50.00)

நூலின் தலைப்பு, பொதுவாக மருத்துவத்திறவுகோல் என்றிருந்தாலும், சிறப்பாக இது சித்த மருத்துவத்திற்கான ஒரு சிறந்த வழிகாட்டியாக எழுதப்பட்டுள்ள நூலேயாகும்.

சித்தர்கள் வழிவந்த சித்த மருத்துவர்களின் அனுபவபூர்வமான சித்த மருத்துவத்தைப் பற்றிச் சித்த மருத்துவம் கூறும் நோயணுகாவிதி, நோய்கண்டால் சிகிச்சை முறை, மூலிகையை அடையாளங்கண்டு மருந்து தயாரித்தல், மருந்துண்ணல், மருந்தியற்றுவான், நோய்நீங்கும் காலம் போன்ற பல தலைப்புகளில் ஆசிரியர் நூலில் விளக்கியுள்ளமையைக் கொண்ட இதை ஒரு குட்டி சித்த மருத்துவ நூல் எனத் தெரிந்து கொள்ளலாம்.

சித்த மருத்துவத்தில் அறிவு பெற விரும்பும் எவரும் இந்நூலை வாங்கிப் பயன் பெறலாம்.

## பூமியின் கதை

(ஆசிரியர் - இரா. தேன்மொழியான். பாமா பதிப்பகம், 5, சிவஞானம் சாலை, தியாகராய நகர், சென்னை- 600 017. பக்கங்கள் - 155. விலை - ரூ. 22.00)

பூமியைப் பற்றிய அறிவியல் வரலாற்றைத் தெரிந்து கொள்ளும் முன், பூமி பற்றிய ஆதிகால மனிதர் கருத்துகள், மதசமய வழியிலான நம்பிக்கைகள் எவ்வாறிருந்தன என்பவற்றை நூலாசிரியர் அத்தியாயம் ஒன்றில் விவரித்துள்ளார்.

அடுத்து, அறிவியல் கருத்துப்படி, அண்டத்தில் பூமியின் இருப்பிடம், வடிவம், அதிலுள்ள கடல்கள், மலைகள், எரிமலைகள், ஆறுகள், காடுகள், பாலைவனங்கள், கண்டங்கள், அன்றும் இன்றும், பூமிக்கோளத்தின் உள்ளமைப்பு, புவியீர்ப்பு, காந்தப் புலம், பூமியின் சுழற்சி, ஓசோன் போர்வை போன்று பல தலைப்புகளில் ஆசிரியர் பூமியை அலசியுள்ளார்.

ஒவ்வொரு தலைப்பிலும் புள்ளி விபரங்கள் அடங்கியுள்ளமை மாணவர்க்கும், பொது அறிவு விரும்புவோருக்கும் பெரிதும் துணைபுரியும்.

சுருக்கமாகச் சொல்லவேண்டுமெனின், பூமி பற்றிய எல்லாச் செய்திகளையும் கூறும் ஒரு சிறு குட்டிக் களஞ்சியமாகும் இது எனலாம்.

— ப. இராமலிங்கம்




# நாணயம்

நேர்மை, நாணயம், உழைப்பு செழிக்கவும்
உங்கள் பொருளாதாரம் கொழிக்கவும்
வழிகாட்டும் புதிய பகுதி.

# பப்பட், பப்பட், 'மேகாஸ்' பப்பட்

"அப்பளத்திற்கு ஏழு லட்சணங்கள் உண்டு!" என்றாரே திரு. லட்சுமணன்!

அசந்து போனோம்! ஏதோ வெறுமனே சொல்கிறார் என்று தள்ள முடியாது. மாக் இண்டஸ்ட்ரிஸ் மானேஜிங் டைரக்டர் அவர்! விஷயம் தெரிந்தவராக இருந்தார்.

"அதென்ன லட்சணங்கள்? அதுவும் அப்பளத்திற்கு? சொல்லுங்கள்!" என்றோம்.

"முதல்லே 50% விரியணும், பொரிக்கும் போது."

"அடேடே.... அப்படியா!"

"ஆமாம்! கடையிலே எத்தனையோ வித அப்பளம் விற்குது. ஒவ்வொன்றும் ஒவ்வொரு அளவு தான் விரியும். நாங்கள் தயாரிக்கும் 'மகோஸ்' பப்படம் 50% விரியும்!"


திரு. எஸ். லட்சுமணன்



"சரி, அப்புறம்!"

"எண்ணெயை கொஞ்சமா குடிக்கணும். இல்லத்தரசிகளுக்கு என்ன கவலை? அப்பளமும் பெரிசா இருக்கணும், என்ன





யும் கொஞ்சமா செலவாகனும்! எங்கள் பப்பட் அப்படித்தான்!"

"சரி அடுத்த லட்சணம்?"

"உள்ளே தூசு, தும்பு, ரோமம், நாறு போல வெளிப் பொருள் எதுவும் இருக்கக்கூடாது!"

"ஆமாம்! அதெல்லாம் லட்ச ணங்கள்தான்! நீங்கள் ஒவ்வொரு அப்பளத்தையும் சோதிக் கிறீர்களா?"

"ஆமாம் சார்! ஒவ்வொரு கட்டத்திலேயும் சோதனை! கண் ணாடி மேலே ஒவ்வொரு அப் பளமும் நகர்ந்து போகும்! கீழே பிரகாசமான வெளிச்சம்! அப் பளத்தைப் பார்க்கும்போது அதிலே ஏதாவது அந்நிய பொருள் இருந்தா தெரிஞ்சிடும்! அப்படியே எடுத்து வச்சுடுவோம்!"

"சரி அடுத்தது?"

"பருமன்! அப்பளம் ரொம்ப மெல்லிசா இருந்தாலும் இல்லத் தரசிக்கு நஷ்டந்தானே!"

"அதனாலே என்ன?"

"அப்பளம் பார்க்கறதுக்கும் கையிலே எடுக்கறதுக்கும் டெக்ஸ்ச்சரோடு இருக்கணும்!"

"ஓ! அது வேறயா!"

"வீட்டிலே வச்சிருந்தா ஒரு ரெண்டு மூணுமாசம் கெடாம இருக்கணும்!"

"சரி!"

"கடைசியிலே ஒன்று உண்டு. உங்களுக்குத் தெரியும். அப்பளத் திற்குச் சுவை வேணும்!"

"அடேடே! எல்லாமே தெரிந்த தாயிற்றே! இந்த அத்தனையும் உங்கள் மகோஸ் பப்பட்டில் இருக்கிறதா?"

"இத்தனை இருந்தால் தான் விற்பதற்கு வெளிவரும். ஏற்றுமதி ஆகும். இந்த ஏழு லட்சணங் களையும் எங்களது இங்கிலாந்து ஏஜெண்ட் தெரிவிச்சாங்க. உணவுப் பொருள் விஷயத்திலே அவங்க கண்டிப்பு! எங்க 'பப்பட்' இந்த 'டெஸ்ட்'லேயும் பாஸாயிடுத்து. இப்போது ஏற்றுமதி ஆகுது!"

"ஏற்றுமதி அப்பளம்னு ஸ்பெஷலா செய்யறீங்களா?"

"இல்லவே இல்லை. இங்கே நமக்கும் வெளிநாட்டுக்கும் ஒரே தரம், ஒரே ரகம் தான்!"

"அதென்ன? 'பப்பட்' என்று பெயர் வைத்து விட்டீர்கள்!"

"அதிலே பெரிய விஷய மில்லை. இந்தியாவிலே வெவ் வேறுபகுதியிலேவெவ்வேறு வித அப்பளம் விற்குது! நாங்கள் இந்தியா முழுதும் விற்க விரும்ப றோம். 'பப்பட்' என்று சொன்னா இப்போ எல்லோ ருக்கும் தெரியும். இதை ஒரு பொதுப் பெயரா வச்சோம்!"

பப்பட்டில் ஒரு ரகம் இல்லை. அவர்கள் ஐந்து ரகங்கள் சொல் கிறார்கள். மதராஸ் பிளெயின், மதராஸ் மசாலா, மதராஸ் பெப் பர், மதராஸ் சில்லி ஜெண்டில், பஞ்சாபி மசாலா.

"இதில் முதல் நான்கும் பப் படங்களை மெஷினே வட்டமாகத் தட்டி விடுகிறது. பஞ்சாபி மசாலா மட்டும் தனி! கையில் இடப்பட்டது தான் வடக்கே பிடிக்கும்! இதற்காக நாங்கள் கல்லிடைக் குறிச்சியில் யூனிட் வைத்திருக்கிறோம்!" என்கிறார் லட்சுமணன்.

கல்லிடைக் குறிச்சி நூறு வருஷமாக அப்பளத்திற்கு பிரசித் தம்! அங்கே உள்ள பிராமணக் குடும்பங்கள் அப்பளம் இடுவதில் எக்ஸ்பெர்ட்! ஆனால் அப்பளத் தில் மார்க்கெட் சரியில்லாமல், இந்தக் குடும்பங்கள் பீடி சுற்ற ஆரம்பித்துவிட்டார்கள்! இவர் களைத் திரும்பி அப்பளத்திற்கே நாங்கள் இழுத்து வந்தோம்! இப்போது இவர்கள் தயாரிக்கும் பஞ்சாபி மசாலாப் பப்படங்கள் பிரமாதமாக விற்பனை ஆகிறது. இதைச் சுட்ட அப்பளமாகச் சாப்பிடுவது வெகு ருசி! எண்ணெயில் வறுத்தல் பிடிக் காதவர் இதைச் சாப்பிடலாம். காரம், ருசி பிரமாதமாக இருக் கும்."



திரு எஸ்.லட்சுமணன் – ஸ்ரீவேணுகோபாலன்



டெக்னிகல் டீம் கவனித்துக் கொள்கிறது. தற்சமயம், மாவு இடிப்பது போன்ற சில வேலை களைச்சிப்பந்திகள் கவனித்துக் கொள்கிறார்கள். (அவர்கள் சுத்தமாக இருக்க வேண்டும் என்று பெரிய கண்டிப்பு)

பின்னர் இது போன்று படிப் படியாக வேலைகளுக்கு மிஷின் தயாரிக்கப் போகிறார்கள். அதற் காக ஆராய்ச்சிகள் நடந்து கொண்டிருக்கின்றன. மூன்று மணி நேரத்தில் அரை டன் அப்பள உருண்டை மா [Diogh] தயாரிக்கப்படுகிறது.

இந்த டஃப் பின்னர் நீள பாம்பு போல் உருட்டப்படுகிறது. இதை ஒரு ரூபாய் நாணய

மாக் இண்டஸ்ட்ரிஸ் என்பது ஸ்பிக் நிறுவனத்தின் பகுதி! இதில் திரு. அஸ்வின் முத்தையா தான் சேர்மன்!

இந்த நிறுவனம் எப்படி இந்த பப்பட் தயாரிப்புக்கு வந்தது?

தீவிர மார்க்கெட் ஆராய்ச்சி நடந்தது! மார்க்கெட் மட்டுமல்ல! இல்லங்கள் என்று கூடச் சொல்ல வேண்டும்! ஒரு அருமையான விஷயத்தைக் கண்டு பிடித்திருக்கிறார்கள். இந்தக் காலத்திலும்கூட ஒரு இல்லத்தரசி தன் கையால் சமைப்பதைத் தானேதன் குடும் பத்திற்கு படைக்க விரும்புகிறார். இதனால் Ready to eat உணவுகளை விட Read to Cook பொருள் களில் ஈடுபடுகிறார்கள். "தனது கை மணக்கும்!" இல் லத்தரசி நம்புகிறாள் போலும்!

இது ஒரு மேஜர் கண்டு பிடிப்பு. இதன் விளைவு தான் இவர்களைப் பப்பட் துறையில் இறங்க வைத்தது. பப்பட்டாகப் பொரிந்து பாக்கெட்டில் போட்டு விற்கக் கூடாது. பப்பட்டை இல்லத்தரசிகள் வீட்டிலே பொரித்துக் கொள்ள வகை செய்ய வேண்டும்.

நாட்டில் பப்பட் எவ்வளவு செல்லுபடியாகும் என்பதையும் ஆராய்ந்தார்கள். நமது ஜனத் தொகை, பப்பட் சாப்பிடும் இல்லத்தொகை, அதில் அவர்கள் எத்தனை முறை சாப்பிடு கிறார்கள் என்பதையெல்லாம் கணக்கெடுத்து இந்தியாவில் பப்பட் விற்பனை 500 கோடி என்று முடிவு எடுத்தார்கள்.

பப்பட்டின் செய்முறையும் நவீனப்படுத்தப்படாமல் இருக் கிறது. இதில் கவனம் செலுத் தினால் ஒரு பெரிய மார்க் கெட்டைப் பிடித்து விடலாம், என்று நினைத்தார்கள். இந்த




நோக்கத்தில் தான் இறங் கினார்கள்.

'சுவை', விஷயத்தில் கண்டிப்பு களைச் கையாண்டவர்! இதற் காக உளுந்து நல்ல உயர்ந்த ரகத்தை தேர்ந்தெடுக்கிறார்கள். (ஆந்திராவில் கிடைக்கும் உயர் ரக உளுந்து)

இயந்திரங்களில் உளுந்தை அரைக்கிறார்கள். வெஞ்சனங் களையும் (மசாலா முதலியன) அரைக்கிறார்கள். இரண்டின் கலவையையும் முந்திய நாளே நீரில் கலக்கிறார்கள். இந்த அப் பளத்து மா உருண்டை தயாரிக் கும் பக்குவத்தை அவர்களது



திரு எஸ். சந்திரசேகர்

சைஸில் வெட்டுகிறார்கள். மதராஸ் ரகம் என்றால் இந்த ஒவ்வொரு துண்டுக்கும் இடையே அரிசி மா போடுகிறார்கள். ஒரு பிரஸ்ஸில் இது அமுக்கப்படப்பட் ஒரே ரக வட்டமாகவும், திண்மையாகவும் வந்து விடுகிறது. பின்னர், ஒவ்வொரு அப்பளத்திலிருந்தும் அரிசி மாவை காற்றை அடித்து எடுத்து விடுகிறார்கள்.

"200 கிராம் பப்பெட் ஆறு ரூபாயிலிருந்து ஒன்பது ரூபாய் வரை விற்கிறோம்! எல்லாரிடமிருந்தும் நல்ல வரவேற்பு கிடைத்து விட்டது. மகாபலிபுரம் சாலையில் காரப்பாக்கத்தில் உள்ள எங்கள் வேர்ஹவுசில் கட்டிடத்தையே மாற்றி அமைத்து பப்பட் தயாரிக்கின்றோம். ஒரு யூனிட் கல்லிடைக்குறிச்சியில் உள்ளது. சீக்கிரத்தில் தமிழ்நாட்டில் பல இடங்களுக்கு விஸ்தரிக்கப்போகிறார்கள். விற்பனை ஏற ஏற வெளி மாநிலங்களிலும் தயாரிப்பு நிலையங்கள் ஏற்படுத்தலாம்.

நாம் கேட்கும் கேள்விகளுக்கு, மிகப் பொறுமையாகவும், ஆர்வம் எடுத்துக் கொண்டும் பதில் சொன்னார். கணக்கியல் ஆகட்டும், டெக்னிகல் விஷயங்களும் அவருக்கு தலைகீழாகப் பாடமாய் மனசில் இருந்தது.

அவருடன் சேர்ந்து ஒத்துழைத்து மார்க்கெட்டிங் மானேஜராக உள்ள திரு. சந்திரசேகர் மார்க்கெட்டைப் பிடிக்க நேர்ந்த சம்பவங்களையும், கஷ்டங்களையும் தெளிவாக விளக்குகிறார்!

மதுரையில் மகோஸை நுழைத்த பெருமை அவரது வியாபாரத் திறனுக்குச் சான்று!

ஒரு புது எண்ணம் தான் ஒரு வியாபாரத்தின் அடிப்படை என்று கூறும் இந்த நிறுவனக்காரர்கள் முந்திரிப் பருப்பு, காப்பி, கடல் உணவான ப்ரான் என்ற பல துறைகளிலும் இறங்கி உள்ளார்கள்.

மேற்கூறிய ஒவ்வொரு துறையிலும் நல்ல புதுமைகளைச் செய்திருக்கிறார்கள். அடுத்த இதழில் அவைகளைக் கவனிப்போம்!

–புஷ்

# ஏழைகளின் பட்டு

கண்கவரும் வண்ணப்பட்டு சேலையை ஏழைகள் - நடுத்தர வர்க்கத்தினர் பார்க்கத்தான் முடியும். கடைகளில் குவிந்து கிடக்கும் பட்டுச்சேலைகளைக் கண்டு அவர்களால் ஏக்கப் பெருமுச்சுதான் விடமுடியும்.

இத்தகைய நிலை தற்போது மாறிவிட்டது: ஏழைகள் நடுத்தர மக்கள் "பட்ஜெட்"டுக்குள் அடங்கிய நிலையில் பெருமளவில் பாலியெஸ்டர் பட்டுப்புடைவை தயாராகிவிட்டது. "சாரதா பெல்காம்" பட்டு பாலியெஸ்டர் ரக புடைவைகள் கடைகளில் சென்று பார்க்கும்போது எதை வாங்குவது என்று திகைப்பூட்டும் அளவுக்குப்பலப்பல ரகங்களில் இந்த சேலைகள் வந்து குவிந்துள்ளன. ரூ. 200/- முதல் ரூ. 1000 /- விலை வரை இந்த சேலைகள் கிடைக்கும்.

பிளவுஸுக்குத் தேவையான துணியும் இத்துடன் இணைந்திருக்கும். அதுதவிர பாவாடை, தாவணி ரகங்களும் பெல்காம் பாலியெஸ்டர் பட்டில் வந்துள்ளன.

தரத்தில் மிகச் சிறந்ததாக இருக்கும் பொருட்டு ரிலையன்ஸ் நூல், செஞ்சுரி, மோடி இழையில் தயாராக்கப்பட்டதாகும். பெல்காமில் தமது சொந்த ஆலையில் சாரதா டிரேடிங் கம்பெனி நிறுவனத்தின் உரிமையாளர் மோதிலால் போர்வால் நேரடி கண்காணிப்பில் இந்தச் சேலைகள் தயாராகிறது. இங்கு தயாராகும் பெல்காம் பாலியெஸ்டர் பட்டுப் புடைவைகள் மதிப்பும், மவுசும் கடல் கடந்தும்விட்டது. ஆசியா, ஐரோப்பா நாடுகளில் இந்தரக சேலைகளுக்கு தற்போது கிராக்கி ஏற்பட்டுள்ளது. கடந்த ஆண்டில் மட்டும், இந்தரக சேலைகள் தமிழ்நாட்டில் பல லட்சத்துக்கு மேல் விற்பனையாகி உள்ளன. தமிழகம் முழுவதும் எல்லா பிரபல கடைகளிலும் இந்த ரக சேலைகளைப் பெறலாம். அத்துடன் கர்நாடகம், ஆந்திரம், கேரளம் ஆகிய மாநிலங்களில் மக்கள் ஆதரவைப் பெற்றுள்ளது இந்த ரக சேலைகள்.



# உல்லாசமான ஊர்ப் பயணங்கள்




இந்த விடுமுறைக்கு ஊட்டியா, கொடைக்கானலா, காஷ்மீரா, டார்ஜிலங்கா என்று உத்வேகமுடன் பேச ஆரம்பித்து, நடைமுறையில் செயல்படுத்தப் படும்போதுதான் டிக்கட் பிரச்னை, ஹோட்டல் பிரச்னை, பணப் பற்றாக்குறை என்று ஒவ்வொன்றாக முளைத்து இறுதியில் குறைந்த பட்சம் கும்பகோணம், தஞ்சாவூர் என்று முடிந்துபோவதும் உண்டு.

ஊர்களுக்கும் போக வேண்டும், உல்லாசமாகவும் அனுபவிக்க வேண்டும் என்று ஆசைப் படுவது இன்றைய விலைவாசி உயர்வினால் 'மீசைக்கும் ஆசை கூழுக்கும் ஆசை' என்றாகிவிடுகிறது. மனிதர்களின் இந்த சராசரி எதிர்பார்ப்புகளைத் தங்களுக்குச் சாதகமாக்கிக் கொண்டு துல்லியமாகத் திட்டமிட்டு, உல்லாசமான ஊர்ப்பயணங்களை ஒரு குறையுமின்றி அனுபவிக்க வழி வகுத்துள்ளனர் சென்னையைச் சேர்ந்த 'ஸ்டெர்லிங் ஹாலிடே ரிசார்ட்ஸ்' நிறுவனத்தினர்.

1986ல் திரு. ஆர்.சுப்பிரமணியன், திரு.என்.எஸ்.பாய், திரு.பி.என். மோகன் ஆகியோரால் ஆரம்பிக்கப்பட்டது இந்தத் திட்டம்.

'ஸ்டெர்லிங் டைம் ஷேர்' எனப் படும் இத்திட்டத்தின்படி ஆண்டொன்றுக்கு ஒரு வாரம் ஊட்டி, கொடைக்கானல் போன்ற நகரங்களில் வெறும் 242 ரூபாய் செலவில் தங்கி விடுமுறையை வேலையின்றிக் கழிக்கலாம். இப்படி ஒரு வருடம் அல்ல 99 வருடங்களுக்கு என்றால் ஆச்சர்யமாக இருக்கிறதல்லவா?



வெளிநாடுகளில் 'டைம்ஷேர்' திட்டத்தில் சிறந்த அனுபவமிக்க திரு.மோகன் கூறுகிறார்: "வாழ்வில் ஒருமுறை குறிப்பிட்டுள்ள தொகையைச் செலுத்தி, வாழ்நாள் முழுவதும் எந்தவிதமான பிரச்னைகளுமின்றி விடுமுறைகளைக் கழிக்கக் கூடிய இத்திட்டத்தை அறிமுகப்படுத்தியபோது, ஆரம்பத்தில் சிறிது கஷ்டமாக இருந்தபோதும்.... 3, 4 வருடங்களில் ஸ்டெர்லிங்


திரு. மோகன்

ஹாலிடே ரிசார்ட்ஸின் இத்திட்டத்தில் 20,000 பேர் உறுப்பினரானார்கள். சுலபமாகப் புரிந்து கொள்ளக் கூடிய வகையில் சொல்வதானால், இத்திட்டத்தின் மூலம், ஆண்டொன்றுக்கு, ஒரு வாரகாலம், ஊட்டி, கொடைக்கானல் போன்ற நகரங்களில் அமைக்கப்பட்டுள்ள நவீன வசதிகள் கொண்ட வீடுகளுக்கு மிகக் குறைந்த செலவில் சொந்தக்காரர்களாக இருக்கலாம். அந்த ஆண்டு ஊட்டியில் ஒருவாரம் கழித்து விட்டு, அடுத்த ஆண்டு கொடைக்கானலில் விடுமுறையைக் கழித்துவிட்டு, அடுத்த ஆண்டு கொடைக்கானலில் விடுமுறையைக் கழிக்க விரும்புவதானாலும் மாற்றிக் கொள்ளும் வசதியுண்டு. ஆனால் 'Exchange Fee' என்று ஒரு தொகை வசூலிக்கப்படும்"

கொடைக்கானலில் ஒரே ஒரு விடுமுறை வீட்டுடன் ஆரம்பிக்கப்பட்ட இந்நிறுவனத்திற்கு தற்

போது ஊட்டி, ஏற்காடு, டார்ஜிலிங் போன்ற இடங்களிலும் விடுமுறை வீடுகள் உருவாகிவருகின்றன.

இந்நிறுவனம் தற்போது 94 அபார்ட்மெண்ட்டுகளையும் 30 அறைகள் கொண்ட ஹோட்டல் அறைகளை முசோரியிலும் உருவாக்கி வருகிறது. இவை இவ்வாண்டு இறுதிக்குள் முடிவடைந்துவிடும்.

கோவா, லோனாவாலா, மௌண்ட் ஆபு, காட்மண்டு, குருமணலி, நைனீட்டால், சிம்லா ஆகிய இடங்களில் விடுமுறை வீடுகளுக்கான மனைகள் பெறுவதற்கான செயல்முறைகள் நடைபெற்று வருகின்றன.

ஸ்டெர்லிங் ரிசார்ட்ஸ் ஒராண்டிற்கான 52 வாரங்களை 'ப்ரீமியம்', 'சீசன்', 'கிளாசிக்' என மூன்று காலங்களாகப் பிரித்து விடுமுறை வீடுகளை ஒப்பந்தம் செய்கின்றன. காலங்களுக்கேற்ப வீடுகளுக்கேற்ப, ஊர்களுக்கேற்ப நாம் கட்ட வேண்டிய தொகை வேறுபடுகிறது.

நாம் அனுபவிக்க வேண்டிய ஒருவார காலத்தை நம் விருப்பம் போல் 2, 3 நாட்களாகவோ அல்லது சேர்த்து வைத்து ஒரேயடியாக 14 நாட்களாகவோ கூட அனுபவிக்கலாம். இந்நிறுவனத்தின் விதிமுறைகள் தளர்ந்த நிலையில் இருப்பது குறிப்பிடத்தக்கது.

சென்ற ஆண்டு முடிவுகளின் படி இந்நிறுவனத்தின் செயல்பாடுகள் மிகவும் நல்லமுறையில் உள்ளது. மார்ச் 30, 1993யுடன் முடிந்த நிதியாண்டில் மட்டுமே 1590 வாரங்களுக்கு விடுமுறை வீடுகள் விற்கப்பட்டு சுமார் ரூ.270.97 லட்சம் பெறப்பட்டுள்ளது.

இந்நிறுவனம், தனது விடுமுறை வீடுகளை ஆர்.சி.ஐ. எனப்படும் Resort Condominiums International INC யுடன் தொடர்பேற்படுத்திக் கொண்டிருப்பதால் மேலும் பல இடங்களில் விடுமுறை வீடுகளைப் பெறுவதற்கும் வாய்ப்பளிக்கிறது.

அடுத்த மூன்று ஆண்டுகளுக்குள் இந்தியா முழுவதும் 20க்கும் மேலான விடுமுறை வீடுகளை உருவாக்கிவிடும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

24 சதவிகித டெவிடெண்டை அறிவித்துள்ள இந்நிறுவனம் 1:2 என்ற விகிதத்தில் உரிமைப் பங்குகளையும் வழங்கியுள்ளது.

விஞ்ஞான வளர்ச்சிக்கு ஏற்ப மனிதனின் தேவைகளும் வளர்ந்து கொண்டே போகின்றன. தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்ளும் தீராத பணிகளிலிருந்து சிறிதே ஓய்வெடுத்துப் புத்துணர்ச்சி பெற, அன்றாடப் பணிகளி லிருந்து சற்று விலகி, மனம் லேசாகி மிதந்திட விடுமுறைகளும், அவற்றை சந்தோஷமாகக் கழிக்க இதுபோன்ற சகல வசதிகளும் கொண்ட ஹாலிடே ரிசார்ட்டுகளும் மிகவும் அவசியமாகின்றன என்பது உண்மைதான். ஆனால் உல்லாசத்திற்காக ஒரு பெரும் தொகையை ஒதுக்க மனம் வருமா நடுத்தரக் குடும்பத்தினருக்கு? குறைந்தபட்சமாக என்றால்கூட சுமார் 25,000 ரூபாயை முதலீடு செய்ய முன் வருகிறார்களா?

வந்துள்ளார்கள்.... வருகிறார்கள்..... வந்துகொண்டே இருக்கிறார்கள் என்று நம்பிக்கையுடன் கூறுகிறார் ஸ்டெர்லிங் ஹாலிடே ரிசார்ட்ஸின் இயக்குனர்களில் ஒருவரான திரு.மோகன்.

— பவானி

# சாதனை படைக்கும் பெண்கள்

அந்நியச் செலாவணியை அள்ளித்தரும் ஒரு துறை தோல் பொருட்கள் ஏற்றுமதித்துறை. ஏற்றுமதி செய்யும் அளவிற்குப் பொருட்கள் தயாரிப்பது என்பது அவ்வளவு சுலபமான செயலல்ல. போட்டிகளும் நிறைந்த இந்தத் துறையில் வெற்றியை அடைவது என்பது எல்லோராலும் முடியக்கூடியது அல்ல. இருப்பினும், ஒரு பெண் அப்படிப்பட்ட ஒரு துறையைத் தேர்ந்தெடுத்து, திறம்பட நிர்வகித்து ஏற்றுமதியும் செய்து வருகிறார். இந்தப் பாராட்டுக்குரியவர், சென்னையைச் சேர்ந்த திருமதி நாகரத்னா அவர்கள்.

பெங்களூரில் பிறந்து, வளர்ந்து, கல்லூரிப் படிப்பை முடித்த நாகரத்னா, சென்னை, சென்ட்ரல் லெதர், ரிசர்ச் இன்ஸ்டிடியூட்டில் பயிற்சி பெற்று, தோல் பொருட்களை உருவாக்கும் தொழிற்சாலை ஒன்றை ஆரம்பித்துத் திறம்பட நிர்வகித்து வருகிறார். இத்தொழிற்சாலை, 12. Gandhi Road, Kaveri Nagar, Saidapet, Madras - 15 என்ற விலாசத்தில் இயங்கி வருகிறது

இந்தியன் வங்கியின் மூலம் கடனுதவி பெற்று, சுமார் ரூ.3 லட்ச முதலீட்டில் 'ஐடியல் எக்ஸ்போர்ட்ஸ்' எனும் பெயரில் தோல் பொருட்களைத் தயாரிக்க ஆரம்பித்தார்.

எட்டு தையல் இயந்திரங்களுடனும், இருபது பணியாட்களுடனும்செயல்பட்டுவரும் இந்நிறுவனத்தில் தோலினாலான கீ செயின்கள், பர்ஸுகள், கைப்பைகள் போன்ற அனைத்துத் தோல்பொருட்களும் தயாரிக்கப்படுகிறது.

விலை கூடிய தோல்பொருட்களை வெளிநாட்டினர் மட்டுமன்றி நம்நாட்டினரும் பெருமளவில் உபயோகிக்க ஆரம்பித்திருப்பது ஒரு நல்ல சூழ்நிலையாக உள்ளது என்கிறார் நாகரத்னா. தோல்களில் பொருட்கள் உருவாக்க, நிறைய வேலைப்பாடுகள் செய்ய வேண்டியிருப்பதால் இவற்றின் விலை சற்று கூடுதலாகத் தான் இருக்கிறது. இருப்பினும், தோல் பொருட்கள் நீண்ட நாட்கள் எந்தவித பிரச்னையுமின்றி உழைக்கக் கூடியதும் கூட என்கிறார்.

தமிழ்நாட்டில், பெரியமேடு மற்றும் குரோம்பேட்டையிலிருந்து பதப்படுத்தப்பட்ட தோலை வரவழைத்து, ஆர்டர்களுக்கேற்பப் பொருட்கள் இங்கே உருவாக்கப்படுகிறது. மாதம் ரூ.5,000 வரை சுலபமாகக் கிடைக்கக் கூடிய இத் தொழிலை நாகரத்னா, உடல் ஊன முற்றோர்களுக்கும் உதவும் வகையில் பயிற்சியளிப்பது குறிப்பிடத்தக்க ஒன்று.


திருமதி நாகரத்னா

இவரது திறமையான நிர்வாகத்தினால் கவரப்பட்டு, பல கல்வி நிலையங்களிலிருந்து மாணவிகள் பயிற்சிக்கு இவரிடம் அனுப்பப்படுகின்றனர்.

ரூ.5 முதல் ரூ.5,000 வரையிலான தோல் பொருட்களை உற்பத்தி செய்யும் இந்நிறுவனத்தின் பொருட்கள் ஏஜெண்டுகளின் மூலம் அமெரிக்கா, ஜெர்மனி போன்ற நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்படுகிறது. தோலினால் செய்யப்பட்ட சிறிய, பெரிய, பலவிதமான பரிசுப் பொருட்களைத் தயாரித்தல் இவரது ஸ்பெஷாலிட்டி.

அடுத்த சில வருடங்களுக்குள் இந்நிறுவனத்தை மேலும் விரிவுபடுத்தி, நூறு சதவிகித ஏற்றுமதித் திறன் கொண்ட தொழிற்சாலையாக மாற்றுவதே தனது லட்சியமாகக் கொண்டுள்ளார் நாகரத்னா.

தோல் ஆடைகளின் உற்பத்தியில் கவனம் செலுத்த ஆரம்பித்துள்ள நாகரத்னாவின் வெற்றிக்குப் பின்னால் அவரது கணவர் திரு. பாலுவின் உழைப்பும், ஒத்துழைப்பும் இருக்கிறது என்பதைப் பெருமையுடன் ஒத்துக் கொள்கிறார் நாகரத்னா. அது மட்டுமல்ல, ஒவ்வொரு பெண்ணின் வெற்றிக்குப் பின்னாலும் ஒரு ஆண் இருந்தே ஆக வேண்டும் என்பது உண்மை என்கிறார் இவர்.

ஸ்ரீமதி

## ஷாநாஸ் ஹுசைன்ஸ் ஹெர்பல்




ஷாநாஸ் ஹுசைனின் ஹெர்பல் காஸ்மெடிக்ஸ் உலகப் புகழ் வாய்ந்தவை. வேதியப் பொருட்கள் அல்லாது மூலிகைகளால் மட்டுமே தயாரிக்கப்படும் 'ஷாநாஸ் ஹுசைன் ஹெர்பல்' அழகு சாதனங்கள் தற்போது சென்னையிலும் கிடைக்கின்றன. குறிப்பாக மயிலாப்பூர் விதான் சூப்பர் மார்க்கெட்டில் கிடைக்கிறது.

க்ரீம்கள், லோஷன்கள், முகப் பூச்சுகள், (Masks) ஹேர்கேர், மேக் அப் போன்றவைகளோடு ஆண்களுக்கான அழகு சாதனங்களும் உள்ளன.

## கரிஷ்மா சுடிதார்கள்



## மணம் பரப்பும் பொம்மை

'பார்பி' பொம்மைக்கு ஆசைப்படாத குழந்தைகளே கிடையாது எனலாம். இதன் மகத்தான வெற்றியைத் தொடர்ந்து பொம்மைகளைப் பல விதங்களிலும் அறிமுகப்படுத்தி வருகின்றனர். புதியதாக வந்திருப்பது மணம் பரப்பும் ஸ்ட்ராபெல்லா' பொம்மை.





ரூ.300 விலையுள்ள இந்த அழகிய பொம்மையைக் கொண்டு போகும் இடமெல்லாம் இனிய 'ஸ்ட்ரா பெர்ரி' பழத்தின் மணத்தை பரப்புகிறது. பொம்மை தயாரிக்கும் பொருளுடனேயே இந்த மணம் கலக்கப்பட்டுவிடுவதால் தொடர்ந்து மணம் வீசுகிறது என்கிறார் விற்பனையாளர். இது ஒரு 'லியோ' தயாரிப்பு.

பம்பாயிலிருந்து விற்பனைக்கு வந்துள்ள கரிஷ்மா சுடிதார்கள் இன்று கல்லூரிப் பெண்களால் பெரிதும் விரும்பி அணியப்படுகின்றன. பல வண்ணங்களில் கலவையில், அழகிய வேலைப்பாடுகளுடன் துணிகளாகக் கிடைக்கும் இந்தச் சுடிதார்கள், தைப்பதற்கு எளிமையாக, வெட்டப்பட்டே கிடைக்கின்றன. அவரவர்கள் அளவுகளுக்கேற்பத் தையல் மட்டும் போட்டுக் கொள்ளலாம். சுமார் ரூ.200 லிருந்து ரூ.500, ரூ.600 வரையிலான விலையில் இந்தச் சுடிதார்கள் கிடைக்கின்றன. சென்னையில் பல பிரபல கடைகளில் கிடைக்கின்றன.




## ரீகல் வெற்றி மாறாது .....

ஒரு சொட்டு நீலத்திற்கு இவ்வளவு அமர்க்களமா? என்று வியக் கும்படியாக அமைந்து வருகிறது ரீகல் சொட்டு நீலத்தின் விளம்பரங்கள்... ஒரு வார்த்தை சொல்லாமல், ஹும்.... ஹும் என்று புன் முறுவலுடன் தலையசைத்தே ரீகல் சொட்டு நீலத்தை மனதில் பதியவைத்து விடுகிறார் குஷ்பு....

ரூ.100 முதலீட்டில் திரு.முருகேசன் என்பவரால் ஆரம்பிக்கப்பட்ட ரீகல் சொட்டுநீலம், இன்று தமிழகத்தில் சொட்டு நீலத்தின் தேவையில் 70 சதவிகிதத்தை பூர்த்தி செய்யும் வகையில் வெற்றியடைந்துள்ளது. சென்னையில் மட்டுமே 30 சதவிகிதம் ரீகல் ஆட்கொண்டுள்ளது. அனைவரும் உபயோகிக்கும் குறைந்த விலை நிர்ணயிக்கப் பட்டுள்ளதே இதன் வெற்றிக்குக் காரணம் என்றார் திரு முருகேசன். இதன் உற்பத்தித் திறனை அதிகப்படுத்த மேலும் சில தொழிற்கூடங்களை அமைத்து வருகிறார். தற்போது சுமார் 75 விநியோகஸ்தர்களின் மூலம் இந்நிறுவனம் 'அல்ட்ரா வொமிட்' எனும் அதிக வெளுப் பூட்டும் திரவ நீலத்தையும் தயாரிக்கிறது.

## ஸ்பென்டா இண்டர்நேஷனல்

ஸ்பென்டா இண்டர்நேஷனல் லிமிடெட் நிறுவனம், பம்பாயில் 'பால்கார்' எனும் இடத்தில் ஆண்டொன்றுக்கு 40 லட்சம் ஜோடி பருத்திக் காலுறைகளைத் தயாரிக்கும் தொழிற்சாலையை நிறுவவுள்ளது. நூறு சதவிகித ஏற்றுமதித் திறன் (Eou) கொண்டதாக இருக்கும் இதற்கான தொழில் நுட்பத்தை, இத்தாலியைச் சேர்ந்த 'லோனாட்டி எஸ்.ஆர்.எல்.' எனும் நிறுவனத்திடமிருந்து பெறவிருக்கிறது.

முழு உற்பத்திப் பொருளுக்கும் விற்பனைக்கான மூன்று வருட ஒப்பந்தம் ஒன்றை அமெரிக்க நிறுவனமான 'பெய்கால் டெக்ஸ்' நிறுவனத்துடன் ஏற்படுத்திக் கொண்டுள்ளது.

இந்நிறுவனத்தின் 1994-95 ஆம் ஆண்டுக்கான மொத்த லாபம் ரூ.61.80 லட்சமாகவும் விற்றுமுதல் ரூ.3.22 கோடியாகவும் இருக்கும் என மதிப்பிடப் பட்டுள்ளது.

## வின்சம் டெக்ஸ்டைல்ஸ்

பஞ்சாபைச் சேர்ந்த 'வின்சம் டெக்ஸ்டைல்ஸ் இண்டஸ்டீரிஸ் லிமிடெட்' நூறு சதவிகித ஏற்றுமதித் திறன் கொண்ட பருத்தி இழைகளைத் தயாரிக்கும் தொழிற்சாலை ஒன்றை நிறுவி வருகிறது.

இத்தொழிற்சாலை சண்டிகரிலிருந்து 30 கிலோ மீட்டர் தொலைவில் உள்ள 'டெராபாசி' எனும் இடத்தில் 23,040 லட்சம் நூற்புக் கதிர்களுடன் நிறுவப் பட்டு வருகிறது. இவற்றிற்கான இயந்திரங்கள் சுவிட்சர்லாந்து, ஜெர்மனி ஆகிய நாடுகளிலிருந்து பெறப்படுகிறது. ரூ.52 கோடி செலவில் நிர்மாணிக்கப்பட்டு வரும் இத்திட்டம் முடிவடையும் தருவாயில் உள்ளது.

## டி.டி.ஜி. இண்டஸ்ட்ரீஸ்

சென்னையைச் சேர்ந்த டி.டி.ஜி. இண்டஸ்ட்ரீஸ், ரூ.10ஐ முகமதிப்பாகவும், ரூ.2ஐ பிரீமியமாகவும் கொண்ட 18 லட்சம் சாதாரணப் பங்குகளை வெளியிட்டு ரூ.216 லட்சத்தைத் திரட்டவுள்ளது.

இந்நிறுவனம் பொறியியல் துறை சார்ந்த பலவிதமான இயந்திரப் பணிகளை மேற்கொண்டுள்ளது. இரும்பு மற்றும் தாமிரத் தொழிற்சாலைகளில் மிக முக்கியமான மாசுக் கட்டுப்பாட்டிற்குத் தேவையான தொழில் நுட்பங்களை வழங்குவது இதன் சிறப்பு அம்சமாகும்.

டி.டி.ஜி. தொழில்நுட்பத்திற்காக ஸ்வீடன் மற்றும் அமெரிக்க நிறுவனங்களுடன் கூட்டு ஒப்பந்தம் செய்து கொண்டுள்ளது.

மேலும், காங்க்ரீட் கட்டிங் சிஸ்டெம்ஸ், இங்காட் மோல்டு க்ளீனிங் சிஸ்டம்ஸ், ஷிப்ஹல் கிளீனிங் சிஸ்டெம்ஸ் மற்றும் ஹைபிரஷர் வாட்டர் ஜெட்டிங் பம்புகள் ஆகியவைகளையும் தயாரிக்கின்றது.

இந்நிறுவனத்தின் 1992-93 ஆம் ஆண்டில் விற்பனை ரூ.1477 லட்சங்களாக உள்ளது. இது கடந்த ஐந்து வருடங்களில் 5 மடங்காக உயர்ந்துள்ளது. வரிக்குப் பிந்தைய லாபமாக ரூ.62 லட்சங்களையும் கண்டுள்ளது.

இந்நிறுவனத்தின் விரிவாக்கத் திட்டங்களுக்குத் தேவைப்படும் ரூ.7.64 கோடியில், ரூ.87 லட்சங்களை புரொமோட்டர்களும், ரூ.370 லட்சங்களை ஐ.டி.பி.ஐயும் ரூ.216 லட்சங்களை பொது வெளியீடு மூலமும் பெறவிருக்கிறார்கள்.

இந்நிறுவனத்தின் எதிர்கால செயல்பாடுகள் நன்றாக இருக்கும் என்று எதிர்பார்க்கபபடுகிறது.

## கார் மோகமும் கடன் மோகமும்

கார்களின் விற்பனை, 1990-93 ஆம் ஆண்டுகளில் 8.5 சதவிகிதம் சரிந்தபோதும், கார்களுக்கான கடன் வழங்கும் நிதிநிறுவனங்களின் வளர்ச்சி 15 சதவிகிதம் உயர்ந்துள்ளது. 1993-94ல் சுமார் ரூ.1,000 கோடியை எட்டும் என எதிர்பார்க்கப்படுகிறது. கார் வாங்கும் மோகம் மாருதியின் உற்பத்தியினாலும், கார் வாங்குவதற்கான மோகம் கடன் வழங்கும் சிட்டி பாங்கினாலும் தான் அதிகரித்துள்ளதாகக் கருதப்படுகிறது.

## பெப்சி - ஷாவாலஸ் கூட்டுறவு!

வரவிருக்கும் 11 கிரிக்கெட் டெஸ்ட் மேட்சுகள், 15 ஒரு நாள் போட்டிகள், 21 உள்நாட்டுப் போட்டிகள் ஆகியவற்றை பெப்சியும் ஷாவாலஸும் இணைந்து வழங்க விருக்கின்றன.

கிரிக்கெட் போட்டிகளை வழங்குவதற்கான உரிமைப் போட்டியில் ரிலையன்ஸ், ஐ.டி.சி. மற்றும் வி.எஸ்.டி ஆகிய 'மெகா' நிறுவனங்கள் போட்டியிட்டிருந்த போதிலும் சுமார் ரூ. 6.25 கோடி செலவு செய்து, இந்த உரிமையைப் பெப்சியும், ஷாவாலஸும் தட்டிச் சென்றுள்ளது. செலவில் சம பங்கு பெரும் இவ்விரு நிறுவனங்களில், ஷாவாலஸ் டெஸ்ட் மேட்சுகளையும், பெப்சி ஒருநாள் மற்றும் கிரிக்கெட் போட்டிகளையும் வழங்கவிருக்கின்றன.

## அசோக் லேலண்ட் ஃபைனான்ஸ்

லீசிங் மற்றும் தவணை முறை வர்த்தகம் போன்ற செயல்பாடுகளில் ஈடுபட்டு வரும் அசோக் லேலண்ட் ஃபைனான்ஸ் கடந்த ஆண்டில் வரிக்குப் பிந்தையலாப மாக ரூ. 12.14 கோடியை லாபமாகப் பெற்றுள்ளது. முந்தைய ஆண்டைவிட 39 சதவிகித வளர்ச்சியைக் கண்டுள்ளது. ரூ. 75 கோடிக்கு வர்த்தகம் புரிந்து, பங்குதாரர்களுக்கு 40 சதவிகித டிவிடென்டையும் வழங்கியுள்ளது.

நிதி ஆதாரத்தைப் பெருக்கிக் கொள்வதற்காக அடுத்த ஆண்டுத் தொடக்கத்தில் உரிமைப் பங்குகளை வெளியிடும் திட்டத்தையும், இதன் நிர்வாக இயக்குனர் திரு. எஸ். நாகராஜன் அறிவித்துள்ளார்.

இந்நிறுவனத்தின் டெபாஸிட் சேகரிப்பு ரூ. 48 கோடியாக உயர்ந்துள்ளது. —கு.ப.

## உயிர் காக்கும் செயற்கைக் கோள் வசதி

தமிழ்நாடு மருத்துவமனையில் செயற்கைக் கோள் மூலம் தொடர்பு கொண்டு, நோயாளிகளுக்குத் தேவையான உடனடித் தீவிர சிகிச்சைத் தகவல்களைப் பெறக் கூடிய தகவல் தொடர்பு சாதனம் ஒன்றை அமைத்துள்ளதாக, நிர்வான இயக்குனர் திரு. சி.பி. வேலுச்சாமி தெரிவித்துள்ளார்.

வாஷிங்டனில், அமெரிக்க தேசிய மருத்துவ நூலகம் உலகளாவிய மருத்துவக் குறிப்புகளைச் சேகரித்து பதிவு செய்து வைத்துள்ளது இத்தகவல்களைச் செயற்கைக் கோள்மூலமாக மருத்துவமனையில் அமைக்கப்பட்டுள்ள தகவல் தொடர்பு சாதனத்தைப் பயன்படுத்தி உடனுக்குடன் பெற்று, கம்ப்யூட்டரில் பதிவு செய்து வைத்துக் கொள்ளலாம். உடனுக்குடன் மருத்துவத் தகவல்களைப் பெற்று சிகிச்சை அளிக்க இது மிக உதவும். கு.ப.

## டோரண்ட் குஜராத் பயோடெக்

அகமதாபாதைச் சேர்ந்த டோரண்ட் குஜராத் பயோடெக் நிறுவனம் டில்லியைத் தலைமையிட மாகக் கொண்ட ரான்பாக்ஸீ க்ருப் நிறுவனத்துடன் வியாபாரத் தொடர்பு ஏற்படுத்திக் கொண்டுள்ளது. டோரண்ட்டின் பென்சிலின்-ஜி-உற்பத்திக்கான திட்டம் ஒன்று அமலாக்கப்பட்டு வருகிறது.

# இந்தியாவிற்கு இரண்டாமிடம்!

அடுத்த இரண்டு ஆண்டுகளில் இந்தியா 600 மெகாவாட்ஸ் காற்றுச் சக்தியை உற்பத்தி செய்வதன் மூலம், உலகளவில் இரண்டாமிடத்தைப் பெறவிருக்கிறது. உலகிலேயே மிக அதிக அளவில் காற்றுச்சக்தியை உற்பத்தி செய்து முதலிடத்தைப் பிடித்துள்ள நாடு அமெரிக்கா.

## ஹீரோ ஹோண்டா

ஹீரோ ஹோண்டாவின் ஏற்றுமதி பத்துமடங்கு அதிகரித்துள்ளது. 1991-92-இல் 550 ஆக இருந்த எண்ணிக்கை 1993-இல் 5,500 ஆக உயர்ந்துள்ளது.

## இந்துஸ்தான் பெட்ரோலியம்

அடுத்த நான்கு ஆண்டுகளில் ரூ. 3,000 கோடி செலவில், இந்துஸ்தான் பெட்ரோலியம் தனது உற்பத்தித் திறனை இரண்டு மடங்காக்கிக் கொள்ளத் திட்டமிட்டுள்ளது. இந்தத் தொகையைத் திரட்டும் பொருட்டு, பங்கு வெளியீடு உள்பட பல வழிகளையும் திட்டமிட்டு வருகிறது. இந்தப் பங்கு வெளியீடு ஆறுமாதங்களுக்குள் இருக்கும் என எதிர்பார்க்கப்படுகிறது.

## ஜி.எஸ்.எல். வழங்கும் இரண்டு மடங்கு டிவிடெண்ட்

ரூ. 350 கோடி மதிப்பு வாய்ந்த பக்ரோடியா க்ரூப் நிறுவனமான குஜராத் ஸ்பின்னர்ஸ் லிமிடெட் 1992-93 ஆம் ஆண்டிற்கு 20 சதவிகித டிவிடெண்டை வழங்கியுள்ளது. சென்ற ஆண்டு 10 சதவிகிதமே வழங்கப்பட்டது.

இந்நிறுவனத்தின் செயலாக்கம் மிக நல்ல முறையில் இருந்து இதன் விற்று முதல் ரூ. 60.67 கோடியை எட்டி, 35 சதவிகித வளர்ச்சியைக் காட்டியுள்ளது. நிகரலாபம் ரூ. 35 லட்சத்திலிருந்து ரூ. 3.20 கோடிக்கு உயர்ந்துள்ளது.

## திருத்தம்

அக்டோபர் மாத 'நாணயம்' பகுதியில், பக்கம் 94-இல் இடம் பெற்றிருக்கும், 'கலையழகோடு காசு சம்பாதிக்கலாம்' என்ற கட்டுரையில் செயற்கைத் தாவரங்கள் தயாரிக்கும் நிறுவனத்தின் பெயர் 'ஆர்ட் பிளாண்ட்' என்பதற்கு பதிலாக WF என்று தவறுதலாக அச்சடிக்கப் பட்டுவிட்டது. வாசகர்கள் திருத்தி வாசித்துக் கொள்ளும் படிக் கேட்டுக் கொள்கிறோம்.

## வரவேற்கிறோம்!



பம்பாய் ஸ்டாக் எக்ஸ்சேன்ஜின் எக்ஸிக்யூடிவ் டைரக்டராக திரு.என்.கோலாட்கர் பதவி ஏற்றுள்ளார். இவர் சுமார் இருபத்தி ஏழு வருடங்கள் இன்கம்டாக்ஸ் பிரிவில் உயர் அதிகாரியாகப் பொறுப்பேற்றிருந்தவர்.

'நாணயம்' சார்பில் அவரை வரவேற்பதில் பெருமைப்படுகிறோம்.



திரு.கே.எம். தியாகராஜன், பாங்க் ஆஃப் மதுரையின் சேர்மனாகவும், வங்கியின் உயர் தலைமை அதிகாரியாகவும் நியமிக்கப்பட்டுள்ளார். ரிசர்வ் வங்கி, இவரது நியமனத்தை மூன்று ஆண்டுகளுக்கு அங்கீகரித்துள்ளது.

திரு.தியாகராஜன், பல ஆண்டுகளாக மதுரை வங்கியின் இயக்குனராகப் பணியாற்றி வந்தவர்.

நாணயம் சார்பில் இவரை வாழ்த்தி வரவேற்கிறோம்.





# ஸ்ரீ கந்தசுவாமி

## பர்மனென்ட் பண்டு லிமிடெட்

மத்திய அரசால் அங்கீகரிக்கப்பட்ட நிதி நிறுவனம். துவக்கம்:1990
பதிவு அலுவலகம்:60, சாமிபண்டாரம் தெரு, சிந்தாதரிப்பேட்டை, சென்னை-600 002.
கிளை அலுவலகம்:36, ஜீனிஸ் ரோடு, சென்னை-600 015.

## பிக்சட் டிபாசிட் திட்டம்

| 46 நாள் | 90 நாள் | 6 மாதம் | 1 ஆண்டு | 2 ஆண்டு | 3 ஆண்டு | 4 ஆண்டு | ❃5 ஆண்டு |
|---|---|---|---|---|---|---|---|
| 13% | 14% | 15% | 17% | 18% | 18.5% | 19% | 20% |

மாத வட்டிக்கான செக்குகள் முன்கூட்டியே கொடுக்கப்படும் உங்கள் டிபாசிட்டுகள் 45 மாதங்களில் 2 மடங்காகிறது 90 மாதங்களில் 4 மடங்காகிறது.

## காமதேனு மணி பேக் திட்டம்

| வைப்புத்தொகை | முதல் ஐந்தாம் ஆண்டு முடிவில் கிடைக்கும் தொகை | இரண்டாம் ஐந்தாம் ஆண்டு முடிவில் கிடைக்கும் தொகை | மூன்றாம் ஐந்தாம் ஆண்டு முடிவில் கிடைக்கும் தொகை |
|---|---|---|---|
| ரூ.6,320/- | ரூ.6,000/- | ரூ.6,000/- | ரூ.56,320/- |
| ரூ.12,640/- | ரூ.12,000/- | ரூ.12,000/- | ரூ.1,12,640/- |
| ரூ.25,280/- | ரூ.24,000/- | ரூ.24,000/- | ரூ.2,25,280/- |
| ரூ.50,560/- | ரூ.48,000/- | ரூ.48,000/- | ரூ.4,50,560/- |

## பொற்குவியல் திட்டம்

ரூ.100 மட்டுமே பிரதி மாதம் செலுத்தி 25 வருட முடிவில் ரூ.3,00,000 பெறுவீர்!

## பென்ஷனர் நலத்திட்டம்

வயோதிகர், விதவைகள், ஊனமுற்றோர், கல்வி மற்றும் அறக்கட்டளை பயன் பெறலாம்

| | | |
|---|---|---|
| ரூ.10,000/-மும் அதற்கு மேலும் | 12 மாதங்கள் | வட்டி 19.5% |
| ரூ.10,000/-க்கு கீழ் | | வட்டி 18.5% |

## ரெக்கரிங் டிபாசிட் திட்டம்

மாதம் ஒன்றுக்கு ரூ.25-ம் அதன் பெருக்கமும் பெற்றுக் கொள்ளப்படும்

| மாதம் | 12 | 24 | 36 | 48 | 60 | 72 | 80 |
|---|---|---|---|---|---|---|---|
| ரூ.100 | 1,320 | 2,860 | 4,720 | 7,200 | 10,050 | 13,400 | 17,500 |

## செல்வக்களஞ்சியம் டிபாசிட் திட்டம்

உங்கள் குழந்தையைக் குபேரனாகக் காண ஆசையா இதோ
ரூ.7500ஐச் செலுத்தி 15 வருட முடிவில் ரூ.1,25,000 பெறலாம்
ரூ.9000 ஐச் செலுத்தி 15 வருட முடிவில் ரூ.1,50,000 பெறலாம்
சேவிங்ஸ் கணக்குகள் மீது 10% வட்டி

## கடன்

நகைகள் பேரில் கிராம் 1க்கு ரூ.300/- வழங்கப்படும்.
சென்னை மாநகரில் உள்ள கட்டிடங்கள் பேரிலும் வழங்கப்படும்

வட்டி வீதம் ரூ.1.85

(Friday Weekly Holiday)
பங்குதாரர்களுக்கு மட்டும்
*Business Hours*
*Week Days 9 A.M. - 12 Noon &*
*2.30 P.M. - 6.00 P.M.*

சேர்மன் P. பாலசுப்பிரமணியம் B.Sc.
*சீனியர் டிரஸ்டி*
*ஸ்ரீ கந்தகோட்டம்*
*சென்னை-3.*

பாதுகாப்புப் பெட்டக வசதி உண்டு

SURESH

# வன்மையுள் எல்லாம் தலை



நிர்வாக இயல் விற்பன்னர்கள் உலகெங்கிலும், ஒரு நிர்வாகம் முன்னேற, வலிமையுற, கூறும் வழிகளில் தலையாயது "பெரியாரைத் துணைக்கோடல்" என்பதே. இதைத்தான் இன்று Expert Consultancy என்று கூறுகிறார்கள். ஒரு தொழிற்சாலை ஆரம்பிக்கும் முன் அதற்காக வரைபடம் வரைவதிலிருந்து கடைசியாக Project Report தருவது வரை நாம் திறமையானவர் துணையை நாட வேண்டி இருக்கிறது.

இன்று வெளிவந்துள்ள உலக வங்கி (World Bank) அறிக்கை வளரும் நாடுகள் பற்றி ஒரு முக்கியக் குறிப்பை அளிக்கிறது. இன்று குறைந்த வளர்ச்சிபெறும் நாடுகள் (Low Development Countries - LDCS) ஏன் வேகமாக முன்னேற முடியவில்லை என்ற கேள்வியை எழுப்பிப் பதிலையும் அளிக்கிறது. பல வளரும் நாடுகள் தம் தொழில் திட்டங்களுக்குச் சரியான திறமையான ஆலோசனையாளர் இன்றி அரைகுறை முன்னேற்றம் காண்கின்றன. ஏன், இந்த அரைவேக்காட்டுத்தனம்?

ஒரு பெரிய தொழிற்சாலை அமைகிறது, பத்தாண்டுகட்குப் பிறகு அங்குள்ள இயந்திரங்கள் அமைப்பில் கோளாறு; ஒரு பெரிய அணைக்கட்டு அமைகிறது. ஒரு 'மாண்பு' அதைத் துவக்கி வைக்கிறார், நூறு கார்கள் பவனியுடன் ஊர் முழுவதும் திருவிழாக்கோலம். ஆனால் இந்த விழா நடந்த மூன்றாவது மாதமே அணைக்கட்டில் வெடிப்பு, அணை கட்டிய (அல்லது கட்டாத) பொறியாளர் மீது நடவடிக்கை; புதிய 'கார்' வாங்கப்படுகிறது; அடுத்த நாளே வண்டி நகர மறுக்கிறது; இன்ஜின் அமைப்பின் கோளாறு.

இப்படிப்பல அவலங்கள் தினம் தினம் செய்தியாக வந்து நம் செவிகளில் பறையடிக்கிறது. ஏன் இந்த அலங்கோலம்? வள்ளுவரே சொல்லுகிறார்.

"எண்ணித் துணிக கருமம் துணிந்த பின்
எண்ணுவம் என்பது இழுக்கு"

இது தான் வள்ளுவர் அன்றே கூறிய இன்றைய Peter Drucker -ன் வாக்கில்" Project Planning". பீட்டர் டிரக்கர் கூறுவார் - "First Step in Planning is deep thinking." ஆம், எண்ணித் துணிதல்.

சரி நாம் தன்னந் தனியாகவா எண்ணுவது? காட்டில் முனிவன் தனியாகத் தவமிருப்பது போல் ஒத்தைக்காலில் நாம் மட்டுமே நின்று திட்டம்போட முடியுமா? முடியாது, முடியாது. வல்லவர் பலர் அமர்ந்து திட்டமிடலே ஜப்பானிய முறை.

ஆம்! அந்த அந்தத் துறையில் வல்லவரைத் தேர்ந்தெடுத்து அந்த அந்தப் பெரியாரின் துணையுடன் உன் திட்டத்தை வரைந்தால் தான் உன் திட்டம் பரிமளிக்கும்.

நிர்வாக இயல் நிபுணர், Peter Drucker -ரின் கூற்றுப்படி திட்டமிடுதலின் அடிப்படை - "Expert Consultation' தான். இது வள்ளுவன் மொழியில் "பெரியாரைத் துணைகோடல்" என்று கூறப்படுகிறது.

"அரியவற்றுளெல்லா மரிதே பெரியாரைப்
பேணித் தமராக் கொளல்"

(குறள் 443/அதி 45)

நாம் நிர்வாகத்தில், நம் செயலில் முன்னேற்றம் காண வேண்டுமாயின் அறிவாற்றல் மிக்கவரைப் பேணி நம்மவராக்கிக் கொள்ளும் திறனை நாம் பெற்றிருக்க வேண்டும். இவரது துணை "அரியவற்றுளெல்லாம் அரிதாகும்". வள்ளுவனின் சொல்லாக்கத்தைப் பாருங்கள். பெரியார் துணை நாம் பெறும் அரிய பொருள்களுக் கெல்லாம் அரிதாக அமையும். The Best among the Best என்று (Management Jangon) நிர்வாக இயல் பாஷையில், கூறுவார்களே, அதே போல் தான் வள்ளுவனின் பொய்யா மொழியும் கூறியுள்ளது. எனவே நாம் வளர, நம் நிறுவனம் உயர நம் முதல் தேவை என்ன? நல்லவர், வல்லவர் உதவி - இது இலலாவிடில் முன்னேற்றம் இல்லை.

டாக்டர் கி. வேங்கடசுப்பிரமணியம்

(இன்னும் வரும்)

# ISO என்றால் என்ன?

நம்மூர் **ISI** முத்திரை (Indian Standard Institution) போல் வெளிநாடுகளில் ஏற்றுமதி செய்வதற்கென, தரத்தின் அடிப்படையில் கொடுக்கப்படும் பெருமதிப்பு வாய்ந்த சான்றிதழ்தான் ISO - 9000 (International Organisation for Standardization)

இதற்கான தலைமைச் செயலகம் ஜெனீவாவில் உள்ளது. இந்தியா உள்பட இதில் 91 நாடுகள் உறுப்பினர்களாக உள்ளனர். இந் நிறுவனம் 1986ல் ISO - 8402 என்ற சான்றிதழையும், 1987ல் ISO-9000, ISO-9001, ISO-9002, ISO-9003, ISO-9004 என்ற சான்றிதழ்களையும் வெளியிட்டது.

ISO-9000 என்பது 'க்வாலிட்டி மேனேஜமெண்ட் சிஸ்டத்திற்கான, வரைமுறைகளைக் கொண்டது. ISO-9001 என்பது டிசைன், டெவலப்மெண்ட், புரொடக்ஷன், இன்ஸ்டலேஷன் மற்றும் சர்வீஸிங் ஆகிய அனைத்துப் பிரிவுகளையும் கொண்ட நிறுவனங்களுக்காக ஏற்படுத்தப்பட்டது. ISO-9002 என்பது உற்பத்தியையும், நிர்மாணித்தலையும் மட்டுமே பிரதான நடவடிக்கையாகக் கொண்ட நிறுவனங்களுக்கானது. ISO - 9003 என்பது ஒரு நிறுவனத்தின் முற்றிலும் தரத்திற்கானது.

சமீபகாலங்களாக ISO-9000 என்பது மிகப் பரவலாகப் பேசப்பட்டாலும் இது பற்றிய அறிவு மிகக் குறைவாகவே உள்ளது. இதற்கான ஆலோசனை மையங்கள் பல ஏற்படுத்தப்பட்ட போதிலும், அவைகள் சரிவர பயன்படுத்தப்படவில்லை.

ஒரு சாஃப்ட்வேர் நிறுவன இயக்குனர், ஏற்றுமதிப்போட்டியைச் சமாளிக்க இந்தச் சான்றிதழைப் பெற நினைத்தார். அதற்காகப் பல இந்திய ஆலோசகர்களைக் கலந்த பிறகும் திருப்தியில்லாமல் இறுதியில் ஒரு வெளிநாட்டு ஆலோசகரை வரவழைத்தார். இவர் பிரிட்டனிலிருந்து டில்லிக்கு வந்து மூன்று மாதங்கள் தங்கி, அந்த சாஃப்ட்வேர் நிறுவனத்தில் பல மாற்றங்களைச் செய்யச் சொல்லி, ISO-9000 சான்றிதழ் பெறுவதற்கான ஆலோசனைகளையும் வழங்கினார். ஓராண்டிற்குள் இந் நிறுவனம் அந்தச் சான்றிதழைப் பெற்றது. இதற்காக ஆன செலவு ரூ.25 லட்சம்.

இதுபோல் எல்லா நிறுவனங்களாலும் செலவு செய்ய முடியுமா? இந்த நிலைமை இப்போது வேகமாக மாறிவருகிறது. இந்த ஆலோசனைகளை வழங்குவதற்கெனவே சில ஆலோசனை மையங்கள் ஏற்படுத்தப்பட்டுள்ளன. ஓய்வு பெற்ற வெளிநாட்டுத் தொழிலதிபர்கள் இம்மையங்களின் மூலம் இந்தியத் தொழிலதிபர்களுக்கு ஆலோசனை வழங்க முன்வந்துள்ளனர். இதற்காகும் செலவும் சற்றுக் குறைவாகத்தான் உள்ளன.

உதாரணமாக ஆறு வருடங்களுக்கு முன் அமெரிக்காவின் IESC (International Exclusive Services Corpos) எனப்படும் அமைப்பு டில்லியிலுள்ள 'இன்டஸ்ட்ரியல் டெவலப்மெண்ட் சர்வீசஸ்' எனப்படும் அமைப்புடன் கூட்டுறவு கொண்டு ஆலோசனைகளை வழங்குகிறது.

சென்ற ஆண்டு மட்டும் 30 வெளிநாட்டு ஆலோசகர்கள் இந்தியாவுக்கு வந்து ISO-9000 பெறுவதற்கு உதவியிருக்கிறார்கள். இந்த எண்ணிக்கை அடுத்த ஆண்டு 40 ஆக உயரும்.

இவர்களால் பயனடைந்த, வேளாண்மைத் துறைக்கான இயந்திரங்களைத் தயாரிக்கும் நிறுவனமொன்றின் நிர்வாகி கூறுகிறார்:

'மற்ற யாராலும் வழங்க முடியாத சில பயிற்சிகளையும், ஆலோசனைகளையும் வெளிநாட்டுத் தொழிலதிபர்களால் வழங்க முடிகிறது. மூன்றே மாதங்களில் எங்களால் ஒரு நவீன புரோட்டோ டைப் ஒன்றினை உருவாக்க முடிந்தது. தொழிற்சாலையையும் நவீனப்படுத்த முடிந்தது."

இது போன்ற ஆலோசனை வழங்கும் வேறு சில அமைப்புக்காக 'ஹெல்பேஜ் இந்தியா', NCAER எனப்படும் 'National Counsil of Applied Economic Research' ஆகியவை NCAERன் மூலம் வெளிநாட்டிலேயே தங்கிவிட இந்தியர்களும் கூட இந்தியாவிற்கு வந்து ஆலோசனை வழங்கிவிட்டுச் செல்ல முடியும்.

தரம் மட்டுமில்லாமல், தொழிற்சாலைகளின் நிர்மாணம், விரிவாக்கம், நவீனப்படுத்துதல் என்று அனைத்திற்கும் இவர்களது ஆலோசனைகள் பெறப்படுகின்றன. இதனால் அதிக உற்பத்தித் திறன், அதி உயர் தரம், உற்பத்திச் செலவில் குறைவு, அதிக லாபம் ஆகிய பயன்களை அடைய முடிகிறது.

உதாரணமாக மருந்து வகைகளைத் தயாரிக்கும் 'ரான்பாக்ஸி'யைச் சொல்லலாம். இந்நிறுவனம் தனது ஆராய்ச்சிப் பிரிவிற்கான சில ஆலோசனைகளில் பெற ஆலோசகர்களை நாடியுள்ளது.

இதுபோன்ற மையங்களின் மூலம் இவர்களின் ஆலோசனைகளைப் பெறுவது சுலபமாகவும், செலவு குறைவாகவும் இருப்பதால் பெரும்பாலான சிறிய தொழிலதிபர்கள் கூடத் தங்களது வெற்றிகரமான எதிர்காலத்திற்காக வெளிநாட்டினரின் ஆலோசனைகளைப் பெற விழைகின்றனர். இது வரவேற்கத்தக்கதாகும்.

# புத்தக விமர்சனம்

## செல்வம் பெருக சிறுதொழில்கள்

### எம். எஸ். எஸ்.

நாம் அன்றாடம் உபயோகிக்கும் பொருள்களை நாமே தயாரித்துக்கொள்ளும்படியாகவும், விநியோகம் செய்யும்படியாகவும் எழுதப்பட்டுள்ளது இந்நூல்.

அ.கு. முரளீதரன் அவர்கள் நூற்றுக்கும் மேற்பட்ட மிக அவசியமான, பலராலும் பெரிதும் உபயோகப்படுத்தப்படுகின்ற பொருள்களைத் தயாரிக்கும் முறைகளோடு எளிமையாக வகைப் படுத்தியுள்ளார்.

பூஜைக்கு வேண்டியவை, அலங்காரப் பொருட்கள், ரொட்டி, பன் போன்ற பேக்கரி பொருட்கள், சாக்பீஸ், இங்க் போன்ற ஸ்டேஷனரி பொருட்கள், சில மருத்துவப் பொருட்கள், க்ளீனிங் பௌடர்கள், சோப்பு வகைகள், ஜாம், ஜூஸ், சர்பத் வகைகள் என்று அனைத்துப் பொருள்களின் தயாரிப்பும் கொடுக்கப்பட்டுள்ளது.

குறைந்த செலவில் தயாரிக்கப்படும் வகையில் கொடுக்கப்பட்டிருப்பதாலோ என்னவோ, புத்தகமும், எளிய வடிவில் குறைந்த விலையில் அறிமுகப் படுத்தப்பட்டுள்ளது. புத்தகத்தின்




விலை ரூ.14 தான். வாங்கிப் பயன் பெறலாம்.

கிடைக்குமிடம் :
ப்ரியா நிலையம்,
32/ 2 அம்மையப்பன் தெரு,
இராயப்பேட்டை, சென்னை-14.

## எண்ணங்களை மேம்படுத்துங்கள்

டாக்டர் எம்.ஆர்.காப்மேயரின் 'Thoughts to Build on' எனும் ஆங்கிலப் புத்தகம் பி.சி.கணேசன் அவர்களால் மொழி பெயர்க்கப்பட்டு கண்ணதாசன் பதிப்பகத்தாரால் வெளியிடப்பட்டுள்ளது.

'எண்ணங்களை மேம்படுத்துங்கள்' நூலைப் படிக்கப் படிக்க, நமக்குள்ளே நம்மாலும் முடியும் என்கிற நம்பிக்கை உருவாகிறது. எண்ணங்களை மேம்படுத்திக் கொள்வதற்கான பல வழிமுறைகளைச் சிறுசிறு தலைப்புகளில், அத்தியாயம், அத்தியாயமாகப் பிரித்துச் சிந்தனையைத் தூண்டும் வகையில் எழுதப்பட்டுள்ளது.

உடலளவில் உயர்ந்து நில்லுங்கள், மன அளவில் உயர்ந்து நில்லுங்கள், ஆன்மீக அளவில் உயர்ந்து நில்லுங்கள். இந்தக் கலையைக் கற்றுக் கொண்டுவிட்டால், வாழக்கைப் பாதையில் கம்பீரமாக நடை போடமுடியும் என்கிறது இந்நூல்.

'ஒரு மனிதன் என்ன நினைக்கிறானோ அதுவாகவே ஆகிறான்' என்பதுதான் இந்நூல் உணர்த்தும் தத்துவம்.

எதைப் பற்றி எண்ணவேண்டும்?

உதாரணமாகச் சில எண்ணங்கள் விவரிக்கப்பட்டுள்ளன.

இவற்றுடன் யாரும் ஒத்துப் போகத்தான் வேண்டும் என்பதற்காக எழுதப்படாமல், அவற்றில் தொடர்ந்து சிந்தனை தூண்டப்பட வேண்டும் என்ற நோக்கில் மட்டுமே எழுதப்பட்டுள்ளது.

ரூ.36 விலைகொண்ட இந்நூல் நமது சிந்தனையைத் தூண்டுவதற்கும், நம்மை நாமே அலசிக் கொள்வதற்கும் வழி வகுக்கிறது.

கிடைக்குமிடம் :
கண்ணதாசன் பதிப்பகம்,
12, கண்ணதாசன் சாலை,
சென்னை - 17.

**1989 ஆம் ஆண்டு முதல் 1992 ஆம் ஆண்டு வரை வெளிவந்த நூல்களில் கலைமாமணி விக்கிரமன் அவர்கள் எழுதிய 'மதுரை மகுடம்' சரித்திர நூல் சிறந்ததாகத் தேர்ந்தெடுக்கப்பட்டு இராஜா சர் அண்ணாமலை செட்டியார் பரிசு வழங்கப்பட்டது.**

**டாக்டர் இராஜா சர் அண்ணாமலை செட்டியார் பிறந்த நாளான 30.9.1993 அன்று இராஜா அண்ணாமலை மன்றத்தில் நடைபெற்ற பரிசளிப்பு விழாவில் தமிழக வீட்டு வசதி மற்றும் நகர்ப்புற வளர்ச்சித் துறை அமைச்சர் மாண்புமிகு திரு. எஸ். ரகுபதி அவர்கள் சிறப்புரையாற்றிப் பரிசளித்தார்.**





## சிறுசேமிப்பு - குடும்பத்தின் முதல் செலவாக இருக்கட்டும்



# சிறுசேமிப்புத்துறையின் மகத்தான பரிசுத்திட்டம்



**உங்கள் முதலீடுகளுக்கு 619 கவர்ச்சிகரமான பரிசுகள்**

| | |
|---|---|
| 1 சூப்பர் பம்பர் முதல் பரிசு | மாருதி ஆம்னிவேன் (அல்லது) 25 H.P. H.M.T. டிராக்டர் (இயந்திரக்கலப்பையுடன்) |
| 1 இரண்டாவது பரிசு | - அஞ்சலக மாதாந்திர வருவாய்த்திட்டத்தில் ரூ. 24,000/-க்கான முதலீடு |
| 2 மூன்றாவது பரிசுகள் | - கலர் டெலிவிஷன் |
| 2 நான்காவது பரிசுகள் | - உலர்த்தும் வசதியுள்ள செமிஆட்டோமேடிக் வாஷிங்மெஷின் |
| 3 ஐந்தாவது பரிசுகள் | - 2 நபர்களுக்கு சென்னையிலிருந்து புறப்படும் 6 நாள் தென்னிந்திய சுற்றுலா |
| 10 ஆறாவது பரிசுகள் | - 1 சவரன் (22 காரட்) தங்கநாணயம் |
| 600 ஏழாவது பரிசுகள் | - ரூ. 100/- மதிப்புள்ள இந்திராவிகாஸ் பத்திரம் |




**இன்றே ரூ. 500/-ம் அதற்கு மேலும் தமிழ்நாட்டில் முதலீடு செய்து இலவச பரிசுக் கூப்பன் பெறுங்கள்.**

### பரிசுக் கூப்பன் பெற முதலீடு செய்ய வேண்டிய திட்டங்கள்

* இந்திரா விகாஸ் பத்திரம் (IVP)
* கிசான் விகாஸ் பத்திரம் (KVP) ▲
* தேசிய சேமிப்புப் பத்திரம் 8-வது வெளியீடு ( NSC VIII ISSUE ) ▲
* தேசிய சேமிப்புத்திட்டம் 1992 (NSS '92) ▲
* 15 ஆண்டு பொது சேமநல நிதித்திட்டம் (PPF) ▲
* மாதாந்திர வருவாய்த் திட்டம் (MIS) ▲
* ஓய்வு பெறும் அரசு/பொது நிறுவன ஊழியர்களுக்கா... சேமிப... திட்டம் ▲
* 1 மற்றும் 2 ஆண்டு அஞ்சலக குறித்தகால முதலீடு (T.D.)
* 3 மற்றும் 5 ஆண்டு அஞ்சலக குறித்தகால முதலீடு (T.D.) ▲
* அஞ்சலக தொடர் வைப்புத்திட்டம் / வளரும் மாத சேமிப்புத் திட்டம் (R.D./C.T.D.)

மேலும் 2% ஊக்கத்தொகை ▲ (குறிப்பிட்ட திட்டத்திற்கு)

**சேமிப்புபத்திரம் அனைத்து அஞ்சலகங்களிலும் கிடைக்கும்**

மேலும் விவரங்களுக்கு :

ஆணையாளர், சென்னை மாநகராட்சி, (சிறுசேமிப்பு பிரிவு) சென்னை-600 003, தொலைபேசி: 584440.

மண்டல இயக்குநர், தேசிய சேமிப்பு நிறுவனம், 92, அண்ணா சாலை, சென்னை-2, தொலைபேசி: 849962.

மாவட்ட ஆட்சியர், வட்டாட்சியர், வட்டார வளர்ச்சி அலுவலர், அஞ்சலக அதிகாரிகள் மற்றும் சிறுசேமிப்பு முகவர்கள்.

சிறு குடும்பம் செல்வக் குடும்பம்

**இன்றைய சேமிப்பு நாளைய பாதுகாப்பு**

வெளியீடு :
இயக்குநர் சிறுசேமிப்புத்துறை,
621, அண்ணா சாலை, சென்னை -600 006.
தொலைபேசி: 8251784 / 8251685.

DIPR/ 702 /DIS/93

# அமுதசுரபி : 25 ஆண்டுகளுக்கு முன்பு

"பண்ணை யிசைப்பீர் - நெஞ்சிற்
புண்ணை யொழிப்பீர் - இந்தப்
பாரினிலே துயர் நீங்கிடும்..."

என்று மகாகவி பாரதியார் கூறிய வரிகளை மெய்ப்பிப்பது போல அவள் பண்ணையிசைக்கிறாள். தன் மன எண்ணத்தை மீண்டும் கவிதையாக வடித்து இசையாக ஒலிக்க ஆயத்தமாகிறாள். ஆண்டாளாகத் தன்னைக் கற்பனை செய்து கொள்கிறாள். 'காக்கைச் சிறகினிலே நந்தலாலா நின்றன் கரிய நிறம் தோன்றுதையே' என்று இசைக்கிறாள். அட்டையிலே இக் காட்சியை அழகாக ஓவியர் 'லதா' வரைந்துள்ளதை 25 ஆண்டுகளுக்கு முந்தைய அமுதசுரபியில் காண்கிறோம்.

'ஆயிரம் ஆண்டுகளில் தமிழகம்' என்கிற தலைப்பில் சின்னஞ் சிறுவர்களும் தெளிவாகப் புரிந்து கொள்ளும் கட்டுரையைத் தொகுத்துள்ள விக்கிரமன், படங்களுடன் நரசிம்ம பல்லவரின் காலத்தை விளக்கியுள்ளார்.

வி.ஜி.பி. சகோதரர்களின் தாய் திருமதி சந்தனம் அம்மாளின் குண மாண்புகளை 'நல்ல தாய்' கட்டுரை எதிரொலிக்கிறது.

சென்ற இதழ் தொடர்ச்சியான மத்த விலாசத்தை அழகு தமிழில் (மூலம் : பல்லவ மகேந்திரவர்மன்) எடுத்துரைக்கிறது. த.நா. குமாரஸ்வாமி நாடக வடிவக் கட்டுரை.

பி.எஸ். சாமிநாதனின் 21, 22ஆவது அத்தியாயங்கள் 'இதயத்தில் யார்?' - கேள்விக்கான பதிலை எதிர்நோக்கி விரைகிறது.

இனியவன் எழுதிய 'அவனும் இவனும்' சமூகச் சிறுகதை, கோவி. மணிசேகரன் எழுதிய 'குருக்ஷேத்திரம்' சரித்திரச் சிறுகதை, ஆர்.டி. ராஜன் எழுதிய 'மூச்சும் ஓம்' பக்கங்கள், திருமலை எழுதிய 'இரண்டு சித்திரங்கள்' மன இயல் சிறுகதை, ரவீன்ஸ் எழுதிய 'உயர உயரப் பறந்தாலும்' சிறுகதை - 'அமுதசுரபி'யின் இலக்கிய உயர்வுக்குத் துணைபுரிந்துள்ளன.

ஆன்மிக அன்பர்களுக்கு 'திரிபுரா இரகசியம்' தொடரின் மூலம் விருந்து படைத்துள்ளார் பிரும்மஸ்ரீ சி.வி. ஸ்வாமி சாஸ்திரிகள்.

த.ரா.ரா.வின் 'மேளமும் தாளமும்' கட்டுரை நாதஸ்வர நுணுக்கங்களை விவரித்துள்ளது (படங்களுடன்).

வில்லிபுத்தூரார் மகாபாரதத்தின் 'நான்காம் பகுதி'யை புலவர் கீரன் (இன்று அமரராகிவிட்டார்) நயம்பட கண்முன் நிறுத்துகிறார்.

கார்த்திகை மாத ராசிபலனை துல்லியமாய் கணித்துள்ளார் பி.வி. ராவ்.

நாட்டியப்ரியர்களுக்கு அரங்கமாய் திகழ்கிறது நடனப்ரியா எழுதியுள்ள 'சங்கத் தமிழ் மாலை'.

ஆக -

படித்த ஒவ்வொரு பக்கமும் வெவ்வேறு ருசியைத்தந்த திளைப்போடு திகழ்கிறது 25 ஆண்டுகளுக்கு முந்தைய (நவம்பர் 1968ஆம் ஆண்டு) அமுதசுரபி.

—நந்து

## அறிமுகம் புதிது




நாம் அருந்தும் நீர் சுத்தமாக இருக்க வேண்டும் என்று எல்லோரும் எதிர்பார்ப்பது இயல்பு. காரணம் நோய் உண்டாவதற்கு முக்கியக் காரணம், பருகும் நீரில் அசுத்தம் சேர்ந்து விடுவதுதான்.

அதனால் இப்போது சுத்தமான 'மினரல் வாட்டர்' உள்ள பாட்டில்களை வாங்கிப் பருகும் காலம் நடைமுறைக்கு வந்து விட்டது.

பல தயாரிப்பாளர்கள் 'மினரல் வாட்டர்' தயாரிப்பில் ஈடுபட்டிருக்கிறார்கள். வர்த்தக உலகில் நல்ல நீருக்கும் பங்கு வந்துவிட்டது. இதிலும் மிகச் சுத்தமான தயாரிப்பை வாடிக்கையாளர்கள் எதிர்பார்க்கிறார்கள்.

புகழ்பெற்ற சோலன் மினரல் வாட்டர் பிரைவேட் லிமிடெட் நிறுவனத்தார் 'கோல்டன் ஈகிள் ப்ரீமியம்' என்ற பெயரில் இத் தயாரிப்பைத் தொடங்கி இருக்கிறார்கள்.

வாங்கி உபயோகிக்க வசதியாக 'பெட்' பாட்டில்கள், பாக்கெட்டுகளிலும் இந் நிறுவனத்தார் இதைத் தயாரித்து மார்க்கெட் செய்கிறார்கள். ●



யூகோ வங்கியின் தமிழ்நாடு மற்றும் பாண்டிச்சேரி மண்டல மேலாளராகத் திரு. எல்.எஸ். இராமன் அவர்கள் 7-10-93 முதல் பொறுப்பேற்றுள்ளார். இவரது தலைமையின் கீழ், தமிழ்நாடு மண்டலத்தில் உள்ள 68 கிளைகளும் பல்வேறு வங்கி அலுவல்களில் நல்ல வளர்ச்சி கண்டு யூகோ வங்கிக்குப் பெருமை சேர்க்கும் என்பது திண்ணம். ●

# உங்கள் ராசி பலன்

16-11-1993 முதல் 15-12-1993 வரை

(பாலஜோசியர்
வித்வான் வே. லட்சுமணன்)

**கிரக மாறுதல்**

28-11-1993 முதல் விருச்சிக – சுக்கிரன்.

2-12-1993 முதல் விருச்சிக – புதன்

11-12-1993 முதல் தனுசு – செவ்வாய்.

**நவக்கிரக பாதசாரம்**

சூரியன் – விசாகம் 4, சந்திரன் – கேட்டை 4, செவ்வாய் – அனுஷம் 3, புதன் – சுவாதி 2, குரு – சுவாதி 1, சுக்கிரன் – சுவாதி 3, சனி – அவிட்டம் 3, ராகு – அனுஷம் 2, கேது – கிருத்திகை 4.

**மேஷம் :** (அசுவினி, பரணி, கிருத்திகை 1 ஆம் பாதம் முடிய)

7 இல் குருவும், 11 இல் சனியும் உலவுவதால் உங்கள் எண்ணங்கள் எளிதில் நிறைவேறும். எதிர்ப்புகளின் கரம் வலுக்குறையும். பொருளாதார நிலையில் திருப்திகரமான சூழ்நிலையைக் காண்பீர்கள். வரவேண்டிய பணம் வந்துசேரும். செய்து வரும் தொழிலில் முன்னேற்றம் காணமுடியும். வேலையில்லாதவர்கள் தகுந்ததொரு வேலை வாய்ப்பைப் பெறுவார்கள். ஏற்கனவே வேலையில் இருப்பவர்கள் பதவி உயர்வு, இடமாற்றம், ஊதிய உயர்வு ஆகியவை கிடைக்கப் பெறுவார்கள். நல்லவர்களின் நேசம் காரணமாக முக்கியப் பணிகள் சிலவற்றை ஈடேற்றிக் கொள்வீர்கள். தெய்வ காரியங்கள் நிறைவேறும். பயணம் பயன்படும் என்றாலும் சிறு தொல்லையும் ஏற்படும். குடும்பத்தில் ஓரிரு பிரச்னைகள் ஏற்பட்டு விலகும்.

ராசிநாதன் 8 இல் அமர்ந்து, சூரியன், ராகு ஆகியோருடன் கூடியதால் உடல் ஆரோக்கியத்தில் கவனம் தேவைப்படும். வீண் அலைச்சலைத் தவிர்ப்பது நல்லது. தீயவர்களின் சகவாசம் கூடாது. உடன்பிறந்தவர்களிடமும், தந்தையிடமும் பக்குவமாக நடந்து கொள்வது அவசியமாகும். போக்குவரத்துச் சாதனங்கள், இயந்திரப்பணிகள், அரசுப் பணிகள் ஆகியவற்றில் ஈடுபாடு உள்ளவர்கள் விழிப்புடன் இருப்பது அவசியமாகும். 28 ஆம் தேதி முதல் கலைத்துறைகளைச் சேர்ந்தவர்கள் ஓரளவு வளர்ச்சி காண்பார்கள். டிசம்பர் 2 ஆம் தேதி முதல் வியாபாரிகளுக்கு முன்னேற்றம் தெரியவரும். ஆசிரியர்கள், மாணவர்கள், சட்ட வல்லுநர்கள், ஆன்மிகவாதிகள் ஆகியோருக்கெல்லாம் சிறப்பான நேரமிது. 11 ஆம் தேதி முதல் நற்காரியங்களில் ஈடுபடச் சந்தர்ப்பம் கூடிவரும். அயல்நாட்டுத் தொடர்பு ஆக்கம் தரும். நவம்பர் 18,20,24,25,26,29 டிசம்பர் 3,4,6,8,9,10,14,15 தேதிகள் சிறப்பானவை. வடகிழக்கு, மேற்குத் திசைகள் அனுகூலமானவை. துலா, கும்ப ராசிக்காரர்கள் உதவுவார்கள். 3,8 எண்கள் அதிர்ஷ்டமானவை.

**ரிஷபம் :** (கிருத்திகை 2 ஆம் பாதம் முதல், ரோகிணி, மிருகசீரிஷம் 2 ஆம் பாதம் முடிய)

குரு, செவ்வாய் ஆகியோரது பலம் அனுகூலமான நிலையில் இல்லாததால் நீங்கள் எதிலும் எச்சரிக்கையுடன் ஈடுபடுவது நல்லது. யாரிடத்திலும் வெளிப்படையாகப் பழகவேண்டாம். பொருளாதார நிலை ஏற்றம், இறக்கம் கொண்டதாகவே அமையும். செலவுகளைச் சமாளிக்கக் கடன்படவும் நேரலாம். பொறாமைக்காரர்களால் பிரச்னைகளுக்கு உள்ளாக நேரும். மனதில் குழப்பம் குடிகொள்ளும். மறதிக்கு ஆட்பட்டு மற்றையோரின் அதிருப்திக்கு ஆளாக நேரும். தீயவர்களின் தொடர்பை விட்டு விலகுவது நல்லது. பயணம் தவிர்ப்பது அவசியம். உடல்நலனில் கவனம் தேவைப்படும். அலைச்சல் அதிகரிக்கும். உஷ்ணாதிக்கத்தால் பாதிப்பு உண்டாகும். சினிமா, சங்கீதம் போன்ற கலைத்துறைகளைச் சேர்ந்தவர்கள் அகலக்கால் வைக்க வேண்டாம்.

கணவன், மனைவியரிடையே கருத்து வேறுபாடுகள் தோன்றும். கூட்டாகத் தொழில் செய்பவர்கள் பங்குதாரர்களிடம் பக்குவமாக நடந்து கொள்வது நல்லது. உத்தியோகஸ்தர்களுக்கும், இயந்திரப் பணியாளர்களுக்கும் முன்னேற்றம் தடைப்படும். அரசு விவகாரங்களில் அனுகூலமான போக்கைக் காண்பது அரிது. விரும்பத்தகாத இட மாற்றமோ, நிலைமாற்றமோகூட ஏற்படும். 10 இல் சனி உலவுவதால் அன்றாடப்பணிகள் சீராக நடந்து

| | | | |
|---|---|---|---|
| | | கேது | |
| சனி | கிரகநிலை | | |
| | | | |
| | சூ,செவ் ராகு | புத சுக், குரு | |

வரும். நூதனமான முயற்சிகளில் ஈடுபட இந்த நேரம் சிறப்புடையதாகாது. தொழிலாளர்கள், விவசாயிகள் சமுதாய நலப்பணியாளர்கள் ஆகியோர் அளவோடு வளர்ச்சி பெறுவார்கள். கடுமையாக உழைத்துப் பாடுபடுபவர்களுக்கு ஓரளவு முன்னேற்றம் உண்டாகும். சோர்வுக்கு இடம் தரலாகாது. குரு, செவ்வாய் ஆகியோருக்குப் பிரீதியான காரியங்களில் ஈடுபடுவது நல்லது. நவம்பர் 20,24,25,26,29, டிசம்பர் 2,3,4,6,8,9,10,11 தேதிகள் ஓரளவு நலம் தரும். வடக்கும், மேற்கும் அனுகூலமான திசைகளாகும். துலா, கும்ப ராசிக்காரர்கள் உதவுவார்கள். 5,8 எண்கள் நலம் தரும்.

## மிதுனம் : (மிருகசீரிஷம் 3 ஆம் பாதம் முதல், திருவாதிரை, புனர்பூசம் 3 ஆம் பாதம் முடிய)

குரு, செவ்வாய் ஆகியோரது அனுகூலமான சஞ்சாரம் காரணமாக உங்கள் அறிவாற்றலும், செயல்திறமையும் பளிச்சிடும். மனதில் நல்ல எண்ணங்கள் உருவாகும். அவை நிறைவேறவும் சந்தர்ப்பம் சாதகமாக அமையும். உங்களைக் காட்டிலும் வயதில் மூத்தவர்கள் உங்களுக்கு உதவ முன்வருவார்கள். செல்வநிலையில் வளர்ச்சி காண்பீர்கள். எதிர்பாராத திடீர்ப் பணவரவும் நிகழும். பொன், பொருட்களின் சேர்க்கை நிகழும். நிலபுலங்களால் ஆதாயத்திற்கு இடம் உண்டு. கலைத் துறைகளைச் சேர்ந்தவர்கள் சுபிட்சம் காண்பார்கள். மாதர்களது நலம் கூடும். சமுதாயநலப் பணியாளர்கள் வரவேற்புக் கூடப் பெறுவார்கள். இயந்திரப்பணிகள் லாபம் தரும். சட்டம், காவல், இராணுவம் போன்ற இனங்களைச் சார்ந்தவர்கள் முன்னணிக்கு உயருவார்கள்.

அரசு விவகாரங்கள் ஆக்கம் தரும். மருத்துவம், இரசாயனம், விஞ்ஞானம், உத்தியோகம் போன்ற இனங்களைச் சேர்ந்தவர்கள் செழிப்பான பாதையைக் காண்பார்கள். மக்கட்பேறு அல்லது மக்களால் பாக்கியம் பெறச் சந்தர்ப்பம் கூடிவரும். கணவன், மனைவியர் உறவு நிலை திருப்தி தரும். எதிரிகள் ஓடி ஒளிவார்கள். வழக்கு, வியாஜ்ஜியங்களில் வெற்றி பெறுவீர்கள். கடன் தொந்தரவு குறையும். நூதனமானவர்களின் சேர்க்கையால் நலம் பெறுவீர்கள். தெய்விக மார்க்கத்தில் ஈடுபாடு கூடும். அதனால் மனதில் அமைதியும் பிறக்கும். நிறுவன, நிர்வாகத்துறைகளைச் சேர்ந்தவர்கள் உற்சாகம் கூடப் பெறுவார்கள். போட்டிப் பந்தயங்களில் வெற்றி கிட்டும். ஆசிரியர்கள், மாணவர்கள் ஆகியோருக்கெல்லாம் முன்னேற்றமான சூழ்நிலை உருவாகும். ஸ்பெகுலேஷன், கொடுக்கல் – வாங்கல் இனங்கள் ஆதாயம் தரும். நவம்பர் 16,24,25,26,29 டிசம்பர் 2,3,4,6,8,9,10,11,14,15 தேதிகள் சிறப்பானவை. வடகிழக்கு, தென்கிழக்குத் திசைகள் அனுகூலமானவை. துலா ராசிக்காரர்கள் உதவுவார்கள். 1,3,6,9 எண்கள் நலம் தரும்.

● 6 செகண்டுகளுக்கு ஒருமுறை மனிதன் கண்சிமிட்டுகிறான். ●

## கடகம் : (புனர்பூசம் 4 ஆம் பாதம் முதல், பூசம், ஆயில்யம் முடிய)

புத, சுக்கிர பலம் காரணமாக உங்கள் தோற்றப் பொலிவும் அறிவாற்றலும் பிரகாசிக்கும். மாதர்கள் நலம் புரிய முன்வருவார்கள். நண்பர்கள், உற்றார், உறவினர்களது சேர்க்கையால் மனதில் மகிழ்ச்சி பெருகும். கேளிக்கை, உல்லாசங்களில் ஈடுபாடு கூடப் பெறுவீர்கள். சிறு பயணம் ஒன்றை மேற்கொள்ளவும் சந்தர்ப்பம் கூடிவரும். வியாபாரிகள் வெளிச்சம் காண்பார்கள். கணிதம், எழுத்து, விஞ்ஞானம் போன்ற துறைகளில் ஈடுபாடு உள்ளவர்கள் முன்னணிக்கு உயருவார்கள். நிலபுலங்களின் சேர்க்கையோ, அல்லது அவற்றால் ஆதாயமோ பெறச் சந்தர்ப்பம் கனிந்துவரும். மாணவர்கள் வெற்றிநடை போடுவார்கள். சினிமா, சங்கீதம், நாடகம், நாட்டியம் போன்ற துறைகளைச் சேர்ந்தவர்கள் சுபிட்சம் காண்பார்கள். செய்துவரும் தொழிலில் சீரான வளர்ச்சியைக் காணமுடியும்.

பொருள்வரவு திருப்திதரும் என்றாலும் அதிகம் பாடுபடவேண்டியிருக்கும். ஸ்பெகுலேஷன், கொடுக்கல் – வாங்கல் இனங்கள் அளவோடு லாபம் தரும். புதிய ஆடை, அணிமணிகள், அலங்காரப் பொருட்கள் ஆகியவற்றின் சேர்க்கை நிகழும். அலைச்சல் சற்று கூடும். பக்தி மார்க்கத்திலும் ஞானமார்க்கத்திலும் ஈடுபாடு உள்ளவர்கள் மனத் தெளிவு பெறுவார்கள். மக்கள்நலம் ஒருநாள்போல் மறுநாளிராது. கணவன், மனைவி உறவு நிலை சுக்கிர பலம் காரணமாகச் சீராக இருந்துவரும். டிசம்பர் 11 ஆம் தேதி முதல் செவ்வாய் பலம் பெறுவதால் சங்கடங்கள் என்பவை விலக ஆரம்பிக்கும். பகைவர்கள் உங்களைவிட்டு அகலுவார்கள். எடுத்த காரியங்களில் வெற்றிபெறச் சந்தர்ப்பம் கனிந்துவரும். பொறியியல் துறை ஆக்கம் தரும். குரு, சனி ஆகியோருக்குப் பிரீதியான காரியங்களில் ஈடுபட்டு வருவது நல்லது. நவம்பர் 16,18,24,25,26,29 டிசம்பர் 2,4,6,8,9,10,11,14,15 தேதிகள் சிறப்பானவை. வடக்கும், தென்கிழக்கும் அனுகூலமான திசைகளாகும். 5,6,7 எண்கள் அதிர்ஷ்டமானவை. துலா, ரிஷப ராசிக்காரர்கள் உதவுவார்கள்.

## சிம்மம் : (மகம், பூரம், உத்திரம் 1 ஆம் பாதம் முடிய)

முக்கியமான கிரகங்கள் அனுகூலமான நிலையில் சஞ்சரிக்காததால் உங்கள் எண்ணங்கள் ஈடேறத் தடைகள் உண்டாகும். அலைச்சல் அதிகரிக்கும். உடல்நலம் சீராக இராது. மனதில் கிலேசம் ஏற்படும். உற்றார், உறவினர்கள், நண்பர்களால் அதிகம் அனுகூலத்தை எதிர்பார்க்க இயலாது. நிலபுலங்கள் சம்பந்தப்பட்ட விஷயங்களில் விழிப்புடன் ஈடுபடுவது நல்லது. மாணவர்கள் படிப்பில் முழுமையான அக்கறை செலுத்த வேண்டும். பிறமொழி, மதக்காரர்களிடம் அதிகம் நெருக்கம் வேண்டாம். கூட்டுத் தொழில் கவனிக்கப்பட வேண்டிவரும். பொருளாதார நிலை சீராக

இராது. செலவுகளைச் சமாளிக்கக் கடன்பட நேர லாம். சிக்கன நடவடிக்கை அவசியம் தேவை. ஸ்பெகுலேஷன், கொடுக்கல் – வாங்கல் இனங்களில் ஈடுபடவேண்டாம். வியாபாரிகள் அகலக்கால் வைக்கலாகாது.

அலுவலகங்களில் பணிபுரிபவர்கள், மருத்து வர்கள், இரசாயனத் துறைகளைச் சேர்ந்தவர்கள், ஆசிரியர்கள், ஆன்மிகவாதிகள் ஆகியோருக்கெல் லாம் சாதாரணமான சூழ்நிலையே நிலவிவரும். சுக்கிர பலம் காரணமாக கலைத்துறைகளைச் சேர்ந்தவர்கள் முன்னணிக்கு உயருவார்கள். கடிதப் போக்குவரத்து நல்ல தகவலைக் கொண்டு வரும். எழுத்தாளர்களும், பத்திரிகையாளர்களும் தங்கள் நிலை உயரப்பெறுவார்கள். தெய்வப் பணிகளில் தொடர்ந்து ஈடுபடுவதன் மூலம் மனத்தெளிவு பெறமுடியும். தீயவர்களின் நட்பு கூடாது. உங்களைக் காட்டிலும் வயதில் மூத்தவர்களின் ஆலோசனைகளை மதித்து ஏற்றுக்கொள்வது நல்லது. அதன்படி நடப்பதன் மூலம் நலம் விளை யும். நூதன முயற்சிகளில் ஈடுபடவேண்டாம். பயணத்தின்போது பாதுகாப்புத் தேவை. நவம்பர் 16,18,20,26,29 டிசம்பர் 2,3,4,6,8,9,10,11,14,15 தேதிகள் ஓரளவு சிறப்பானவை. தென்கிழக்குத் திசை அனு கூலமானது. துலா ராசிக்காரர்கள் உதவுவார்கள். 8 ஆம் எண் அதிர்ஷ்டமானது.

## கன்னி : (உத்திரம் 2 ஆம் பாதம் முதல், ஹஸ்தம், சித்திரை 2 ஆம் பாதம் முடிய)

பெரும்பாலான கிரகங்கள் அனுகூலமான நிலை யில் சஞ்சரிப்பதால் உங்கள் செல்வாக்கும், மதிப்பும் உயரும். வாழ்க்கை வசதிகள் கூடும். குடும்பத்தில் நற்காரியங்கள் நிகழும். பொருளாதார நிலையில் வளர்ச்சி காண்பீர்கள். பொன், பொருட் களின் சேர்க்கை நிகழும். வரவேண்டிய பணம் வசூலாகும். வியாபாரிகள், உத்தியோகஸ்தர்கள், தொழிலாளர்கள் ஆகியோருக்கெல்லாம் செழிப்பான சூழ்நிலை நிலவிவரும். வேலைதேடி அலை பவர்கள் தகுந்ததொரு வேலைவாய்ப்பைப் பெறு வார்கள். ஏற்கெனவே வேலையில் இருப்பவர்கள் பதவி உயர்வு, இடமாற்றம், ஊதிய உயர்வு ஆகிய வற்றைப் பெறுவார்கள். திருமணம் ஆகாதவர் களுக்குத் திருமணம் ஆகும். திருமணம் ஆனவர்கள் இல்வாழ்வில் இன்பம் காண்பார்கள்.

மகப்பேறு அல்லது மக்களால் பாக்கியம் பெறச் சந்தர்ப்பம் கனிந்துவரும். உறவினர்கள், நண் பர்கள் ஆகியோரது தொடர்பு ஆக்கம் தரும். தெய்வப்பணிகளிலும், தருமப்பணிகளிலும் ஈடுபாடு கூடப் பெறுவீர்கள். நல்லோர் தொடர்பால் நலம் பல பெறுவீர்கள். திடீர் அதிர்ஷ்ட வாய்ப்புகளுக்கும் இடமுண்டு. அரசு விவகாரங்கள் ஆக்கம் தரும். எதிரிகள் ஓடி ஒளிவார்கள். எடுத்த காரியங்கள் இனிது நிறைவேறும். போட்டிப் பந்தயங்களிலும், வழக்கு, வியாஜ்ஜியங்களிலும் வெற்றி பெற வாய்ப் புண்டு. பொறியியல், சட்டம், காவல், இராணுவம் போன்ற இனங்களில் ஈடுபாடு உள்ளவர்கள் வெற்றி நடை போடுவார்கள். கடிதப் போக்குவரத்து நற்செய்தி கொண்டுவரும். டிசம்பர் மாதம் 2 ஆம் தேதி முதல் ராசிநாதன் 3 ஆமிடம் மாறுவதால் கடுமையாக உழைக்கவேண்டிவரும். 11 ஆம் தேதி முதல் அலைச்சல் சற்று அதிகரிக்கும். நண்பர்கள், உற்றார், உறவினர்களால் ஓரிரு பிரச்னைகள் சூழும். என்றாலும் அவற்றைச் சமாளித்துவிடு வீர்கள். நவம்பர் 16,18,20,24,29 டிசம்பர் 2,3,4,6,8, 9,10,11,14,15 தேதிகள் சிறப்பானவை. வடகிழக்கு, மேற்குத் திசைகள் அனுகூலமானவை. துலா, விருச்சிக, கும்ப ராசிக்காரர்கள் உதவுவார்கள். 1,3,4,5,6,8 எண்கள் அதிர்ஷ்டமானவை.

## துலாம் : (சித்திரை 3 ஆம் பாதம் முதல், சுவாதி, விசாகம் 3 ஆம் பாதம் முடிய)

சுபக்கிரகங்கள் மூவர் ஒன்றுகூடி உங்கள் ஜன்ம ராசியில் உலவுவதால் நல்ல எண்ணங்கள் மனதில் உதயமாகும். அந்தஸ்தும், கௌரவமும், மதிப்பும் உயரும். மற்றையோர் புகழத்தக்க வகையில் உங்கள் செயல்கள் விளங்கும். தோற்றப்பொலிவு பிரகாசிக்கும். உடல் ஆரோக்கியம் சீராக இருந்து வரும். கணவன், மனைவி களிப்புறவு கூடும். கூட்டாகத் தொழில் செய்பவர்கள் ஏற்றம் பெறு வார்கள். புனிதமான பணிகளில் ஈடுபாடு கூடும். மக்கள்நலம் சீராக இருந்துவரும். வியாபாரிகள் தங்கள் திறமைக்குரிய வளர்ச்சியைக் காண்பார்கள். சினிமா, நாடகம், நாட்டியம், சங்கீதம் போன்ற கலைத்துறைகளைச் சேர்ந்தவர்கள் உற்சாகமாக நடைபோடுவார்கள். பெண்டிரால் ஆடவர்களுக்கு அனுகூலம் உண்டாகும்.

2 இல் பாபக்கிரகங்கள் கூடியிருப்பதால் பேச்சில் நிதானம் அவசியம் தேவை. கோபத்தைக் கைவிடுவது நல்லது. குடும்பத்தாரிடமும் மற்றை யோரிடமும் பக்குவமாகப் பழகுவது அவசியமாகும். உணவு விஷயத்தில் எச்சரிக்கையுடன் இருப்பது நல்லது. பயணத்தின் போதும் இயந்திரங்களில் பணியாற்றும் போதும் பாதுகாப்பு அவசியமாகும். எக்காரியத்திலும் பதற்றம் அடியோடு கூடாது. பிறமொழி, மதக்காரர்களிடம் நெருக்கம் வேண்டாம். விஷ ஜந்துக்களாலும், தீ, ஆயுதம் போன்றவற்றாலும் ஆபத்துக்கு இடமுண்டு என்பதால் விழிப்புடன் இருப்பது நல்லது. டிசம்பர் 11 ஆம் தேதி முதல் செவ்வாய் பலம் பெறுவதால் வாழ்க்கையில் நல்ல திருப்பம் உண்டாகும். எதிர்ப்புகள் என்பவை குறைவடையும். முக்கியமான ஓரிரு காரியங்கள் நிறைவேறும். நவம்பர் 16,18,20,24,25,26 டிசம்பர் 2,3,4,6,8,9,10,11,14,15 தேதிகள் சிறப்பானவை. தென்கிழக்கு, வடக்குத் திசைகள் அனுகூலமானவை. துலா, மேஷ ராசிக்காரர்கள் உதவுவார்கள். 5,6 எண்கள் அதிர்ஷ்டமானவை. குரு, சனி ஆகியோ ருக்குப் பிரீதியான காரியங்களில் ஈடுபடுவது நல்லது.

## விருச்சிகம் : (விசாகம் 4 ஆம் பாதம் முதல், அனுஷம், கேட்டை முடிய)

குரு, சனி, செவ்வாய் ஆகியோரது சஞ்சாரம் திருப்திகரமாக இல்லாததால் உங்கள் அபி

லாஷைகள் ஈடேறத் தடைகள் உண்டாகும். அலைச்சல் அதிகரிக்கும். மனதில் நிம்மதி இராது. எடுத்த காரியங்களை நிறைவேற்ற அரும்பாடு படவேண்டிவரும். உடல் நலனில் கவனம் தேவை. நூதனமானவர்களிடம் விழிப்புடன் பழகுவது நல்லது. பயணத்தின்போது பாதுகாப்புத் தேவை. தீ, ஆயுதங்கள் ஆகியவற்றின் பக்கம் நெருங்கும் போது விழிப்புடன் இருப்பது அவசியமாகும். பொருளாதாரநிலை ஏற்றம், இறக்கம் கொண்ட தாகவே காணப்படும். திடீர்ப் பொருள் செலவு களுக்கும் இடமுண்டு. அவை சுபச் செலவுகளாக இருக்குமாகையால் அந்த வகையில் திருப்தி கொள் வீர்கள். தொழிலாளர்கள், விவசாயிகள், உத்தியோ கஸ்தர்கள், வியாபாரிகள் ஆகியோர் அகலக்கால் வைக்கலாகாது.

புதிய இனங்களில் முதலீடு செய்ய இந்த நேரம் சிறப்புடையதாகாது. மாமூலான காரியங்களில்கூட அதிகம் அக்கறை தேவைப்படும். மாணவர்கள் படிப்பில் முழுமையான அக்கறை செலுத்தினால் முன்னேற்றம் காணமுடியும். நிலபுலங்கள் சம் பந்தப்பட்ட விஷயங்களில் விழிப்புடன் ஈடுபடுவது நல்லது. உஷ்ணாதிக்கத்தால் பாதிப்பு உண்டாகும். பெற்றோர் நலம், மக்கள் நலம், சகோதர நலம் ஆகியவற்றில் கவனம் தேவைப்படும். சினிமா, நாடகம், நாட்டியம், சங்கீதம் போன்ற கலைத் துறைகளைச் சேர்ந்தவர்கள் சுக்கிர பலம் காரண மாக வளர்ச்சி காண்பார்கள். டிசம்பர் 2 ஆம் தேதி முதல் வியாபாரிகள் வெளிச்சம் காண்பார்கள். 11 ஆம் தேதி முதல் செவ்வாய் 2 ஆமிடம் மாறுவதால் குடும்பத்தில் சலசலப்புகள் உண்டாகும். பேச்சில் நிதானத்தைக் கடைப்பிடிப்பது நல்லது. குரு, சனி, செவ்வாய் ஆகியோருக்குப் பிரீதி பரிகாரங்கள் செய்வது அவசியம். நவம்பர் 16,18,20,24,25,26,29 டிசம்பர் 3,4,6,8,9,11,14,15 தேதிகள் சிறப்பானவை. தென்கிழக்குத் திசை நலம் தரும். மேஷ, துலா ராசிக் காரர்கள் உதவுவார்கள். 6,9 எண்கள் அதிர்ஷ் டமானவை.

## தனுசு : (மூலம், பூராடம், உத்திராடம் 1 ஆம் பாதம் முடிய)

3,11 ஆம் இடங்களில் உள்ள கிரகங்கள் உங்கள் பராக்கிரமத்தை வெளிப்படுத்துவார்கள். அறி வாற்றல் பளிச்சென்று பிரகாசிக்கும். நல்லவர்களும் வல்லவர்களும் உங்களுக்குப் பக்கபலமாக விளங்கு வார்கள். உற்றார், உறவினர்கள், நண்பர்களால் நலம் பெறுவீர்கள். தொழிலாளர்களுக்கும், விவ சாயிகளுக்கும் செழிப்பான பாதை புலப்படும். எதிரிகள் விலகிப் போவார்கள். வியாபாரம் அபிவிருத்தி அடையும். வேலையில்லாதவர்களுக்கு வேலைவாய்ப்புக் கிட்டும். அலுவலகங்களில் பணி புரிபவர்கள் பதவி உயர்வு, இடமாற்றம், ஊதிய உயர்வு ஆகியவற்றைப் பெறுவார்கள். நிலம், மனை, வீடு, வாகனம் போன்ற ஸ்திரச்சொத்து களால் அனுகூலம் உண்டாகும். மாணவர்கள் வெற்றிநடை போடுவார்கள். ஆசிரியர்கள், பேராசிரி யர்கள், மேடைப்பிரசங்கிகள், ஆன்மிகவாதிகள், இரசாயனத் துறைகளைச் சேர்ந்தவர்கள், மருத்து வர்கள் ஆகியோருக்கெல்லாம் முன்னேற்றமான சூழ்நிலை நிலவிவரும்.

சினிமா, நாடகம், நாட்டியம், சங்கீதம் போன்ற கலைத்துறைகளைச் சேர்ந்தவர்கள் வெற்றிநடை போடுவார்கள். புதிய ஒப்பந்தங்களில் கையெழுத் திடவும் சந்தர்ப்பம் கூடிவரும். பொருள்வரவு திருப்தி தரும். எதிர்பாராத திடீர்ப் பொருள் வரவுக்கும் இடமுண்டு. ஸ்பெகுலேஷன், கொடுக்கல் - வாங்கல் இனங்கள் லாபம் தரும். மாதர்கள், சமுதாய நலப் பணியாளர்கள் ஆகியோர் தங்கள் நிலை உயரப் பெறுவார்கள். மக்களாலும், வாழ்க்கைத் துணைவராலும் நலம் பெறுவீர்கள். மதிப்பும், அந்தஸ்தும் உயரும். விரயஸ்தானத்தில் கூடியுள்ள கிரகங்கள் எதிர்பாராத செலவுகளை ஏற்படுத்துவார்கள். தந்தை நலனிலும், உடன்பிறந்த வர்கள் நலனிலும் கவனம் தேவைப்படும். பயணத் தின்போது பாதுகாப்பை மேற்கொள்வது நல்லது. நவம்பர் 16,18,20,24,25,26,29 டிசம்பர் 6,8,9,10,11,14,15 தேதிகள் சிறப்பானவை. வடகிழக்கு, தென்கிழக்கு, மேற்குத் திசைகள் அனுகூலமானவை. கும்ப, துலா ராசிக்காரர்கள் உதவுவார்கள். 3,5,6,8 எண்கள் அதிர்ஷ்டமானவை.

## மகரம் : (உத்திராடம் 2 ஆம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2 ஆம் பாதம் முடிய)

உங்கள் ராசிக்கு 10 உள்ள புதனும், 11 இல் உள்ள சூரியன், செவ்வாய், ராகு ஆகியோரும் அனுகூல மான நிலையில் சஞ்சரிப்பதால் அறிவாற்றலும், செயல் திறமையும் கூடப் பெறுவீர்கள். பொருள் சம்பாதிப்பதில் ஆர்வம் கூடும். வியாபாரிகள் புதிய திட்டங்களைத் தீட்டி அவற்றைச் செயல்படுத்து வார்கள். கணிதம், விஞ்ஞானம், எழுத்து போன்ற துறைகளைச் சேர்ந்தவர்களுக்குச் செழிப்பான பாதை புலப்படும். அரசு விவகாரங்கள் ஆக்கம் தரும். பொறியியல், சட்டம், காவல், இராணுவம் போன்ற துறைகளைச் சேர்ந்தவர்கள் முன்னணிக்கு உயருவார்கள். நிர்வாகத்திறமை பளிச்சிடும். பிற மொழி, மதங்களைச் சார்ந்தவர்கள் உதவ முன்வரு வார்கள். உற்றார், உறவினர்கள், நண்பர்கள் ஆகியோரால் நலம் பெறுவீர்கள்.

மாணவர்களது நிலை உயரும். நிலம், மனை, வீடு, வாகனம் போன்ற ஸ்திரச் சொத்துகளின் சேர்க்கையோ அல்லது அவற்றால் ஆதாயமோ பெற வாய்ப்புண்டாகும். ஏற்றுமதி, இறக்குமதி இனங்கள் லாபம் தரும். 28 ஆம் தேதி முதல் பொருள்வரவு அதிகரிக்கும். புதிய ஆடை, அணி மணிகளின் சேர்க்கையும் நிகழும். கலைத்துறை களைச் சேர்ந்தவர்கள் வெளிச்சமான பாதையைக் காண்பார்கள். மக்கள் நலம் சீர்பெறும். ஒன்றுக்கு மேற்பட்ட இனங்களில் ஈடுபட்டு, வருவாய் கிடைக்கப் பெறுவீர்கள். அரசியல்வாதிகள் தங்கள் கொள்கைகளுக்கு வரவேற்புப் பெறுவார்கள். 11 ஆம் தேதி முதல் செவ்வாய் விரயம் புகுவதால் எதிலும் விழிப்புடன் ஈடுபடுவது நல்லது. பதட்டம் அடி யோடு கூடாது. வீண் சண்டை, சச்சரவுகளில் பிர

★ குடிபோதையில் கார் விட்டுக் கொண்டிருந்ததாக ஒருவர் மீது குற்றம் சுமத்தப் பட்டது. அவர்மீது குற்றம் சாட்டிய போலீஸ் அதிகாரி, கார் விட்டுக் கொண்டிருந்தவர், தம் ஊர், தம் பெயர், தாம் போய்விட்டு வந்தப் பொதுக்கூட்டம், அங்கு நடந்த பேச்சுகள், தான் சென்று கொண் டிருந்த இடம் எல்லாவற்றையும் சரியாகச் சொன்னதாக ஒப்புக் கொண்டார்.

கார் விட்டவர் பக்கமாக ஆஜ ரான வக்கீல், பேசாமல் இருந் திருந்தால், அவருடைய கட்சிக் காரர் குடிபோதையில் இருக்க வில்லை என்று தான் நீதிபதி தீர்ப்புக் கூறியிருப்பார். ஆனால் அவர் பேசாமல் இருக்காமல் போலீஸ் அதிகாரியைப் பார்த்து, "அப்படி சரியாகச் சொல்லியும், அவர் குடிபோதையில் இருந்த தாகச் சொல்கிறாரே, எப்படி?" என்று கேட்டார்.

அதற்குப் போலீஸ்காரர், "இத் தனை விஷயங்களையும் அவர் என் கழுத்தைக் கட்டிக் கொண்டு, நடுவே, நடுவே, என்னைக் 'கண்ணே!' என்று அழைத்துக் கொண்டு சொன்னார்" என்றார்.

—நாடோடி

வேசிக்கலாகாது. குருப் பிரீதியான காரியங்களில் ஈடுபடுவது நல்லது. நவம்பர் 16,18,20,24,25,26,29 டிசம்பர் 2,3,4,8,9,10,11,14,15 தேதிகள் சிறப்பானவை. தென்மேற்கு, வடக்குத் திசைகள் நலம் தரும். துலா, விருச்சிக ராசிக்காரர்கள் உதவுவார்கள். 1,4,5,9 எண்கள் அதிர்ஷ்டமானவை.

## கும்பம் : (அவிட்டம் 3 ஆம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3 ஆம் பாதம் முடிய)

குரு, செவ்வாய் ஆகியோரது பலம் காரணமாக உங்கள் எண்ணங்கள் எளிதில் நிறைவேறும். பிரச்னைகள் குறைவடையும். எடுத்த காரியங் களைத் திறம்பட ஆற்றி, அவற்றில் வெற்றியும் பெறுவீர்கள். நல்லவர்களது நேசம் கிட்டும். அதனால் பயனும் உண்டாகும். தெய்வ தரிசனம், சாது தரிசனம் ஆகியவை கிடைக்கப் பெறுவீர்கள். வெளிநாட்டுப் பயணத்திட்டம் நிறைவேறும். பிற மொழி, மதக்காரர்களால் அனுகூலம் பெறுவீர்கள். புனித நதிகளில் நீராடும் பாக்கியம் கிட்டும். சினிமா, சங்கீதம் போன்ற கலைத்துறைகளைச் சேர்ந்தவர்கள் செழிப்பு பெறுவார்கள். மாதர்களது நலம் கூடும். ஆசிரியர்கள், பேராசிரியர்கள், மேடைப்பிரசங்கிகள், ஆன்மிகவாதிகள் ஆகியோர் தங்கள் நிலை உயரப் பெறுவார்கள். அலுவலகங் களில் பணிபுரிபவர்களுக்கு உற்சாகமான சூழ்நிலை உருவாகும்.

மருத்துவர்கள் நற்பெயர் பெறுவார்கள். மக்கட் பேறு அல்லது மக்களால் பாக்கியம் உண்டாகும். கணவன், மனைவி உறவுநிலை திருப்திகரமாக இருந்துவரும். ஆடவர்கள் பெண்டிரால் அனுகூலம் பெறுவார்கள். புதிய ஆடை, அணிமணிகள், அலங் காரப்பொருட்கள் ஆகியவற்றின் சேர்க்கை நிகழும். குடும்பத்தில் திருமணம் போன்ற சுபகாரியங்கள் நிகழும். அரசுப்பணிகள் ஆக்கம் தரும். எதிரிகள் விலகிப் போவார்கள். வழக்கு வியாஜ்ஜியங்களில் வெற்றி காண்பீர்கள். மாணவர்களது நிலைமையில் அபிவிருத்தி தெரியவரும். பெற்றோரால் நலம் பெறுவீர்கள். புதியத் துறைகளில் பிரவேசிக்க இந்த நேரம் சிறப்புடையதாக அமையும். பொருள் வரவு திருப்தி தரும். எதிர்பாராத திடீர் அதிர்ஷ்ட வாய்ப்புகளும் ஏற்படும். ஜன்மத்தில் சனி உலவுவ தால் அதிகம் உழைக்கவேண்டிவரும். உழைப்பு வீண் போகாது. நவம்பர் 16,18,20,24,25,26,29 டிசம்பர் 2,3,4,6,10,11,14,15 தேதிகள் சிறப்பானவை. வடகிழக்கு, தெற்குத் திசைகள் அனுகூலமானவை. துலா, விருச்சிக ராசிக்காரர்கள் உதவுவார்கள். 1,3,4,5,6,9 எண்கள் அதிர்ஷ்டமானவை.

## மீனம் : (பூரட்டாதி 4 ஆம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)

முக்கியமான கிரகங்கள் அனுகூலமான நிலையில் சஞ்சரிக்காததால் ஓரிரு இடர்ப்பாடுகள் ஏற்படும். பொருள்வரவைக் காட்டிலும் செலவுகள் பெருகும். தந்தை நலம் கவனிக்கப்படவேண்டிவரும். மக்க ளால் அனுகூலமிராது. உடன் பணிபுரிபவர்களால் ஓரிரு பிரச்னைகள் ஏற்படும். பக்குவமாகச் சமா ளிப்பது நல்லது. உத்தியோகஸ்தர்கள், தொழி லாளர்கள் ஆகியோர் தங்கள் பொறுப்புகளைச் சரிவர ஆற்றிவந்தால் சோதனைகளுக்கு ஆட்படாமல் மீளலாம். தொலைதூரப் பயணத்தால் அனுகூல மிராது. திடீர் அதிர்ஷ்ட வாய்ப்புகளை எண்ணிக் கைப்பொருளை வீணாக்கவேண்டாம். ஸ்பெகு லேஷன், கொடுக்கல் - வாங்கல் இனங்களில் விழிப் புடன் ஈடுபடுவது நல்லது. ஆசிரியர்கள், பேராசிரி யர்கள், மருத்துவர்கள், ஆன்மிகவாதிகள், விஞ் ஞானிகள் ஆகியோர் வளர்ச்சி காண அரும்பாடு படவேண்டிவரும்.

குடும்பநலம் கவனிப்பின் பேரில் சீராக இருந்து வரும். நெருங்கிய நண்பர்கள் தக்க சமயத்தில் முன்வந்து உதவுவார்கள். உடன்பிறந்தவர்களால் ஓரிரு நன்மைகள் உண்டாகும். பக்தி மார்க்கத்திலும், ஞானமார்க்கத்திலும் ஈடுபாடு உள்ளவர்கள் மனத் தெளிவு பெறுவார்கள். கணவன், மனைவியிடையே சலசலப்புகள் குறையும். கணிதம், எழுத்து, வியா பாரம் போன்ற துறைகளைச் சேர்ந்தவர்கள் அள வோடு வளர்ச்சி காண்பார்கள். சினிமா, சங்கீதம் போன்ற கலைத்துறைகளைச் சேர்ந்தவர்கள் சுபிட்சம் காண்பார்கள். 11 ஆம் தேதி முதல் செவ்வாய் பலம் கூடுவதால் உங்கள் பராக்கிரமம் வெளிப்படும். எதிர்ப்புகள் என்பவை குறையும். ஓரிரு எண்ணங்கள் இனிதாக நிறைவேறும். நற்பணிகளில் ஈடுபடச் சந்தர்ப்பம் சாதகமாக அமையும். செய்துவரும் தொழிலில் வளர்ச்சி காண முடியும். குரு, சனிப் பிரீதியான காரியங்களில் ஈடுபடுவது நல்லது. நவம்பர் 16,18,20,24,25,26,29 டிசம்பர் 2,3,4,6,8,14,15 தேதிகள் சிறப்பானவை. தென்கிழக்கு, வடமேற்குத் திசைகள் அனுகூல மானவை. ரிஷப, விருச்சிக ராசிக்காரர்கள் உதவு வார்கள். 5,7 எண்கள் அதிர்ஷ்டமானவை.

சென்னை - 2இல் உள்ள ஆர்.ஜே. பிராசஸ் ஆஃப்செட் அச்சகத்தில் அச்சிட்டவர் : ஆர். ஜனார்த்தனன், ஸ்ரீராம் டிரஸ்ட், சென்னை - 600 001 சார்பில் வெளியிட்டவர் : ஏ.வி.எஸ். ராஜா. ஆசிரியர் - கலைமாமணி விக்கிரமன், நிர்வாக அலுவலகம், 145, லிங்கச் செட்டி தெரு, த.பெ.எண் : 5043, சென்னை - 600 001 தொலைபேசி : 5228545, 510535. ஆண்டுச் சந்தா ரூ. 60.